

# ரமண கீதம்

[ஸ்ரீ சாது ஓம் இயற்றியது]

ஸ்ரீ ரமணாச்ரமம் - திருவண்ணாமலை

# ஸ்ரீ
# ரமண கீதம்

இயற்றியவர்

ஸ்ரீ சாது ஓம்

பகவான் ஸ்ரீ ரமண மஹர்ஷிகளது

அருணை விஜய

# நூற்றாண்டு மலர்

பதிப்பாளர்

வே.சு. ரமணன்

தலைவர், நிர்வாகக்குழு,

ஸ்ரீ ரமணாச்ரமம்

திருவண்ணாமலை - 606 603

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணசலரமணய

# ஸ்ரீ ரமண கீதம்

உள்ளுறை

## III. சந்தப் பாக்கள்

## IV. கீர்த்தனங்கள்

பக்க எண்



## V. மெல்லிசைப் பாக்கள்



## VI. பஜனைப் பாக்கள்

## VII.தனிப் பாக்கள்

ஓம்

நமோ பகவதே ஸ்ரீ அருணாசல ரமணாய

## முன்னுரை

நினைக்க முக்தி யருள்வதால் முக்தித் தலங்களுள் அதி மர்மமான சிவஸ்தல மென்றும், பூமியின் இதயமென்றும் நந்திகேசுவரரது வாக்காற் புகழப்பெற்று விளங்கும் அருணாசலம் என்னும் ஞானாக்கினி மலையின் தென்சாரலில், சாக்ஷாத் ஸ்ரீ தக்ஷிணா மூர்த்தி சொரூபமாய் எழுந்தருளிய, உலக மகா குருவாகிய ஸ்ரீரமண பகவானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு ஸ்ரீசாதுஓம் ஸ்வாமிகளாற் பாடப்பட்ட குரு ஸ்துதிகளே ஸ்ரீரமண கீதம் என்னும் இந்த இசைநூலாகும். இந் நூலாசிரியர் தம் இளம்பிராயத்திலேயே ஸ்ரீரமண பிரானைத் தரிசித்து வணங்கித் தமது சற்குருவாகக் கொண்டு, தம் குருபக்திப் பிரவாக வேகத்தை அரிய இனிய செந்தமிழ்க் கவிகளாகப் பாடி வந்தவர். ஸ்ரீ ரமணகுருவைத் தாம் முதன் முதலில் தரிசிக்க வந்தபோது பாடிக் கொணர்ந்த 'குயிலொடு கூறல்' என்ற பாடலையும், பிறகு 1950-ஆம் ஆண்டில் தம் குருநாதனின் திருமேனி மறைவால் ஏற்பட்ட பிரிவாற்றாமையால் உள்ளம் விம்மி வெதும்பிக் கண்ணீர் வடித்துப் பாடிய 'அண்ணாமலை ரமணாண்டி' என்ற சிந்துப் பாவையும் படிப்போர் இந் நூலாசிரியரின் ரமண பக்தியை நன்குணர முடியும்.

முற்றவத்தால் தமது பதினான்காவது வயதிலேயே தமிழ்க் கவியூற்றுக் கண்திறக்கப் பெற்றவராயிருந்த ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீரமண குரு தரிசனங் கிடைத்த பிறகு ஸ்ரீபகவானாலேயே சில இலக்கண நுட்பங்களும் போதிக்கப் பெற்ற பாக்கியத்தால் அற்புதமான, எண்ணற்ற தமிழ்ப் பாவினங்களில் ஸ்ரீபகவானைத் துதிக்க வல்லவ ரானார். ஸ்ரீபகவானைத் தரிசித்த அன்றே, மிகச் சிறந்த ரமண பக்தருள் தலையாயவரும், தமிழ்ப் பெரும் புலவரும், அருட்கவியரசும், ஆன்ம ஞானியுமான ஸ்ரீ முருகனாருடன் ஸ்ரீ பகவானாலேயே நட்பிற் பிணைக்கப்பட்டு அவருடன் இலக்கியவுறவு கொண்டு இந் நூலாசிரியர் அளவளாவி வந்த காரணத்தால், இவரது செய்யுள் நடை மெருகேறிய பொன்னாய் மிளிர்ந்தது. இவ்வாறு ஸ்ரீஸ்வாமிகள் அவனருளாலேயே அவன்றாள் வணங்கி, சற்குருவைப் பாடும் பணியே பணியாய்ப் பெற்றுப் பிறவிப்

பயனுற்றுய்ந்தார். இவர் பாடிய 'அருணாசல வெண்பா' என்ற நூலின் 52-வது பாடலில்,

''தானேசொல் லிக்கொடுத்துத் தன்பெயரைச் சொன்மதலை
யானே மகிழன்னை யைப்போலத்-தானேயென்
வாய்ப்பாட செஞ்சொல் வழங்கி வலிந்தூட்டுந்
தாய்ப்பா லருணா சலம்!''

என்று வரும் வெண்பாவை நோக்கு மிடத்து ஸ்ரீரமண திருவருளே இவரைத் தனது கருவியாகக் கொண்டு, பாட்டிசைக்கச் செய்து, அதைக் கேட்டினிக்கவும் செய்கின்றது என்பதை யாவரும் உணர முடிகின்றது!

ஏனைய தெய்வ நாமரூபங்களை இராக தாள இசையோடு பாடி மகிழ எவ்வளவோ தமிழ்ப் பாட்டுக்கள் நம்மிடையே நிலவுவதைக் காணும் போதெல்லாம், ஸ்ரீரமண பிரானையே என் இஷ்ட தெய்வமும் சற்குருவு மாகக் கொண்டிருக்கும் நான், ''இவ்வாறு நம் சற்குரு ரமணரைப் பலவகை இராக தாளங்களோடு பாடி மகிழ யாராவது பாட்டியற்றித் தரமாட்டார்களா'' என்று ஏங்கி நின்றதுண்டு. ஸ்ரீசாது ஓம் ஸ்வாமிகளின் ஸ்ரீரமண கீதங்களை பாடப்பாட நான் கேட்டு மகிழும் வாய்ப்பு ஏற்பட்ட தற்போது எனது ஏக்கம் நீங்கியதோடு என் போலவே விருப்பமுள்ள பற்பல ரமண பக்தர்களது ஆவலும் இனி நம் தமிழ் நாட்டிற் பூர்த்தியாகிவிட்டது என்ற பேரானந்தத்தை யடைகின்றேன்.

தன்னை ஆட்கொண்ட ஸ்ரீரமண பிரானது அருட் புகழை ஆயிரக்கணக்கான துதிகளாக இயற்றுவதும் ஸ்ரீபகவானின் திருமுன் அவற்றைப் பாடி மகிழ்வது மாகவே தம் வாணாளை இறை பணியிற் கழித்தவர் ஸ்வாமிகள். அன்பர்கள் சிலர் இப் பாடல்களை அச்சேற்றி வெளியிட விரும்பியபோது அவர், ''நான் பாடுவது என் இறைவன் செவியில் மட்டும் படுவதற்கும், அதைக் கேட்டு அவர் அருள் புரிவதற்கும் மட்டுமே; இயற்றிய பாடலை இறைவன் திருமுன் பாடி முடிக்கும் போதே நான் பாடிய நோக்கம் முடிந்து விடுகின்ற தல்லவா ? பிறகு அவற்றை அச்சில் வெளியிடுவதோ, அல்லது உலகோர் நடுவில் எடுத்துச் சென்று பாடுவதோ என் வேலை யல்ல !'' என்றனர்.

''இறையுன் குரல் கேட்க வேண்டுமேல் - வே
றெவர் காதுங் கேளாம லேத்துவாய்''

என்று இந்நூலில் 37-வது கீதத்தில் அவர் பாடியிருப்பதே அவரது இக்கருத்துக்களை நன்கு வெளிப்படுத்துகின்றது.

ஸ்ரீரமண கீதத்தின் சிறப்பு முழுவதையும் எடுத்துக் கூறுவது என் சக்திக்கு மேற்பட்டது : இந் நூலை ஓதும் தமிழகமே அதைப் புரிந்து கொள்ளட்டும். இங்கு ஒரு சில மட்டும் எழுத விரும்புகின்றேன். இந்

நூலிலுள்ள பாடல்களுட் சில ஸ்ரீஸ்வாமிகளின் தவ வாழ்வில் அவ்வப்போது நடந்த சில நிகழ்ச்சிகளைக் குறிப்பிடுவதாகவும், சில அவ்வப்போது இருந்த அவரது மனநிலையை விளக்குவதாகவும், சில அன்பர்கள் கேட்ட ஆன்மீக கேள்விகளுக்கு எழுந்த விடைகளாகவும், சில அவரது வாழ்வில் நிகழ்ந்த ஸ்ரீரமண திருவருட்கருணையை விளக்கும் சின்னங்களாகவும், இன்னும் சில ரமணோபதேசங்களாலான அத்வைத சாஸ்திரத்தை அப்படியே ஆனந்த ஸ்தோத்தரங்களாக வடித்த இசைப்பாடல்களாகவும், மேலும் சில உத்தம குருபத்தியின் லக்ஷண வாக்கியங்களாகவும் பல்வேறு சுவைகளில் அமைந்துள்ளன. ஸ்ரீசாது ஓம் சுவாமிகள் இத்தகைய இசைப் பாடல்களை இயற்றியதோடு மட்டும் நில்லாமல் தம் இனிய குரலால் அவற்றின் அர்த்த பாவங்கள் மலர அவைகளை உருகிப் பாடும் இசை நயமும் சற்குரு வருளாற் பெற்றிருந்தது ரசிக்கும் ரமண பக்தர்களின் பாக்கியமே எனலாம்.

ஸ்ரீதியாகராஜ ஸ்வாமிகளின் கீர்த்தனங்களைத் தற்காலத்தில் அரிய இனிய பக்க வாத்தியங்களுடன் சங்கீதக் கலையின் சாமர்த்தியம் வெளிப்பட பெரிய வித்வான்கள் மூலம் நாம் கேட்கும் போது, ''அக் காலத்தில் அநேக பக்க வாத்தியங்களின் சிறப்பின்றி, பக்தி வாக்கியச் சிறப்போடு மட்டும் அக் கீர்த்தனங்களின் மூலபுருஷர் தன் இஷ்டதெய்வமான ஸ்ரீராம பிரானின் திருமுன் அமர்ந்து தானே தனியே பரவசமாய்ப் பாடிக் கொண்டிருந்ததைக் கேட்டிருந்தோமானால் அது எப்படி யிருந்திருக்கும்'' என்று வியப்போடு கருதிப் பார்க்கவும் நேருகின்ற தன்றோ? அவ்வாறு, வருங்கால ரமண பக்தர்கள் வருந்தாம லிருக்கும் பொருட்டு, இந்த ரமண கீதங்களை ஸ்ரீஸ்வாமிகள் பாடும்போதே **(Cassette Tapes)** ஒலிப்பதிவும் செய்து வைக்கப்பட்டுள்ளது நம்மவர்க்கு நல்லதோர் சேமிப்பாகும்.

அருணகிரியாரின் திருப்புகழைப் போன்ற சந்தப் பாக்கள் - வகுப்புகள் முதலியனவும், பலவகைப் பதிகங்களும், கீர்த்தனங்களும், கண்ணிகளும், துதிகளும், பஜனாவளிகளும், நாமாவளிகளும் மேலும் தற்காலத்திற் சிறப்புறுவன வான - ஆனால் பக்திச் சிறப்பும் அத்வைதச் சீர்மையும் நிறைந்த - மெல்லிசைப் பாக்களும் தம்மிடத்தே கொண்டு இந்நூல் ரமண பக்த சமூகத்தின் எல்லாவித இசைவிருப்பங்களையும் பூர்த்தி செய்விப்பதா யமைந் துள்ளது. இது மட்டுமின்றி, கர்நாடக சங்கீத இராகங்களில் பல வர்ணங்களும் கீர்த்தனங்களும் கூட ஸ்ரீரமண வர்ணங்களாக ஸ்ரீசாது ஓம் ஸ்வாமிகளால் இயற்றப்பட்டவை இரண்டாம் பதிப்பாக வெளிவர விருக்கின்றன. எனவே ஸ்ரீ பகவானருளால் தமிழ்நாட்டுச் சங்கீத அரங்குகளில் ஞானரசமும், பக்திரசமும் பொங்க வித்வான்கள் ஸ்ரீரமண பிரானைப் பாடுவதற்குத் தேவையான தமிழ்ப் பாடல்களுக்கு இனி பஞ்சமே யிராதென்று திருப்தி யடைகின்றேன்.

1.9.96

வே.சு. ரமணன்

ஓம்
நமோ பகவதே ஸ்ரீ அருணாசலரமணாய

# ஸ்ரீ ரமண கீதம்

## ஸ்ரீ ரமணத் தியானம்

(அறுசீர் விருத்தம்)

அருவுரு வமைந்து ஞான வருளிரு நயன மேந்திப்
பொருளெது வெனப்போந் தார்க்குப் புக்கக மாகி யன்பர்
மருளுரு மயக்கந் தீர்க்கும் மஹாகுரு ரமண மூர்த்தித்
திருவடி கண்ணி லொற்றிச் சிந்தையில் தியானம் செய்வாம்.

## ஸ்ரீ விநாயகர் துதி

(வெண்பா)

குருரமண ஞானசிவக் குன்றமே நீயே
கரிமுகனா வந்தருளிக் காப்பாய் - திருவருளா
னாதமிசைப் பண்ணடியே னாவிலுதித் தேர**மண**
**கீத** மிசைக்கக் கிளர்ந்து.

## ஸ்ரீ சரஸ்வதி துதி

(வெண்பா)

வேதன் விழையொளியே வித்தைகளின் றாயேநின்
பாதந் தயவாலென் பால்தந்தால் - நாதங்
கமழுங் கவின்மலருங் கற்றாரின் இன்பத்
தமிழுமென் னாதழைக்குந் தா.

# ஸ்ரீ அருணாசலரமண ஷோடச மூலாக்ஷர நமஸ்காரத் தோத்திரம்

**ஓம்**

**ஓ**மெனு மான்ம வொலியதன் மூல
வுண்மையா யுளத்துள பொருளாய்,
தாமுறை யருணா சலசிவ சக்தி
தனையெடுத் துலகெலா மிறைக்குஞ்
சாமியா யடியர் தந்தைதா யாகித்
தக்ஷிணா மூர்த்தியா யெழுந்த
நாமெனு மகண்ட நாமசற் குருவாம்
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

**ந**

1. "**ந**மவெனும் பொருளோ நானெனு மகந்தை
நனியித யத்தினி லடங்கி
யிமியுமே லெழாம லிருப்பதே, யதனா
லிவ்வித நமஸ்கரித் திருப்பாய்
தமதெனு மெல்லாந் தலைவன துடைமை,
தனையறி" யெனவரு டந்து
நமையுளத் தொடுக்கு நற்றுணை யான
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

**மோ**

2. **மோ**னமாம் வலிய முதலுப தேச
முறையினா லருளிய முதல்வன்
ஏனைய நோக்கும் வாக்குடன் பரிச
மெம்மனோ ரெய்திட விரங்கித்
தானது வாகுந் தத்துவா னுபவந்
தனதடி யார்பெறத் தரைமேல்
ஞானமே வடிவ னுவவ தரித்த
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

ப

3. ''**ப**ரமெலா மிறைவன் பதத்திலிட் டுள்ளே
பளிச்சிடு மகவனு பவத்தி
லுரம்படுஞ் சகஜ வுணர்வையே நேரே
யுனதுலட் சியமெனக் கொண்டாற்
றரம்படு பலவாஞ் சாதனைச் சிரமந்
தவிரலா'' மெனுமுள வுரைக்க
நரம்படு மருணை நாதனு யெழுந்த
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

க

4. ''**க**ருவமுற் றடங்காக் கலைஞரி னேதுங்
கற்கிலா ரான்மிகக் கல்விப்
பெருமையிற் குரிமை பெற்றவ'' ரென்ற
பேருரை மெய்க்கவெம் போன்ற
திருவிலார் தமக்குந் தெளிவுணர் வருளிச்
செய்தநற் சிவத்திரு வருளா (ம்)
✱ நரலையா யிதய நடமிடு ஞான
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

வ

5. **வ**லிவிலா நெஞ்ச மனிதராய், பத்தி
வழியிலே வந்து(ம்)மா யைக்குப்
பலியென நசுக்கப் படுபவர் தமைக்காப்
பாற்றிடப் பரமகா ருணிய
மலிவிஞ லண்ணு மலைப்பெரு மானே
வலிவில்வந் தருளியவ் வடியார்
நலிவெலா மகற்றி ஞானமே பொழியும்
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

✱ நரலை - கடல்

**தே**

6. **தே**சுரு விலிங்கத் தெய்வமா யெழுந்த
சிவனரு ணுசலச் சிந்தை
மாசறு மிளமை வயதிலே தன்னுள்
வாய்ந்திடச் சோடச வயதி
லீசனே தாஞு மிதயவாழ் வெய்தி
யிகந்துறந் தருணைவந் திறப்பா
ஞசமா காத ஞானமே நல்கும்
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

**ஸ்ரீ**

7. **ஸ்ரீ**யய லாகாத் திருவரு ளாந்தன்
றிருவடி யடைந்தவர்க் குடலின்
ருயையும் மறப்பித் தவருளங் கவருந்
தயாளுவாய், சதிபதி யுறவின்
மாயையைக் கடந்த மஞளஞு யன்பர்
மனங்கவர்ந் தருட்சிவ ஞான
நாயக ஞகி நம்மையாட் கொண்ட
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

**அ**

8. ''**அ**கமெனு முணர்வே யாகமோ டிணைந்தா
லகந்தையிவ் வத்தியா சத்தாற்
செகமெலாந் தன்னி னன்னியம் போலத்
தெரியுமச் சேர்க்கையற் றமல
வகமக மாநின் றவிர்தலே ஞான
வனுபவ மறி''யென வுணர்த்தி
நகசிகை யளவிற் சிவவடி வான
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

ரு

9. ''**ரு**த்திர னயன்மா லும்பரோ டிம்ப
ருலகங்க ளுடலறி யாத
நித்திரை வருங்கா னிகழ்வதோ வெனினு
நீயிருப் பதிற்றடை யுண்டோ ?
சத்தறி வின்ப சகஜநீ யாகத்
தனையறிந் தமர்க''வென் றருளி
நத்திய வர்க்கு ஞானமே வழங்கும்
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

ஞா

10. '**ஞா**'வென லின்ப மைக்கிய மசியா
நற்பொருண் மூன்றினை நவின்றோர்
✱பாவினி லருண பருவத விளக்கம்
பண்ணிய ஞானபண் டிதனாய்,
சாவினைக் கடந்த சாட்சியா யான்ம
தத்துவ வித்தகர் தமது
நாவகத் தருட்பா நயமளித் தருளும்
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

ச

11. ''**ச**லமனந் திரும்பித் தானெழு மூலத்
தானமே தெனவிசா ரித்தா
னிலையுறு மதுவே நினதிய லறிவா (ம்)
நிஜவுரு, வுணர்க''வென் றிதயக்
கலையறி வித்துக் கவலறு பரம
கைவல்ய சித்தியாம் ஞான
நலமுற வருளுங் குருபர னான
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்

✱ ''ஓர் பா'' என்றது, 'சத்திய சிற்சுகம்' என்று தொடங்கும் ஸ்ரீ பகவா னருளிய 'அருணாசல நவமணிமாலை' இரண்டாவது செய்யுளைக் குறிக்கும்.

**ல**

12. **ல**ட்சிய மிதய ஞானமே யன்றி
நாட்டவர் புகழ்பல சித்தி
மெச்சிய வான விவிதபோ கங்கள்
விழைந்துளம் விழைபல வியற்ற
றுச்சமென் றுணர்த்தித் துயரற விழிப்பிற்
றுயிலுறுந் துரியமே துலக்கு
நற்சிவ ஞான நாயக ஞன
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்

**ர**

13. ''**ர**மித்தக மகலா நாட்டமே ஞான
ரமணபே ரின்பமா மஃதோ
ரிமைப்பொழு தேனுந் தெவிட்டிடாக் குறையா
வின்பமுன் னிதயத்தின் மனதை
யமிழ்த்தி''டென் றோதி யனுபவ மெய்த
வருட்கரப் பிடியினுள் ளழைத்து
நமைக்கொடு போம்சீ ரருட்குரு நாத
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

**ம**

14. ''**ம**திக்குள வழுக்கை மாற்றிஞ லிதய
வடிவமாம், மதம்பல விதையே
கதிப்பன வன்றிக் கடவுளை யெங்கோ
ககனத்திற் காட்டுதற் கல்ல;
துதிப்பதான் மனது சுத்தியா'' மென்றே
துலக்கிநந் தோற்றுவாய்க் கிழுக்கு(ம்)
நதிப்பிர வாக மாகிய **பகவான்**
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

ஞ

15. '**ஞ**'முடி வான நாமமேற் றருணை
நகர்ப்பெய ருலகெலா நவிலத்
தா(ம்) முடி வான தத்துவப் பொருளாய்,
சகஜச மாதியிற் றரைமேன்
மாமுனி வோர்கள் வாழ்வகை கண்முன்
மனிதர்க ளறிந்துய வாழ்ந்து
நா(ம்)முடி வான நலம்பெற வருளும்
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

ய

16. **ய**மநிய மாதி யோகநிட் காம்ய
யஜ்ஞமும் பத்தியும் ஞானந்
தமையனுட் டிக்கத் தாஞெரு வியத்தி
சத்திய மென்பதே தவரு
யமைவதா லேதா ஞரெனக் காண
லணைத்தற னெனவறி வுறுத்தி
நமதிய லறிவா னந்தமா ரமிக்கும்
**ரமண**பூங் கழனமஸ் கரிப்பாம்.

# ஸ்ரீ ரமணத்
# திருப் பள்ளி யெழுச்சி

1. கதிரவ னுதிப்பதைக் காட்டுவ தாகக்
காரிருட் கீழ்த்திசை கரந்தது வானிற்
கதிகொளு மீன்களுங் கரந்தன வொளியே
காகமுங் கோழியுங் கரைந்தன கூவி
மதியொளி மங்கி மறைந்திடுந் தருணம்
வல்லிருட் கிடந்தர மறுத்துல கெங்கும்
அதிசிவந் தொளிக்கதி ரடர்ந்தன வெங்கள்
அருள்**ரம ணு**பள்ளி யெழுந்தரு ளாயே.

2. விண்மணி யெழுந்தனன் விலகிடப் பனியே
விரைந்தன புள்ளினம் விண்ணிடைப் பாடி
தண்ணெனக் குளிர்மிகுந் தறைதுயின் றிருந்த
தாய்ப்பசு வெழுந்துதன் சேய்க்குண வூட்ட
வெண்ணியம் மாவம்மா வெனவழைத் ததுநின்
னிளஞ்சுத னருளுண்ண வேங்கிநிற் கின்றேன்
அண்மையி லருணைக்கன் றழைத்தவென் னம்மா
அக**ரம ணு**பள்ளி யெழுந்தரு ளாயே.

3. சூரிய னெழுந்தென்னோ, சுடர்மிகுந் தென்னோ,
சூழுல கெழுந்தென்னோ, சுருண்டலை வீசி
வாரி யெழுந்தென்னோ, வானெழுந் தென்னோ
மக்களும் புட்களு மலிந்தெழுந் தென்னோ,
யாரெழுந் தும்பயன் யாதுகொல்? இறைவா
யானுட லாவெழுந் தாடுமஞ் ஞானக்
காரெழுந் துளதற நீயெழ வேண்டும்
கதி**ரம ணு**பள்ளி யெழுந்தரு ளாயே.

4. நானெழுந் தோருடல் நானெனப் பற்றி
ஞாலமொன் றுண்மையாய் நம்பியுற் பத்தித்
தானமெங் கேதெனத் தானறி யாமற்
சத்துவ ரஜதமத் தாலலைந் தேன், நீ
தானெழுந் ''தெனதுநான்'' சகலமு மடங்கத்
தாண்டவஞ் செய்தருட் சாகசத்தாலே
ஈனமில் லாநிலைக் கெழுப்பிய ருள்வாய்
இறைரம ணுபள்ளி யெழுந்தரு ளாயே.

5. கருவடைந் தேபவக் கடலிடை மூழ்கிக்
காலமி டம்பெருங் கட்டிடைப் பட்டென்
னுருவறி யாதெனை யுடலென வெண்ணி
யூழிதோ றூழியா யுறங்குகின் றேனைப்
பெருவலி யாகிய விருளெனு மாயப்
பேதைமை நீக்கிமெய்ப் போதமெ ழுப்பத்
திருவுருத் தாங்கிவந் தென்னையாட் கொண்ட
ஸ்ரீரம ணுபள்ளி யெழுந்தரு ளாயே.

6. கற்றவர் வெறுத்திடக் கடவன கற்றே
கடையரிற் கடையனுய்க் காலமெல் லாம்வாழ்ந்
திற்றெனச் சொலவொணு விழிசினே னுளத்தி
லினியெனு மெய்யுணர் வெழுச்சியீந் தருள்வாய்
பெற்றவ ரன்றித்தம் பிள்ளையை யெழுப்பும்
பெருங்கரு ணைத்திறம் பெற்றவர் யாரோ
குற்றமுற் றறுத்துன்றன் குழந்தையை யெழுப்பக்
குருரம ணுபள்ளி யெழுந்தரு ளாயே.

7. எழுந்துழல் நாஞென் றினியெழ வொண்ணு
விதத்தி லடக்கிமெய் யிதயவ ரங்கி
லெழுந்துநீ யேயரு ளின்பந டஞ்செய்
தெனக்கினி யோர்தனி யிருப்புமில் லாமல்
அழுந்துவித் துன்னடிக் கறவழித் தென்னை
யமுதுகொண் டருளுக வருணையி லென்னைச்
செழும்பர மாவிருந் தேவலிந் தாண்ட
சிவ**ரம ணு**பள்ளி யெழுந்தரு ளாயே.

8. உறக்கம் விழிப்பெனு முபாதியை மேற்கொண்
டுடற்சிறை யுள்ளே யொழிவிலஞ் ஞான
வுறக்கம டைந்துகா ணுலகக்க னுவி
லுழலுநா னுன்னரு ளுதவியா லுண்மை
யுறக்கவி ழிப்பெனு முணர்வறிந் துடல்நா
னுணர்வெனும் விலங்கறுத் துதறிமெய்ஞ் ஞானம்
உறக்கரு ணைக்கட லுதித்தெழுந் துரிய
வொளி**ரம ணு**பள்ளி யெழுந்தரு ளாயே.

9. நானிது வதுவென நாளெலா மெழுந்து
நரமுத லெண்ணிலா நவையுடற் போர்த்தே
ஈனம லாதொரி லாபமு மில்லா
விழியிரு ளாழ்ந்தினு மேங்கிட லழகோ
கானிடைப் பட்டமுங் கண்ணிலே னுக்கோர்
கதிதருங் கடவுளாக் கண்முனே தோன்றித்
தானது தானெனத் தனித்தொளி **ரருணு**
சல**ரம ணு**பள்ளி யெழுந்தரு ளாயே.

10. தொழுதுனே யெழுந்திடத் துதிப்பவ ருளத்திற்
றென்னெடுங் காலமாய்த் தூங்கிய வன்போற்
பழுதுப டாதொளிர் பகவனே யான்மப்
பரிதியாய்க் கதிர்விடும் பரம்பொரு ளேநின்
முழுதுணர் வளித்தெழு மூர்த்தியே **ரமணு**
மோனவா ளொளிவிரி ஞானச்செங் கதிரே
அழுதுனே யழைக்குமிவ் வடியனுள் ளருளால்
**அகமக** மெனப்பள்ளி யெழுந்தரு ளாயே.

---

# I. துதிகள்

# 1. ஸ்ரீ ரமணாக்ஷர மலர் மாலை

காப்பு

(வெண்பா)

கருணைக் கடலென்றன் கண்கண்ட தெய்வம்
அருணா சலரமண வாசான் - றிருவடியிற்
செந்தமிழி னட்சரத்தாற் சீர்மாலை சாற்றிடவே
தந்திமுக நின்னருளைத் தா.

## நூல்

நமோரம ணாய நமோரம ணாய
நமோரம ணாய நமோநமோ
நமோரம ணாய நமோரம ணாய
நமோரம ணாய நமோநமோ

1. அகமக மாத்ம ஸ்புரணசொ ரூபா
அருணா சலனே நமோநமோ (ந)

2. அருணா சலஸ்மர ணானந்த போதா
அருள்ரம ணாய நமோநமோ (ந)

3. அதிதயை யாலெனை தகநட ராஜா
ஆத்மா ரமணா நமோநமோ (ந)

4. ஆதியு மத்தியு மந்தமி லாப்பே
ரகண்ட வடிவா நமோநமோ (ந)

5. இந்திரன் மாலயன் ஈச்வர ஞான
ஏகசொ ரூபா நமோநமோ (ந)

6. ஈச்வரர் மூவரின் இதயவி லாசா
இறைரம ணாய நமோநமோ (ந)

7. உத்தம தத்துவ லக்ஷண போதக
சற்குரு ரமணா நமோநமோ (ந)

8. ஊர்த்துவ மார்க்கமு றும்பரஞ் சோதி
ஒளிரம ணய நமோநமோ (ந)

9. எல்லா முன்வய மாக்கிய டக்கிய
எங்குரு தேவா நமோநமோ (ந)

10. ஏகவ னேகச ராசர பாலன
ஈச்வ ராய நமோநமோ (ந)

11. ஐம்ஹ்ரீம் ஸ்ரீம்ஓம் அக்ஷர மூல
மாகிய ரமண நமோநமோ (ந)

12. ஒப்பா ருயர்வார் ஒருவரு மில்லா
அப்பா ரமண நமோநமோ (ந)

13. ஓதா துணர்ந்த உயர்ஞா னிக்கொரு
தாரண மானோய் நமோநமோ (ந)

14. ஔஷத ஞானவ ருஞ்சுவை வடிவே
அருணை ரமண நமோநமோ (ந)

15. கண்ணுட் காணுங் கண்ணையுங் காணுங்
கடவுள் ரமண நமோநமோ (ந)

16. காரண மில்லாக் கருணைக் கடலே
கதியே ரமண நமோநமோ (ந)

17. கிரியரு ணசல மறையொலி மணியே
கீதா ரமண நமோநமோ (ந)

18. கீர்த்திய ருட்பறை நாற்றிசை பரவும்
மூர்த்தி ரமண நமோநமோ (ந)

19. குருரம ணயசற் குருரம ணயசற்
குருரம ணய நமோநமோ (ந)

20. கூர்மமு மச்ச மாதி தசவித
கோலமெ டுத்தோய் நமோநமோ (ந)

21. கெஞ்சு மடியார் நெஞ்சமி ருந்தருள்
கொஞ்சும் ரமணா நமோநமோ (ந)

22. கேடோ ரணுவுங் கிட்டவி டாப்புகல்
வீடே ரமணா நமோநமோ (ந)

23. கைகூப் பிடுவார் மெய்காத் தருள்வோய்
கருணா ரமணா நமோநமோ (ந)

24. கொடுக்கக் குறையாக் கொடைப்பே ரருளாங்
குபேர நிதியே நமோநமோ (ந)

25. கோயிலா விதயக் குகையுறை ஞான
குகேச ரமணா நமோநமோ (ந)

26. கௌபீ னத்திரு மேனியு றுங்கம்
பீர ரமணா நமோநமோ (ந)

27. சரணம் சரணம் சரணம் சரணம்
சற்குரு ரமணா நமோநமோ (ந)

28. சாந்தி சாந்தி சாந்திய ருள்வாய்
சாந்த ரமணா நமோநமோ (ந)

29. சின்மய பொன்மய நின்மல மேனித்
தன்மய ரமணா நமோநமோ (ந)

30. சீருய ரான்மத் தேசொளிர் பேரருட்
செல்வ ரமணா நமோநமோ (ந)

31. சுகரம ணையசு முப்தியி னும்அக
மகரம ணைய நமோநமோ (ந)

32. சூரிய சந்திர னக்கினி முக்கண்
சூக்ஷ்மசொ ரூபா நமோநமோ (ந)

33. செந்தாள் முகவர விந்தா ஞானா
னந்தா ரமணா நமோநமோ (ந)

34. சேயாய்க் கொண்டெனை யாண்டாய் தந்தையுந்
தாயாம் ரமணா நமோநமோ (ந)

35. சைலா ருணசுத மெய்யா ஸ்ரீமுரு
கையா ரமணா நமோநமோ (ந)

36. சொப்பன ஜாக்ரசு ழுப்திய தீதா
மெய்ப்பொருள் ரமணா நமோநமோ (ந)

37. சோணா சலசிவ மோனா அருண்மொழி
வாணா ரமணா நமோநமோ (ந)

38. சௌக்கிய விகபர தானம ளிக்கும்
ஐக்கிய ரமணா நமோநமோ (ந)

39. ஞயம்படு மெய்யுரை யாலுல கீர்த்த
ரமணா ரமணா நமோநமோ (ந)

40. ஞானம காகுரு ஞாலம காகுரு
ஞானே சாய நமோநமோ (ந)

41. ஞேயமும் ஞாதா ஞானமுந் தானா (ம்)
நிர்க்குண ரமணா நமோநமோ (ந)

42. தத்வர கஸ்யபே ரர்த்தமு டைத்துத்
தந்தாய் ரமணா நமோநமோ (ந)

43. தாயே தமரே தயவே இறைவா
தலைவா ரமணா நமோநமோ (ந)

44. திதித்திடு ரமணத் திருநா மத்தருள்
தீஞ்சுவைக் கனியே நமோநமோ (ந)

45. தீன பக்தர கத்தில ருள்பெயும்
தீர ரமணா நமோநமோ (ந)

46. துரியா யரியாய் சுகமெய்ச் சுடரே
பெரியோய் ரமணா நமோநமோ (ந)

47. தூவெளி காணுந் தூவொளிக் கண்ணே
சுயம்ப்ர காசா நமோநமோ (ந)

48. தென்முக மாகிய மோனச தாசிவ
ஸ்ரீகுரு மூர்த்தி நமோநமோ (ந)

49. தேவ தேவம கேசப ராத்பர
தீன பந்து நமோநமோ (ந)

50. தைரியங் கொள்ளும் சாதகர்க் கென்றுங்
கையிற் கனியே நமோநமோ (ந)

51. தொல்லரு ஞசல ஜோதிசொ ரூபா
வல்லவ ரமண நமோநமோ (ந)

52. தோன்றிப் புவிமேற் சுடரறி வூட்டும்
பூன்றப் பொருளே நமோநமோ (ந)

53. நமனை யழித்தே எமையுன தாக்கும்
ரமண ரமண நமோநமோ (ந)

54. நாரா யணாய நமஓம் சிவாய
நமரம ணாய நமோநமோ (ந)

55. நித்யநி ரஞ்சன நின்மல ஞான
நிஜரூ பாய நமோநமோ (ந)

56. நீர்நிலங் காற்று காயநெ ருப்பிவை
நின்னணு வொன்றே நமோநமோ (ந)

57. நுட்பம திக்குணர் நுட்ப நுட்பமே
நூதன ரமண நமோநமோ (ந)

58. நூறு யிரந்திரு நாமரூ பாவிச்
வேசா ரமண நமோநமோ (ந)

59. நெஞ்சம ளிப்பார்க் கஞ்சல ளித்தம்
மஞ்சத் தெழுவோய் நமோநமோ (ந)

60. நேயா ஜிதகுண மாயா அடியர்ச
காயா ரமண நமோநமோ (ந)

61. நையவ கந்தை யருணட மாடு(ம்)
நாயக ரமண நமோநமோ (ந)

62. நொடியில் அடியார் மிடிமை தவிர்க்கும்
வடிவா ரமணு நமோநமோ (ந)

63. நோயகம் புறமுந் தோயவி டாவருள்
தாயக ரமணு நமோநமோ (ந)

64. பரமாத் மாவே சற்குரு வடிவாய்
பார்மேல் வந்தோய் நமோநமோ (ந)

65. பாவன சோபன ஞானப் பனிமதி
பார்வை யாளா நமோநமோ (ந)

66. பிறையணி யரஹர சிவகுரு பரனே
பிரணவ ரமணு நமோநமோ (ந)

67. பீதிய கலவருட் பீதிய ளித்தோய்
பீதிய ழிப்பாய் நமோநமோ (ந)

68. புண்ணிய நாம ரமணஜெ பத்தைப்
பண்ணிடத் தந்தோய் நமோநமோ (ந)

69. பூரண ஞானம ளித்தருள் புரியுங்
காரண குருவே நமோநமோ (ந)

70. பெயர்சொலி நின்னைப் போற்றுவா ருள்ளம்
பெயரா ரமணு நமோநமோ (ந)

71. பேதைமை நீக்கிப் பிறவிப் பயன்றரு (ம்)
நாதா ரமணு நமோநமோ (ந)

72. பைந்தமிழ் மாலை பணிந்தணி விப்போர்
தந்தாய் ரமணு நமோநமோ (ந)

73. பொறுமைக் கினியோ ருவமையி லாப்பரி
பூரண மோனு நமோநமோ (ந)

74. போலி யுருவாம் ஜீவோ பாதியைப்
போக்குங் குருவே நமோநமோ (ந)

75. பௌர்ணமி யொளிகுறை யுங்குறை யாவருட்
பௌர்ணமி வதனு நமோநமோ (ந)

76. மனமழித் தான்ம மயவொளி யாக்கும்
வரிஷ்ட ரமஞ நமோநமோ (ந)

77. மாயம றவே'**ரம ணாயந மோ**'வெனும்
மந்திர வடிவே நமோநமோ (ந)

78. மின்ன லொளிக்கதிர் பின்னிட விதயம்
மின்னக ஜோதி நமோநமோ (ந)

79. மீதியில் லாதருட் ஜோதிவி ளங்கும்
வீதி நடஞ நமோநமோ (ந)

80. முப்புடி யற்றமு ழுப்பொரு ளேயெனைக்
கைப்பிடி கொண்டோய் நமோநமோ (ந)

81. மூலவ கந்தை யொழியஞா ணக்கினி
மூட்டுங் குருவே நமோநமோ (ந)

82. மெய்ப்பொரு ளாவெனை மாற்றும் ஸ்பரிச
வேதி ரமஞ நமோநமோ (ந)

83. மேருவை விட்டெமக் காவரு ணசலம்
மேவிய ரமஞ நமோநமோ (ந)

84. மையிட் டடியார் மனமயக் கறுக்கும்
மெய்வித் தையனே நமோநமோ (ந)

85. மொழியா மொழியே மொழிமூ லவனே
முனிரம ணய நமோநமோ (ந)

86. மோன ஞான முரளிக் கிண்கிணி
மோக ணய நமோநமோ (ந)

87. மௌன குருவே மானிட மேந்திய
சகுண குருவே நமோநமோ (ந)

88. யதிநா யகனே விதிநா யகனே
கதிதா யகனே நமோநமோ (ந)

89. யார்நா னென்னும் ரமணம ஹாஸ்திரப்
போர்மா ணலியே நமோநமோ (ந)

90. யுக்திக் கெட்டா துள்ளிருந் தொளிரும்
யோகீ சாய நமோநமோ (ந)

91. யூதர்கி றிஸ்துவர் முகம்மதி யோரும்
ஓதுங் குருவே நமோநமோ (ந)

92. யோகா னந்தா ஓங்கா ரச்சிவ
போகா னந்தா நமோநமோ (ந)

93. யௌவன முறுமுன் பொங்கிய ஞான
திவ்விய ரமணு நமோநமோ (ந)

94. ரமணு யநமோ ரமணு யநமோ
ரமணு யநமோ நமோ நமோ (ந)

95. ராகத் துவேஷ ராக்ஷதர் வராமல்
ரட்சித் தருள்வாய் நமோநமோ (ந)

96. ருக்கா திச்சதுர் வேதமுங் காணு
அக்கரை நின்ருேய் நமோநமோ (ந)

97. ரூபமில் லாயெனி னும்மெமக் காகுரு
ரூபமெ டுத்தோய் நமோநமோ (ந)

98. லக்ஷண சிகரமெ னுந்திரு மேனி
லக்ஷண வடிவா நமோநமோ (ந)

99. லாபமெல் லாவினும் லாப முடிவாய்
லபித்த ரமணு நமோநமோ (ந)

100. லிங்கா காரா இதயப ராத்ம
லிங்கரூ பாய நமோநமோ (ந)

101. வரதா பயகர வடிவா என்னருட்
குருதே வாய நமோநமோ (ந)

102. வாரண ஆனன ஞகியென் னுள்தடை
வாதனை தீர்ப்போய் நமோநமோ (ந)

103. விச்வசொ ரூபா விலக்ஷண ஞான
விநோதசொ ரூபா நமோநமோ (ந)

104. வீர வீரா வினைத்தளை வீழ்த்தும்
வேங்கட ரமணு நமோநமோ (ந)

105. வெந்தழல் போலும் மெருகுள பொன்ஞெளி
மேனி ரமணு நமோநமோ (ந)

106. வேறற வெண்ணைவி ழுங்குந்தெய் வீக
வேழ ரமணு நமோநமோ (ந)

107. வேண்டிய தெல்லா மீந்தும் வேண்டா
விருப்பமு மீவோய் நமோநமோ (ந)

108. வையக மெங்கும லிந்தபெ ரும்புகழ்
வாகைய ணிந்தோய் நமோநமோ (ந)

நமோரம ஞய நமோரம ஞய
நமோரம ஞய நமோநமோ
நமோரம ஞய நமோரம ஞய
நமோரம ஞய நமோநமோ

ரமண குருவாழி நாதன் துதியக்ஷரமலர்
தமிழ்மாலை வாழி.

---

# 2. ஸ்ரீ ரமண சரிதக் கிளிக் கண்ணி

**காப்பு**

தேவன் குருரமணன் சீர்சரித சங்கிரகம்
பாவந் தொலையப் பரமடையக் - கூவிக்
கிளிக்கண்ணி யாற்பாடக் கேடகற்றும் ஞானக்
களிக்கரிமு கச்சரணே காப்பு.

**கண்ணிகள்**

1. செல்வத் தமிழ்க் கிளியே ஸ்ரீரம ணன்சரிதம்
சொல்லத் திதிக்குமடீ - கிளியே - ஸோஹம் பலிக்குமடீ.

2. கீதமொழிக் கிளியே கேட்பா யெனில்துரிய
ஜோதி விழிக்குமடீ - கிளியே - சுகமே நிலைக்குமடீ.

3. கோடிக் கணக்கி லிந்தக் குவலயத் திற்பிறப் போர்
பேடிச் சனங்களடீ ! - கிளியே - பிறவிவீ ணுகுதடீ.

4. கடவுளை இல்லை என்பார் ! கானலை உண்மை என்பார் !
மடமையே வடிவங்களாய்க்-கிளியே-மனிதர்கள்
வாழ்வா ரடீ.

5. செல்வப் பெருநிதியைச் சேர்த்துக் குவிப்பதையே
கல்விப்பயன் என்பாரடீ-கிளியே-கண்ணிருந்தும்
காணு ரடீ.

6. மலைமலையாய்க் குவிப்பார் வாசித்த நூல்களெல்லாம்
கலைவலைக் கைதியடீ - கிளியே - காலம் விநாசமடீ !

7. என்னென்ன வோஅறிய எட்டிக் குதிப்பாரடீ !
தன்னை அறியா ரடீ - கிளியே - சந்தேக ஜீவரடீ.

8. போகப் புறப்பொருளின் போதையி லேமயங்கிச்
சாகப் பிறந்தாரடீ ! - கிளியே - ஸத்தை மறந்தாரடீ.

9. இத்தனை மாயங்களால் இருண்ட உலகி டை, ஆ
தித்தன் எழுந்தாரடீ - கிளியே - இவரே **ரமண**ரடீ.

10. இருளில் விழுந்தழியும் இவ்வுலகத்தைத் திரு
அருளில் அணைப்பதற்கே - கிளியே - ஐயன் பிறந்தாரடீ.

11. பாண்டித் **திருச்சுழியில்** பராசரர் வான்குடியில்
ஆண்டவன் அவதரித்தான் - கிளியே - அஞ்சலி
செய்வாயடீ.

12. அந்தண ருட்சிறந்த **அழகம்மை சுந்தரர்க்**கே
எந்தை பிறந்தாரடீ - கிளியே - இரண்டாம் புதல்வரடீ.

13. **ஆயிரத் தெண்ணூற்**றே டாண்**டெழு பத்தொன்** பதில்
தூயபிரமாதியில் - கிளியே - தோன்றிய ஜோதியடீ.

14. மாசத்தில் **மார்கழி**யே, வாரத்தில் **சோமன், புனர்**
**பூச**த்தில் பூத்ததடீ - கிளியே - பூரணப் பொன்மலரே.

15. அண்ணல் பிறந்த பொழு தருகிருந் தோர்கிழவி
கண்ணிரண்டு மில்லாமலே - கிளியே - கண்டாளோர்
ஜோதியடீ.

16. ஓங்கொளி யாய்ப்பிறந்த உத்தம னுக்குப்பெயர்
**வேங்கட ராம**னென்றே - கிளியே - வீட்டார் அழைத்தாரடீ.

17. **நாகசா மி**க்கிளைய நாயக சுவாமியடீ
**நாகசுந் தர**ச் சுதனே - கிளியே - நாதனுக் கிளையனடீ

18. திருச்சுழி திண்டுக் கல்லில் சிறுவய திற்படித்தே
கருத்துற மதுரையிலே - கிளியே - கற்று வருவானடீ.

19. திண்டுக்கல் வீட்டினிலே தேவன் வயது பன்னி
ரண்டே பிராயத்திலே - கிளியே - நடந்ததோர் விந்தையடீ.

20. தாளடைத் தோரறையில் சரீரம் மறந்திறைவன்
வாளா விருந்தானடீ - கிளியே - வாய்மனதுக் கெட்டானடீ.

21. அடித்துடைத் தேயகத்தார் அறையிற் புகுந்துடலில்
புடைத்தும் எழுந்திலனே - கிளியே - பூரண யோகியடீ.

22. உறக்கம் மயக்க மல்ல உண்மைச் சமாதியடீ
மறைப்பிலா ஆனந்தமே - கிளியே - மற்றவர் கண்டாரோடீ ?

23. இப்படிப் பட்டநிலை இன்னும் படிக்கையிலே
அப்பனை அணைந்ததடீ - கிளியே - ஆலவாய் வாழ்வினிலே.

24. பன்னிரண் டாண்டினிலே பால ரமணன் தந்தை
இந்நிலம் நீத்தாரடீ - கிளியே - இறைவனை ஈன்றூரடீ.

25. அன்னை அழகம்மையோ டண்ணன்தம் பியுடனே
மன்னனைச் சிறிய தந்தை - கிளியே - மதுரையில்
வளர்த்தாரடீ.

26. பள்ளியும் பாடமுமோர் பக்கத் தொதுக்கி விட்டுத்
துள்ளித் திரிவானடீ - கிளியே - ஜோதிக் குமாரனடீ.

27. கேட்ட தொரேமு றையில் கிரகிக்கும் மேதையடீ
ஆட்டமும் ஓட்டமுமே - கிளியே - அன்றிப் படியானடீ

28. பெரிய புராண மொன்றைப் பிரியமு டன்படிக்க
அரியதோர் அன்புக் கனல் - கிளியே - அவனுள் எழுந்ததடி.

29. அறுபத்து மூவரைப் போல் அன்பா லுருகிமனம்
பொறுமைக் கோர் நிலைக்களனாய் - கிளியே-
புத்துணர்ச்சி பெற்றதடீ.

30. ஆலவாய்ச் சொக்கர் முன்னும் அங்கயற் கண்ணிமுன்னும்
பாலகன் உருகிநிற்பான் - கிளியே - பாலரு வாயனடீ.

31. அறிவு தெரியுமுன்னே ஐயன் அகத்தினிலே
அருணா சலமெனவே - கிளியே - அரும்பொருள்
இருந்ததடீ.

32. பள்ளிப் பொழுதும் இந்தப் பாலன் அறியான் அதை
உள்ளங் கவர் மலையாய்க் - கிளியே - உலகினில்
உள்ளதென்றே.

33. அண்ணா மலையென்பதே அருணாசலம் என்பதை
அண்ணலுக் கோர்முதியோர் - கிளியே - அன்றொருநாள்
சொன்னாரடீ.

34. அருணுசலமெனவே அகமே நினைந்துருகிப்
பெருமான் வியந்தானடீ - கிளியே - பேரருள் சேர்ந்ததடீ.

35. மரண பயம் ஒருநாள் வந்துளம் பற்றவருள்
ஸ்புரணம் எழுந்ததடீ - கிளியே - போதம் உதித்திடவே

36. செத்தபிணம் போலவே தேகத்தினைக் கிடத்தி
அத்தனு ராய்ந்தானடி - கிளியே - யாரிந்த நானெனவே.

37. தேக வுணர்வில்லாமல் சிந்தை நினைவில்லாமல்
ஏகமாய் ''நானு'' னென்றே - கிளியே - இருப்ப
துணர்ந்தானடீ

38. சற்றுங் கலங்காமலே சச்சிதானந்தம் தானுய்
முற்று முணர்ந்தானடீ - கிளியே - முக்தனு யானுனடீ.

39. பந்தம றுத்தவர்க்குப் படிப்பும், பணம், பதவி
எந்தச் சுகங்களுமே - கிளியே - இனிப்பைக்
கொடுக்குமோடீ ?

40. நிட்டைச் சுகக் கடலில் நீந்தும் ரமணன் பள்ளிக்
குட்டையின் சேற்றினிலே - கிளியே - குளிக்க
நினைப்பானேடீ ?

41. தண்டித்தார் ஆசிரியர் தமையன் வெறுத்துரைத்தான்
கண்டித்தால் நிற்குமோடீ ? - கிளியே - கடல்கரை
புரண்டிடிலே.

42. எம்பெரு மானுங்கில இலக்கணப் பாடந் தன்னை
மும்முறை எழுதும்படி - கிளியே - மூண்டதோர்
தண்டனையே.

43. இருமுறையே அதனை எழுதி முடித்த பின்னர்
அருவருப் பானுனடீ - கிளியே - அசட்டுப் படிப்பினிலே.

44. வாசித்த புத்தகமும் வரையும் காகிதம் கோலும்
வீசி எறிந்தானடீ - கிளியே - வேலை முடிந்ததடீ.

45. தேகம் நிமிர்ந்தமர்ந்து செந்தாம ரைக்கண் மூடி
யோகம் புகுந்தானடீ - கிளியே - ஓதா துணர்ந்தானடீ.

46. தமயனும் நாகசாமி தம்பியின் செய்கை கண்டே
அமைதி இழந்தானடீ - கிளியே - அறைந்த சொல்
கேட்பாயடீ

47. ''இப்படிப் பட்டவர்க்கே இங்கென்ன வேலை'' என்ருன்
அப்படிச் சொன்ன சொல்லே - கிளியே -
அருளழைப் பானதடீ.

48. தனக்கொரு வேலையில்லை தமையன்சொல் பொய்யுமில்லை
இனித்தரு ணுசலமே - கிளியே - ஏகத்துணிந்தானடீ.

49. அண்ணன் கல்லூரிக் கப்போ தைந்துரூ பாயளிக்க
அண்ணு மலைச் செல்லவே - கிளியே - அருள்
பொருளானதடீ.

50. மூன்றுரூ பாய்கைக் கொண்டோர் முற்றறி வுக்கடிதம்
சான்ருய் வரைந்தானடீ - கிளியே - சாரத்தைக் கேளாயடீ.

51. ''தந்தையைத் தேடி, நானுத் தரவாற் கிளம்பி விட்டேன்
இந்தக்கா ரியத்திற்கே-கிளியே-எவரும் வருந்தே'' லென்றே.

52. ''நல்லகா ரியத்திது நாடியதாலே தேடி
அல்லலு ருதீர்'' என்ருன் - கிளியே - அடியில்
பேர் இல்லையடீ !

53. திண்டிவ னமேதன்னைத் திருவண்ணு மலைசேர்க்கும்
வண்டி நிலைய மென்றே - கிளியே - மன்னன்
நினைத்தானடீ.

54. ஆவி ரதத்திலேறி ஆலவாயை மறந்து
தேவன் பறந்துவிட்டான் - கிளியே - ஜெகமே
துறந்தானடீ.

55. விழுப்புரத் தேயிறங்கி வேறுவண் டிகொள் ளென்றே
வழியறி வித்தாரடீ - கிளியே - மௌல்வி ஒருவரடீ.

56. அவ்வா றிறங்கித் திரு வருணுசலக் குமரன்
ஒவ்வாப் பசிக்களைப் பால் - கிளியே - ஊரூராய்
நடந்தானடீ.

57. அறையணி ஆலயத்தில் அருட்பெருஞ் சோதிகண்டே
இறைவனின் திருவருளைக் - கிளியே - எந்தை வியந்தானடீ.

58. பசிக்குண வையாசிக்கப் பார்ப்பனன் ஈயாததால்
இசைக்குழல் தொழிலுடையோன் - கிளியே - எந்தைக்
களித்தானடீ

59. கையில் உணவிருக்கக் கண்கள் சமாதிபுக
ஐயன் விழுந்துவிட்டான் - கிளியே - அருள்வச மானனடீ.

60. கிருஷ்ணஜ யந்தியன்று கீழுரந் தணர்முத்துக்
கிருஷ்ணரின் கிரகத்தையே - கிளியே - கேள்வன்
அடைந்தானடீ.

61. இல்லத்தின் அன்னையவள் இவனைக்கோ பாலனென்றே
சொல்லா தறிந்தாளடீ - கிளியே - சுவையுண வீந்தாளடீ.

62. காதணி யைக்கழற்றிப் பாகவ தற்களித்து
நாதனூர் போகரூ பாய் - கிளியே - நான்கு பெற்றுக்
கொண்டானடீ.

63. கண்ணன் நிவேதனத்தைக் கட்டியன் னையளித்தாள்
விண்ணவன் வேங்கடனைய்க் - கிளியே - வீடுதேடி
வந்தானடீ.

64. இரவு விடிந்து செவ்வாய் - இன்பக் கிழமையிலே
அருணை சலப்பதியைக் - கிளியே - ஐயன் அடைந்தானடீ.

65. அண்ணா மலையப்பனை அணைந்தால யத்தில் தன்னை
அர்ப்பணம் செய்தாரடீ - கிளியே - அங்கம் குளிர்ந்தாரடீ.

66. சகலமும் விட்டொழித்தே தலையும் மொட்டையடித்தே
மிகுந்தொரு கோவணமே - கிளியே - மேனிக் கணிந்தாரடீ.

67. பாதாள லிங்கத் துற்ற பரமாத்ம லிங்கமடீ
வேதாந்த மெய்ப்பொருளே - கிளியே - வேறென்ன
சொல்வேனடீ.

68. தேகம் மறந்தாரடீ சிந்தை இறந்தாரடீ
ஏக சமாதியிலே - கிளியே - என்றும் அமர்ந்தாரடீ.

69. விடத்தேள் எறும்பும் வண்டும் வேண்டிய மட்டும் ஐயன்
தொடையிற் கடித்திரத்தம் - கிளியே - சொட்டிக் கிடந்ததடீ.

70. கருவி கரணமற்றுக் காய நினைவு மற்று
நிருவிகற் பத்தமுந்தி - கிளியே - நின்று நிலைத்தாரடீ.

71. சேஷாத்ரி சுவாமியினுல் தெரிந்திதைத் தொண்டர்பலர்
நேசித்துப் புரந்து வந்தார் - கிளியே - நினைத்தால்
சிலிர்க்குதடீ.

72. குருமூர்த்தம் செம்பவளக் குன்று குகையரசு
விரூபாக்ஷி யாவிலுமே - கிளியே - விரைகழல்
தோய்ந்ததடீ.

73. பல்லாண்டுகள் தவத்தில் பற்பல வாமிடத்தில்
எல்லாம் எழுந்தருளி - கிளியே - எந்தை மிளிர்ந்தாரடீ.

74. மறைவிலா ஞானமலை வாழ்விந்த வாறிருக்க,
உறவினர் அறிந்தாரடீ - கிளியே - ஓடோடி வந்தாரடீ.

75. அண்ணலை ஈன்றெடுத்த அழகம்மை யாரணுகி
கண்ணீ ருகுத்தாரடீ - கிளியே - காதற்சேய் அல்லவோடீ.

76. பரிதவித்துப் புலம்பி பாசம் பெருகி அன்னை
வருகவென் றழைத்தாரடீ - கிளியே - மறு மொழி
மௌனமடீ.

77. சகஜ சமாதியிலே தானுய் நிலைத் தவரை
ஜெகத் குரு நாத னென்றே - கிளியே - ஜீவர்கள்
கண்டாரடீ.

78. மரம்பழுத் தால்வௌ வாலை வாவென்று கூவி எவர்
இரந்தே அழைப்பா ரடீ - கிளியே - இருப்பே இழுக்குமடீ !

79. ஞானப் பசிஎடுத்த நற்றவர் ஸ்ரீரமண
மோனப் பதத் தடியில் - கிளியே - மொய்த்துக் குவிந்தாரடீ !

80. பற்பல பக்குவிகள் பணிந்துப தேசம் பெற்ற
சொற்களின் சாரமெல்லாம் - கிளியே - சுருக்கமாய்க் கேட்பாயடி.

**81. நானு ரெனப்பார் ; உடல்நானல்ல ; எண்ணமல்ல**
**தானு யொளிர்வதுநீ - கிளியே - சச்சிதா னந்தமடி.**

**82. மனமுடல் நானென் றெழும் மயக்க மொழிந்தால் துன்பக்**
**கனவு கலையுமடீ - கிளியே ! - கனசுக ஞானமடீ.**

83. சருவமும் தானே என்று சகஜாத்ம நிஷ்டை நின்ற
குருபரன் சந்நிதியே - கிளியே - கூறாமல் கூறுமடீ.

84. இருந்த படியிருந்தே இறைநிலை இன்னதென
பொருந்தப் புகட்டினரே - கிளியே - போதசொ ரூபரடீ.

85. ஜாதி சமய பேதம் சற்றுமில் லாதொளிரும்
ஜோதி சொரூபரடீ - கிளியே - தொண்டர்க் கெளியரடீ.

86. இந்து, முஸ்லீம், கிறிஸ்து, பௌத்தரெல் லோரும்தங்கள்
சொந்தக் குருபரனுய்க் - கிளியே - துதித்தருள்
தோய்ந்தாரடீ.

87. அன்னையும் தம்பியுமே அன்பர் குழாத்துளொன்ருய்
மன்னவர் திருவடிக்கே - கிளியே - வந்து பணிந்தாரடீ.

88. நிரஞ்ஜனு னந்தராகி நீத்தில்ல மும்பெயரும்
அருகினில் தம்பியுமே - கிளியே - அருட்பணி செய்தாரடீ.

89. பகவான் ரமணரருட் பணிக்கே உயிருடலும்
தகவாய் அளித்ததனுல் - கிளியே - தாய்மஹிமை
பெற்ருரடீ.

90. அன்னை உடலகற்றும் அந்திப் பொழுதினிலே
தன்னருட் கரமளித்தே - கிளியே - சாயுஜ்யம் தந்தாரடீ.

91. மாதா சமாதியதே மாத்ருபூ தேசரடீ
நாதனங் கமர்ந்திடவே - கிளியே - **ரமணுச்ரமம்** ஆனதடீ.

92. **அருணுசல** சிவனை **அக்ஷரமணத்** தமிழ்த்
**திருமணி** மாலையிட்டே - கிளியே - ஸ்ரீரமணர் சேர்ந்தாரடீ.

93. **உள்ளது நாற்பதுடன் உபதேச உந்தியா**ரும்
தெள்ளு தமிழ்மொழியில் - கிளியே - ஜெகத்துக்
களித்தாரடீ.

94. கொள்ளை விரும்பிவந்த கள்ளரை ஓரிரவில்
''உள்ளது கொள்க'' வென்ருர் - கிளியே - ஒப்பிலா
வள்ளலடீ.

95. உடலில் அடித்தகள்ளர்க் குதவி விளக் ''கின்னெரு
தொடையிலும் அடி'' என்றதோர் - கிளியே -
சொல்லொணுச் சாந்தனடீ.

96. தீதுள பாவிகட்கும் திருவருள் செய்வார் ; சான்ருய்
ஏதெனும் வேண்டுமென்ருல் - கிளியே - என்னேயே
பாராயடீ.

97. அருணு சலப்பெருமான் அருளே தமிழகத்தின்
அவதார ரமணரடீ - கிளியே - அவரே கடவுளடீ.

98. ஆக்கையி னின்றும் வேரும் ஆன்மாவென் றேமுழங்கும்
வாக்கை நிரூபிக்கவே - கிளியே - வாழ்ந்தவர் ரமணரடீ

99. இடது கையி லெழுந்த இணேயிலாத் துன்பம் தரும்
அடலரும் நோயுருவும் - கிளியே - அதற்கோர் விளக்கமடீ.

100. சொல்லற் கரியவலி துன்பத்தையும் ''எனக்கீ(து)
இல்லே உடலினுக்கே!'' - கிளியே - என்றுகாண் பித்தாரடீ.

101. ஆண்டெழு பதில் தெய்வ யாக்கை யகற்ற, வானில்
தோன்றியோர் ஜோதியடீ - கிளியே - ஜொலித்து
மறைந்ததடீ !

102. எடுக்கும் பொழுதுமுடல் விடுக்கும் பொழுதும் ஜோதி
படைக்கும் பரமனடீ - கிளியே - **பகவான் ரமணரடீ !**

103. என்றும் இருப்போரடீ இறப்பென்றும் இல்லாரடீ
இன்றும் நம் இதயத்திலே - கிளியே - இருப்பவர்
ரமணரடீ.

104. அகந்தை மமதையற்ற ஆண்மைத் தனமுடை யோர்
தகுந்த குழந்தையடீ - கிளியே - சற்குரு ரமணருக்கே.

105. வீர ரமணன் பெற்ற தீரக் குழந்தைகள் நாம்
யாருக்கும் அஞ்சோமடீ ! - கிளியே - அன்பால்
ஜெயிப்போமடீ.

106. **நமோ ரமணுய** வில்லில் **நாணுர்** அஸ்திரம் பூட்டி
தமோ **மன மாய**மெல்லாம் - கிளியே - சம்ஹாரம்
செய்வோமடீ.

107. **நாவில் ரமணனுண்டு ! நாட்டம் அகத்திலுண்டு !!**
**சாவில் பயமேதடீ !!!** - கிளியே - **சாந்தியாய்** வாழ்வோமடீ.

108. **ரமண**னென் றேசொல்லடீ ! ஞான வழி நில்லடீ !
**எமனுமங் கில்லேயடீ!!** - கிளியே - **எல்லாம் ரமணனடீ !!!**

# 3. ஸ்ரீ சற்குரு ரமண சரிதக் கும்மி

கும்மியடி ! அருட் - கும்மியடி ! ஒன்ருய்க்
கூடிக் குருபதக் கும்மியடி !!
அம்மையடீ ! நமக் - கப்பனடீ ! - **ரம**
**ணாய நமோ** வெனக் கும்மியடி !!!

1. சாந்த சமுத்ர ரமணனடீ - அவ
தாரச் சரிதை இசைப்போமடீ
காந்த அருள்வலைக் கண்ண னடீ - கலி
காலத் துதித்த கடவுளடீ (கும்மி)

2. வேதியர் **சுந்தரர்** மைந்தனடீ - பெயர்
வேங்கட ராமன்என் ருேதிடடீ
ஆதி **திருச்சுழி** யற்பதியில் - **அழ**
**கம்மை** வயிற்றி லுதித்தானடீ (கும்மி)

3. சின்னஞ் சிறிய பிராயத்திலே - குரு
தேவனின் சிந்தையின் ஆழத்திலே
மன்**னரு ணாசலம்** என்பதுவே - மிக
மாண்பென்னும் எண்ணம் இருந்ததடீ (கும்மி)

4. அன்று மதுரையில் கற்ருனடீ - பதி
ணாறு பிராயமும் உற்ருனடீ
பின்பொரு நாளில் திடீரெனவே - சாவின்
பீதி எழுந்திடப் பெற்ருனடீ (கும்மி)

5. சாவின் ரகசியம் யாதெனவே - அதைத்
தானே ஆராயத் துணிந்தானடீ
சாவதுடம்பென, அப்படியே - உடல்
சாய்த்து மரணத்தை ஆய்ந்தானடீ (கும்மி)

6. நாடியும் மூச்சும் அடங்கிடவே - உள்ள
**“நாணர்”** **?** எனத் தேடிக் கண்டானடீ
கூடிய ஆன்ம குகையினிலே - இனிக்
கூற்றன் இல்லா வாழ்வு கொண்டானடீ (கும்மி)

7. **உள்ளது நான் அருணு சலமே** - என்னும்
உண்மைகண் டெல்லாம் மறந்தானடீ
கள்ளமாய் உள்ளம் கவர்ந்தரு - ணுசலன்
காதல் அளித்தே நிறைந்தானடீ (கும்மி)

8. ''ஏட்டு படிப்பினில் என்ன சுகம்?'' - என்றே
ஏகான்ம நிஷ்டையில் ஆழ்ந்தானடீ
வீட்டில் இருப்பது வீண் எனவே - கண்டு
விண்ணரு ணுசலம் வந்தானடீ (கும்மி)

9. ''எந்தையைத் தேடிக் கிளம்பிவிட்டேன்'' என்
றெழுதி வைத்தான் ; பிரி வாற்ருனடீ
தந்தையிடம் தன்னை ஒப்புவித்தே - சிவ
சாம்ராஜ்யச் செங்கோலை ஏற்ருனடீ (கும்மி)

10. ஊனுடல் யாவும் மறந்தானடீ - நிஷ்டை
ஊன்றி உலகைத் துறந்தானடீ
ஆன்ம சமாதியில் ஆழ்ந்தானடீ - **பா**
**தாளலிங் கத்**தில் அமர்ந்தானடீ (கும்மி)

11. தீவிடப் பூச்சிகள் தின்றதடீ - ரத்தம்
சீழும் உடலில் வடிந்ததடீ
சாவைக் கடந்தவன் அல்லவோடீ ! இவை
சற்றும் தெரியா திருந்தானடீ (கும்மி)

12. பற்பல நாள் **குரு மூர்த்தத்**திலும் - பின்
**பவளக்குன் றுவிரு பாக்ஷியி**லும்
அற்புத மோன அகண்டச மாதியில்
ஐயன் அழுந்தி யிருந்தானடீ (கும்மி)

13. தானே அனைத்தும் எனத்தெளிந்தே - குரு
**தக்ஷிணு** மூர்த்தம் விளங்கிற்றடீ
வானம் புவியும் **பகவான்ர - மண**
**மகரிஷி** என்றே வணங்கிற்றடீ (கும்மி)

14. அன்னை அழகம்மை தம்பியரும் - ரம
ணப்பன் அடிக்கே அடைந்தா ரடீ
தன்னை அடைந்த ஜகமனைத்தும் - காக்கும்
ஸ்வாமி அனைவர்க்கும் சொந்தமடீ (கும்மி)

15. **கந்தாசி ரமத்தி** ருந்தாரடீ - அன்னை
கைவல்யம் எய்தப் புரிந்தாரடீ
தன்தாயைப் **பாலித் தடாகத்**த - ருகேச
மாதிசெய் தங்கே அமர்ந்தாரடீ (கும்மி)

16. நானிலத் துக்கெல்லாம் யாத்திரைத் - தலமாய்
**ரமணாசி ரமம்** எழுந்ததடீ
நான்எனும் ஆணவம் போக்குதடீ - ஆன்ம
ஞானப் படிவமாய் ஆக்குதடீ (கும்மி)

17. ''தன்னை அறிவதே மார்க்கமடீ - வேறு
சாஸ்திர சங்கையை நீக்கிடடீ
முன்னைப் பரம்பொருள் நீதானடீ'' - என்றே
முக்திக் கனியை அளித்தாரடீ ! (கும்மி)

18. **உள்ளது நாற்ப துபதேச சா** - ரமும்
**ஓதக்ஷ ரமண மாலை**யுமே
தெள்ளு தமிழில் அளித்தாரடீ - அதைச்
சிந்திப்ப தால் மோக்ஷம் சித்தியடீ ! (கும்மி)

19. உலகின் பவப்பிணி தீர்த்தாரடீ - அதை
உடலின் இடக்கையில் ஏற்றாரடீ
இலகும் நிர்வாணப் பொழுதினிலே - விண்ணில்
எந்தையின் **ஜோதி எழுந்த தடீ** ! (கும்மி)

20. என்றும் இதயத் திருப்பா ரடீ - **'நானார்'**
என்றால் அவரே ஸ்புரிப் பாரடீ !
அன்று மின்று மென்றும் ஆண்டவனே - நம
தான்ம சுகமாய் ரமிப்பாரடீ !! (கும்மி)

---

# 4. ஜெய ரமணு ஜெய

ஜெயரம ணுஜெய ஜெயரம ணுஜெய
ஜெயரம ணுஜெய ஜெயரம ணுஜெய

1. அருணு சலரம ணுரம ணுஅதி
கருணு கரகுரு நாயக ரமணு (ஜெய)

2. அந்தமி லின்பரு ளானந்த மேபவ
பந்த மறுத்திடும் பாபவி மோசன (ஜெய)

3. அங்கிங் கெங்கெணு தெங்குமுன் னருளொலிச்
சங்கம் பொங்கி முழங்கின தேஜெய (ஜெய)

4. அழகுஞ் சுந்தர முந்தரு கின்றபே
ரழகா யெந்தை தயாநிதி யேஜெய (ஜெய)

5. அழியாத் தொல்புகழ் பரவுப தித்திருச்
சுழியாத் தருளிய சுத்த சிவோஹனே (ஜெய)

6. அருவுரு யிவையிலா வடிநடு முடிசிவ
குருவுரு வெனவள ருறுரம ணுஜெய (ஜெய)

7. அப்பா நிற்கடி யேனெனு மடியவர்க்
கெப்போ துந்துணை யான பராபர (ஜெய)

8. அற்றது மனமெனில் நானது வாமென
சொற்றரு கின்ற சுயஞ்சுட ரேஜெய (ஜெய)

9. அடாது செய்தன ரேனும்நின் னடிபடில்
விடாது தண்ணருள் ஈகுவை யேஜெய (ஜெய)

10. அருணு சலமெனு மொருமொழி யாலெழும்
குருநா தனேசிவக் கோமள மலரே (ஜெய)

11. அண்ண னுரைத்த மொழிச்செவி புகவருட்
திண்ண முளைத்தனே தேசிக னேஜெய (ஜெய)

12. அறையணி நல்லூர் ஆலயச் சோதிகொள்
மறைமுடிப் பொருளே மஹாசிவ னேஜெய (ஜெய)

13. அரைநொடி தன்னிலே யணிதலை யுறுமெழில்
விரைமுடி வீசிய வீரனே ரமணு (ஜெய)

14. அழியாத் திருவளர் பாலசந் யாசிப்பேர்
மொழிவா ரமுதச்சின் மோனமே ரமணு (ஜெய)

15. அங்க மறந்த தவத்தொடு பாதாள
லிங்கம் பின்னமர்ந் தொளிர்நின் மலனே (ஜெய)

16. அடவிக் கலைதருங் குளவிவண் டெறும்பொடு
விடவர விடையும்பொன் மேனி மறந்தவா (ஜெய)

17. அன்பொடு நிலவுசே ஷாத்ரி சுவாமிகள்
தம்பியெனத் திகழ்ந்த தற்பர னேஜெய (ஜெய)

18. அகலா தென்றுமே பழனி சுவாமிகள்
மிகவே புரந்திடும் மெய்யவ னேஜெய (ஜெய)

19. அந்தண லேஸ்ரீ பிராமண சுவாமியாய்ச்
சுந்தரப் பெயரணி சோபன வடிவனே (ஜெய)

20. அவநா சத்துழ லெமக்கருள் செயுமிளந்
தவரா ஜத்தலை வாசிவ ரமணு (ஜெய)

21. அத்தனென் றேயறிந் தழியா வன்புறு
முத்தண் டியாருப சரித்தவ னேஜெய (ஜெய)

22. அருகாத் தவமுட னன்றுசி வோஹமாய்க்
குருமூர்த் தங்கொளுங் கோவண ரமணு (ஜெய)

23. அதிபணி புரியணு மலைத்தம் பிரானிடம்
''இதற்கிது தொண்டென்'' றெழுதிய வாஜெய (ஜெய)

24. அன்றுல கோரணு காச்செம் பவளக்
குன்று விளங்கிய குகனே ரமணு (ஜெய)

25. அன்னை விடுங்கணை யாசைக் கசலமாய்
முன்னமோர் மோன முணர்த்திய முதலே (ஜெய)

26. அந்த மிகுந்த சுனைப்பிர வாகமாய்
ஸ்கந்தாஸ் ரமமுறைக் கற்பக ரமணு (ஜெய)

27. ஆபா சக்களை யற்றுச்சின் மயமாய்வி
ரூபா க்ஷக்குகை மேவிய ரமணு (ஜெய)

28. ஆசா பந்தமோ டன்னை யணுகிடவே
பேசா துள்ளுறைப் பெருமா னேஜெய (ஜெய)

29. ஆருஞ் சதமில்லை ஐயநீ எனும்தா
யாரும் மகிழ்ந்திட அருள்செய்த ரமணு (ஜெய)

30. ஆலெனத் தழைத்தவ னேயக்ஷ ரமண
மாலை யளித்த மகாகுரு வேஜெய (ஜெய)

31. ஆங்கிலர் மேற்றிசை யன்ப ரெலாமடிக்
கேங்கி வணங்கிடு மெந்தை யேஜெய (ஜெய)

32. ஆகவே அடியவ ரெனத்தொண் டுறவரும்
நாகசுந் தரர்க்கருள் நல்கிய ரமணு (ஜெய)

33. ஆற்ரு வுடற்பிணி யன்னையின் துன்பற
மாற்ரு நின்ற மருத்துவ னேஜெய (ஜெய)

34. ஆத்ம நிதிக்குவை யன்னைக் கீந்துஸ்ரீ
மாத்ரு பூதேஸ்வர ராக்கிய ரமணு (ஜெய)

35. ஆசிர மத்தி லமர்ந்தெனக் குன்பத
தூசி யளித்துத் துணைபுரி பவனே (ஜெய)

36. ஆரா ரெம்மதமெவ் வருண மெனினும்
பேரா தருள்தரும் பெற்றிய னேஜெய (ஜெய)

37. ஆவ லெழுந்துன தடியினில் கணபதி
மாமுனி வாழ்த்தும் மஹாநிதி யேஜெய (ஜெய)

38. ஆனந் தச்சுனை யூற்றெழ எழுநட
ஞனந் தர்புகழ் சொல்லணி ரமணு (ஜெய)

39. ஆர்வக் கனிமுகவைக் கண்ண முருகஞர்
கோர்வைப் பாமலர் சூடிய ரமணு (ஜெய)

40. உள்ளது கொள்ளென உள்ளமைதி யுடனே
கள்ளர்க் குரைசெய்த கருணு ரமணு (ஜெய)

41. உளக்கவலை யுறுமக் கள்வர்க் குதவியாய்
விளக்கொளி யீந்திட்ட வேங்கட ரமணு (ஜெய)

42. உருவறி யாத திருடரிட மோர்துடைக்
கிருதுடை யிலுமடி யெனமொழிந் தவனே (ஜெய)

43. உச்சிக் கணிதரும் உனதிரு திருவடி
மெச்சித் தினந்தொழும் என்னுயிர் ரமணு (ஜெய)

44. உண்டோ வுண்மையி லெனக்குநின் னருளென
திண்டா டியஎனைத் தேற்றிய ரமணு (ஜெய)

45. உப்புப் பதுமைய தாகவே யெனையரு
ளப்பிற் கரைத்திடு மையனே சிவமே (ஜெய)

46. உத்தர கிரிபனி யுச்சியி லுறையரு
ளத்தனென் றறிந்தவர் ஆர்த்திடு மரசே (ஜெய)

47. உண்மை யுணர்த்தவே சற்குரு நாதனுய்
அண்மையி லுற்றவென் அம்மையே ரமணு (ஜெய)

48. உங்கண் டத்தொனி யாலெனை மோதியே
டங்டங் டங்கென தாண்டவ மாடிய (ஜெய)

49. உடலதிர்ந் திடப்பயப் படுமெனைத் தாயென
உடன்வந்து தேற்றிய வுறுதியே ரமணு (ஜெய)

50. உதவா தோடிய என்னையு னண்டையில்
இதமா யழைத்தரு ளீந்திடு ரமணு (ஜெய)

51. உற்றெனைச் சுற்றிய பற்றுகள் பொடிபட்
டற்றிட வாற்றிடு மற்புத ரமணா (ஜெய)

52. உறவா யானுல கோரைஎண் ணாதுனை
மறவா திருக்க வரந்தரு மகிபா (ஜெய)

53. உலவா வின்ப சுகந்தர வேயருணை
மலைவா ழமுத மருந்துரு வேஜெய (ஜெய)

54. உனைவந்து பணிவோர்க் குண்மை யுணர்த்த
தனையாய்ந் திடச்சொலும் சற்குரு ரமணா (ஜெய)

55. மறுவில் லாபர மான்ம சொரூபமாம்
திருவடி யன்பர்க் கருள்செயும் ரமணா (ஜெய)

56. மங்கள வதன மஹாகுரு ரமணா
எங்கும் இன்னருள் இறைத்திடும் இறைவா (ஜெய)

57. மண்ணகம் விண்ணகம் வணங்கிட வடியவர்
கண்ணெனப் போற்றிடும் அண்ணலே ரமணா (ஜெய)

58. மத்தக வெறிசெறி யத்தியி னலைதரும்
பித்தனெனைப் பிடித்த சித்தனே ஜெயஜெய (ஜெய)

59. மங்கா ஞான மணிச்சுட ரொளிமலி
எங்கரு ணாகர இறைகுரு ரமணா (ஜெய)

60. மலிதருங் கருணையால் வந்தென தகத்துட்
பொலிதரும் அருணா சலரம ணாஜெய (ஜெய)

# 5. ரமண தேவா

1. அண்ணுமலை தன்னிலே - ரமணதேவா
அமர்ந்திருக் கும்மரசே - ரமணதேவா

2. ஆனந்த மானவாழ்வை - ரமணதேவா
அடியேனுக் கருள்செய்வாய் - ரமணதேவா

3. இருளில மிழ்ந்தவென்னை - ரமணதேவா
எடுத்தணைத் தேன்றுகொண்டாய் - ரமணதேவா

4. ஈட்டிடவந் தேனுன்னை - ரமணதேவா
ஈந்திடுவுந் தன்னருளை - ரமணதேவா

5. உண்மைவடி வாயுள்ள - ரமணதேவா
ஒப்பில்லா வுட்பொருளே - ரமணதேவா

6. ஊன்றுகோ லானவரே - ரமணதேவா
உன்சேயென்னை ரக்ஷிப்பாய் - ரமணதேவா

7. எங்கும் நிறைந்திருந்தே - ரமணதேவா
ஏகமா யானவரே - ரமணதேவா

8. ஏக்கம் நிறைந்தஎன்னை - ரமணதேவா
இன்பம் அடையச்செய்வாய் - ரமணதேவா

9. ஐயமில் லாமலுனை - ரமணதேவா
அடைந்திட வேண்டுமப்பா - ரமணதேவா

10. ஒதுக்கிட முன்கழல்தான் - ரமணதேவா
ஒடுங்கிட வைப்பாயென்னை - ரமணதேவா

11. ஓடமென் மேலமர்ந்தே - ரமணதேவா
ஓட்டுவா யுன்வழியில் - ரமணதேவா

12. ஔடத மாயிருந்தென் - ரமணதேவா
அகப்பிணி தீர்த்துவைப்பாய் - ரமணதேவா

13. கண்டோரெல் லாம்வணங்க - ரமணதேவா
காட்சி கனிந்தளிக்கும் - ரமணதேவா

14. காதல்மி குந்ததந்தோ - ரமணதேவா
கண்டு மகிழவுனை - ரமணதேவா

15. கிணற்றில் விழுந்தவென்னை - ரமணதேவா
கணத்தினில் கரையிலிட்டீர் - ரமணதேவா

16. கீதமுன்மேல் பாடுகின்றேன் - ரமணதேவா
கீழ்மைதனைப் போக்கிடுவாய் - ரமணதேவா

17. குகனையீந் திட்டகோனே - ரமணதேவா
குழந்தையெனை யணைப்பாய் - ரமணதேவா

18. கூசாதென்னை யுன்னுடன் - ரமணதேவா
கூட்டிட வேண்டுமப்பா - ரமணதேவா

19. கெஞ்சிடுகின் றேனுன்னை - ரமணதேவா
கதியெனக் காருமில்லை - ரமணதேவா

20. கேட்டதெல் லாமளிக்கும் - ரமணதேவா
மாட்டினே னுன்வலையில் - ரமணதேவா

21. கைத்தலென் றென்றுமில்லா - ரமணதேவா
    தித்திக்கும் பேரமுதே - ரமணதேவா

22. கொல்லாமை வேண்டுமென்றே - ரமணதேவா
    சொல்லாமற் சொல்லுகின்ற - ரமணதேவா

23. கோவிலெந் தன்னிதயம் - ரமணதேவா
    கூடிட வாருமங்கே - ரமணதேவா

24. கௌபீன மணிந்தவரே - ரமணதேவா
    காந்த மிகுந்தவரே - ரமணதேவா

25. சரணுய்வந் தடைந்தோர்க்கு - ரமணதேவா
    சற்குரு வானவரே - ரமணதேவா

26. சாந்தமி குந்தவுந்தன் - ரமணதேவா
    காந்தியை காணவேண்டும் - ரமணதேவா

27. சின்னஞ் சிறுவயதில் - ரமணதேவா
    சின்மய மானவரே - ரமணதேவா

28. சீலனென் னுமடியில் - ரமணதேவா
    சீராட்ட வேண்டுமப்பா - ரமணதேவா

29. சுத்தசி வோகங் கொண்ட - ரமணதேவா
    முக்தி முழுப்பொருளே - ரமணதேவா

30. சூரியன் போலருளே - ரமணதேவா
    சொகுசுட னிறைக்கின்றீர் - ரமணதேவா

31. செத்திடநான் பயந்தேன் - ரமணதேவா
செல்வனெனைச் சேர்ந்திட்டீர் - ரமணதேவா

32. சேவடிமே லிச்சைகொண்டேன் - ரமணதேவா
சேயேனெ னக்களிப்பாய் - ரமணதேவா

33. சைவசின் மயமேவென் - ரமணதேவா
சாகா வரமளிக்கும் - ரமணதேவா

34. சொல்லி விளக்கவுனை - ரமணதேவா
சொற்களுண் டோவுலகில் - ரமணதேவா

35. சோதியுள் சோதியாக - ரமணதேவா
ஜொலிக்கும் சுயஞ்சுடரே - ரமணதேவா

36. சௌந்தரன் பெற்றெடுத்த - ரமணதேவா
ஜகத்துக்கெல் லாந்தலைவா - ரமணதேவா

37. தன்னைய றிந்திடென்று - ரமணதேவா
தானேசொல்லி விளக்கும் - ரமணதேவா

38. தாகம திகமாச்சே - ரமணதேவா
தேகமோ டுனைக்காண - ரமணதேவா

39. தினந்தினந்தின் ருலுமே - ரமணதேவா
தெவிட்டாத தெள்ளமுதே - ரமணதேவா

40. தீபமொன்றை யென்னுள்ளே - ரமணதேவா
சீராக வேற்றிவைத்தாய் - ரமணதேவா

41. துச்சமெல் லாமடங்க - ரமணதேவா
தூயநெறி காட்டிடுவாய் - ரமணதேவா

42. தூய்மைநி றைந்தநாதா - ரமணதேவா
துரியநிலை யடைந்த - ரமணதேவா

43. தெய்வங்க ளெலாம்நீயே - ரமணதேவா
உய்வதற் கொன்றருள்வீர் - ரமணதேவா

44. தேட்டமெல் லாமெற்குநீ - ரமணதேவா
வாட்டமொ ழித்தருள்வாய் - ரமணதேவா

45. தைலதா ரையைப்போல் - ரமணதேவா
தடையிலா பக்தியருள் - ரமணதேவா

46. தொல்லைகள் தீரவுன்னை - ரமணதேவா
தொழுதிட வேண்டுமப்பா - ரமணதேவா

47. தோல்வியொன் றையறியா - ரமணதேவா
சோதியா தாண்டருள்வாய் - ரமணதேவா

48. தௌவிவரும் என்னையுன் - ரமணதேவா
தாளில்விழ வேவைப்பாய் - ரமணதேவா

49. பந்தமெல் லாமறுத்து - ரமணதேவா
பரமபத மளிக்கும் - ரமணதேவா

50. பாத்திரம்நா னல்லவோ - ரமணதேவா
ஊற்றிவைக்க வுன்னருள் - ரமணதேவா

51. பின்னுமுன்னு மெங்குமே - ரமணதேவா
மேலும் கீழும்நிறைந்த - ரமணதேவா

52. பீடிகைவேண் டாமுன்றன் - ரமணதேவா
பெருமை தனைவிளக்க - ரமணதேவா

53. புகழு மிகழும்வேண்டா - ரமணதேவா
பூஜிப்போ ருள்ளமரும் - ரமணதேவா

54. பூதமெல் லாம்நடுங்க - ரமணதேவா
பூரண ஜோதியானாய் - ரமணதேவா

55. பெறற்கரும் பேரருளே - ரமணதேவா
பெற்றிட வேண்டுமுன்னை - ரமணதேவா

56. பேதமில் லாதவரே - ரமணதேவா
பேதையென்னை ரக்ஷிப்பாய் - ரமணதேவா

57. பையபைய வேயென்னை - ரமணதேவா
பாதத்தில் சேர்த்திடுவாய் - ரமணதேவா

58. பொதுவாக எல்லோர்க்கும் - ரமணதேவா
போதத்தை யளிப்போனே - ரமணதேவா

59. போக்கிட மேதெனக்கு - ரமணதேவா
வாக்கினா லென்னசொல்வேன் - ரமணதேவா

60. ✱ பௌவம்கா ணுக்கடலே - ரமணதேவா
உயரம்கா ணுமலையே - ரமணதேவா

---

✱ பௌவம் - ஆழம்

61. மதிப்புயர் மாணிக்கமே - ரமண தேவா
மனிதகுல முய்யவந்த - ரமண தேவா

62. அம்மையப்ப னுய்நின்றே - ரமண தேவா
அடியாருக் கருள்செய்யும் - ரமண தேவா

63. காணவேண்டு மென்றஎன் - ரமண தேவா
கவலையதிக மாச்சே - ரமண தேவா

64. உன்றனரு ளைப்பெறவே - ரமண தேவா
உள்ளமுரு குதையா - ரமண தேவா

65. என்னசெய்யி னும்செய்க - ரமண தேவா
எல்லாமுன் னிச்சைதானே - ரமண தேவா

66. வாழ்கநின் மலரடிகள் - ரமண தேவா
வாழ்க நின் கழலடிகள் - ரமண தேவா

67. † அறுபத்தே ழாண்டுகள்போல் - ரமண தேவா
அளித்திடுன் னருளையள்ளி - ரமண தேவா

68. எழுபதாண் டுகள்போல் - ரமண தேவா
இறைத்திடுன் னருளையின்னும் - ரமண தேவா

ரமண தேவா ஸ்ரீ ரமண தேவா
ரமண தேவா ஸ்ரீ ரமண தேவா

---

† அறுபத்தே ழாண்டுகள் போல் - ஸ்ரீ ரமண பகவானுக்கு 67-வது வயதில் இப்பாடல் இயற்றப்பட்டதால் அவ்விதம் குறிக்கப்பட்டது. பிறகு ஸ்ரீ பகவான் 70-ம் ஆண்டில் ஆக்கை நீங்கியதால் கடைசி அடி ''எழுபதாண்டுகள் போல்'' என்று பிற்சேர்க்கை யாக்கப்பட்டது.

# 6. ஸ்ரீரமண நாம மகிமை

('பஜகோவிந்தம்' என்ற பாடலின் மெட்டு)

**இராகமாலிகை** **தாளம் : ஆதி**

ரமணா யநமோ ரமணா யநமோ
ரமணா யநமோ நமவென்போம்
கமலா சனனொடு கார்முகில் போற்றும்
அருணா சலசிவ மாகிய பகவான் (ரம)

1. குருநா மத்திற் கோரிணை யுண்டோ ?
கூறு நாவிற் கிகபர முண்டோ ?
அருளா லுலகிலா காதது முண்டோ ?
ஆசான் கருணைக் கையமு முண்டோ ? (ரம)

2. எல்லாப் பிறவியு மேற்றுமு டித்தே,
இறுதிப் பிறவியிற் குருவைய டுத்தே,
கல்லாக் கலையித யத்திற்ப டித்தே,
கதிபெறு வோம்குரு கழலைப்பி டித்தே (ரம)

3. சாத்திரம் வேதமெல் லாம்பெருந் தொல்லை,
சற்குரு வார்த்தைக் கவையிணை யில்லை !
நாத்திக ருக்கொரு நாளுமுய் வில்லை,
நம்பிக் கதிபெறு வோம்குரு சொல்லை. (ரம)

4. எத்தனை யாண்டுட லோடிருந் தாலும்,
எப்பொரு ளெவ்வுற வோரிருந் தாலும்,
எற்றிய கல்தரை மேல்விழல் போலும்
இவ்வுடல் போய்விட நேருமோர் நாளும். (ரம)

5. அருள்தரும் பகவான் நாமமெந் நாவில்
அனவர தம்புகு மோவவர் பூவில்
ஒருபொழு துங்கலங் கார்வரும் சாவில்,
உண்மைக் கடவுட் கவருளங் கோவில். (ரம)

6. கேள்வி தர்க்கம், கெடுமதி வாதம்,
 கீழ்மே லுலகக் கிண்கிணி வேதம்,
 வேள்வி தருமோ மெய்ந்நிலை போதம் ?
 விரைவில ளிப்பது சற்குரு பாதம் (ரம)

7. தர்மம், தானம், தலபிர யாணம்,
 தண்டுக மண்டலந் தருமோ ஞானம் ?
 கர்மம் வாசனை பொடிபட வேணும் ;
 கைமேற் பலன்றரும் சற்குரு பாணம் ! (ரம)

8. புத்தக வித்தைப் போலிவீண் பட்டம்
 புத்திவி கற்பம் புரிபல திட்டம்,
 செத்தற் பிறத்தலின் மீட்குமோ ? நட்டம் ;
 ''ஸ்ரீரம ணு''வெனில் தீருமே கட்டம் ! (ரம)

9. வயதுமு திர்ந்தாற் பெரியவ ராமோ ?
 வல்வினை யாசை வாடைகள் போமோ ?
 பயனிலா வாழ்வை வாழ்வென லாமோ ?
 பகவா னன்றிப வப்பிணி போமோ ? (ரம)

10. பலவகை நாமோச் சாரண லாபம்,
 பற்பல நாமரூ பாதியிற் ரூபம்,
 பலனெலா மீவது ரமணமெய்த் தீபம் !
 **பற்பல தெய்வமும் சற்குரு ரூபம் !** (ரம)

11. கங்கைநீ ராடிப்போம் பாவமும் போகும் ;
 காசியைக் கண்டுறு புண்யமு மாகும் ;
 தங்குல தெய்வந் திருப்தியு மாகும்
 சற்குரு நாமமி தெல்லா மீகும் ! (ரம)

12. 'இவ்வித மிகபர மெய்துவ மின்பம்'
 என்றுபொ ருட்குவை சேர்ப்பது துன்பம் ;
 ஒவ்வொரு நாமமு மொருபொற் றம்பம் !
 உலகிலி தேமிக வுத்தம மென்போம் (ரம)

13. நரவுடல் நாமிலை ; நாமெனில் மேலை
நாளை வருவது நமன்விடு மோலை !
**'ரமணா யநமோ'** வென்றிடுங் காலை ;
நமனிடங் கூடந மக்கென்ன வேலை ? (ரம)

14. காண்பன யாவுங் காலன் கையில் !
கர்மத் தீப்பல ஞேகொடும் வெய்யில் !
வீண்துயர் யாவுமொ ழிந்திடும் மெய்யில்,
விடாது **ரமணா** வெனஜெபஞ் செய்யில் (ரம)

15. புத்தித் திறனே புகழே பொருளே
புண்யங் கல்வியி தெல்லா மிருளே
சித்திக ளுந்தன் சிந்தையின் மருளே
ஸ்ரீரம ணப்பெயர் செப்புவ தருளே (ரம)

16. பீடம் பெருமை பேர்மிகு வண்மை
பெறுவத னுலு(ம்)ந மக்கென்ன நன்மை
**மேடைப் பேச்சு விளக்குமோ வுண்மை ?**
மேன்மேல் துதிக்கவி ளங்குதற் றிண்மை ! (ரம)

17. மூச்சையி முத்தும் பேச்சைய டைத்தும்
மூளைக் குழப்ப மாகிக்கு தித்தும்,
சூக்ஷ்மங் காணுர் துயரே படுத்தும் ;
**சொன்னுற் குருபெயர், அதுவே நடத்தும் !** (ரம)

18. இகமே பரமே யிருவித சுகமே
எதுநா டினுந்தரு வதுகுரு முகமே !
மிகமிக அன்பில்வி ளங்குமவ் வகமே
வேண்டுவ தருவது குருகற் பகமே ! (ரம)

19. ✱செய்வினை சேர்வினை பார்வையாற் றீர்ப்பார் !
சிதையா வூழ்வினைச் செயலறக் காப்பார் !
**மெய்யினை 'நாம்'எனும் மயக்கமுந் தீர்ப்பார் !**
விளையாட் டாயரு ளமுதமும் வார்ப்பார் !! (ரம)

---

✱ செய்வினை = ஆகாமியம்; சேர்வினை = சஞ்சிதம்; ஊழ்வினை - பிராரப்தம்

20. கோடியு கஞ்செய் தவவலி வதனைக்
குருவருட் பார்வையே கூட்டிடும் ! இதனை
நாடிய றிந்தோர் பாடுவ தெதனை,
''ரமணா யநமோ நம''வென் பதனை ! (ரம)

21. ஊமையின் நாவும் உயிர்க்கவி பாடும் !
ஊனக் காலும் மலைகடந் தோடும் !
தீமைக் கர்மவி டக்கொடி வாடும் !
**ஸ்ரீரம ணன்னரு ளாலிது கூடும் !!** (ரம)

22. எளியனுங் குருவரு ளாற்கடைத் தேறும் !
இரவியு மவரா லேதிசை மாறும் !
களிமண் தங்கக் கட்டியாய் மாறும் !
கடைமனம் ப்ரம்மா காரமாய்த் தேறும் !! (ரம)

23. பண்டிதர் பேசும் பாலுந் திணையும்
பரஞா னக்குரு வருளால் மறையும் !
அண்டிய பக்தர கத்தோ டிணையும்
அருட்குரு வேநமக் காவியுந் துணையும் ! (ரம)

24. 'முப்புடித் வந்தம், மூலவ கந்தை,
முப்பிறப் பின்பல வாசனை சிந்தை,
எப்படி யழியும்?' எனிலது விந்தை !
இறைகுரு **ரமணனன் ஸ்ரீநம் தந்தை !** (ரம)

25. சென்னாட் பலநாம் செய்துள கர்மம்
தீரப் பலயுக மாம்,அது மர்மம் !
இந்நாள் குருவரு ளெய்திடிற் ஜென்மம்
இல்லா தொழியும்! **இதுகுரு தர்மம் !!** (ரம)

26. கையா ளீந்திக் கடல்கடப் போமோ ?
ககனத் தைக்கா லாலளப் போமோ ?
ஐய னருளா லன்றியி தாமோ ?
**அருணா சலரம ணாநம ஓம்ஓம் !!** (ரம)

27. மானிட தேகமெ டுத்தசற் குருவை,
வானம டங்கா விச்வப்பே ருருவை,
ஞானம காநிதி ஞாயிறின் விரிவை,
**நாமென் னறிவோம் ரமணசற் குருவை** (ரம)

28. நம்மேல் நாம்கொள் கவலைபோல் கோடி
நாதன் குருகொண் டுள்ளார் தேடி;
நம்முள் **ளகமக** மெனவே யாடி
நம்மொடுந் தரணியில் வாழ்ந்தார் கூடி ! (ரம)

29. உலகோர் கடவுள் இலையெனும் போது
உதித்தாய் நீரம ணுபுவி மீது !
அலகிலா நின்னருட் குறிதப் பாது !
**ஆன்மக் கலையிற் கழிவினி யேது ?** (ரம)

30. அருணு சலமிசை யப்பா வுன்னை
யடைந்தேன், துயரடை யாதினி பின்னை ;
குருநா தன்பணிக் கென்றுளந் தன்னைக்
கொண்டருள் வாயுனக் காளா வென்னை ! (ரம)

# 7. நெருப்புப் பாட்டு

நெருப்பிது காணுல கீரே - சாக
நேச முள்ளாரிதை விட்டகலீரே (நெ)

1. நெருப்பு மலேயுண்டு காணீர் - அந்த
நெருப்பி லெழுந்த ரமண நெருப்பு
விருப்பில் விளேந்த நெருப்பு - ஆன்ம
வேட்கை நெருப்பை விளேக்கும் நெருப்பு. (நெ)

2. வித்தக மான நெருப்பு - ஞான
வேட்கையர்க் கான விமல நெருப்பு
சத்திய மான நெருப்பு - தன்னேச்
சார்ந்தோரைக் காக்கின்ற சாந்த நெருப்பு. (நெ)

3. இருப்புள முருக்கும் நெருப்பு - பக்தர்
இச்சையுள் ளூறி எரியும் நெருப்பு
கருப்புக் கலவா நெருப்பு - எனேக்
கண்ணுக்குக் கண்ணுகக் காக்கும் நெருப்பு. (நெ)

4. சற்று முறங்கா நெருப்பு - தூக்கம்
ஜாக்கிரம் சொப்பன மில்லா நெருப்பு
பற்றிடும் பக்தி நெருப்பு - பாவ
பந்த வினேச்சுடும் பரம நெருப்பு. (நெ)

5. ஏழைக் கிதமாம் நெருப்பு - எனே
என்றும் பிரியா திருக்கும் நெருப்பு
ஊழை எரிக்கும் நெருப்பு - உலகத்
தூரர் அணுகாத உண்மை நெருப்பு. (நெ)

6. பாச மெரிக்கும் நெருப்பு - பரி
பக்குவ மீயப் பரிந்த நெருப்பு
வீசிப் பரவும் நெருப்பு - அருள்
வேண்டுவா ருள்ளே விளங்கும் நெருப்பு. (நெ)

7. நாசப் படாத நெருப்பு - யோகம்
நாடுவார் நாடியுள் நாடும் நெருப்பு
ஆசை எரிக்கும் நெருப்பு - அன்பர்க்
காதர வாகி அணையா நெருப்பு. (நெ)

8. அன்பில் விளைந்த நெருப்பு - அன்பர்
ஆசைக்குள் ளாசையாம் அன்பு நெருப்பு
துன்ப மெரிக்கும் நெருப்பு - தன்னைத்
தொட்டவ ராணவம் சுட்ட நெருப்பு. (நெ)

9. இன்பச் சுடராம் நெருப்பு - தீனர்க்
கெவ்வகை யும்இன்பம் ஈயும் நெருப்பு
வன்பர்க் கிலாத நெருப்பு - புலை
வாடையர்க் கெட்டாத வான நெருப்பு. (நெ)

10. பிடித்தால் விடாத நெருப்பு - உலகப்
பேயால் அணைக்கப் படாத நெருப்பு
வடித்த வடிவாம் நெருப்பு - எல்லா
வாதையும் போக்கிட வல்ல நெருப்பு. (நெ)

11. நினைத்தால் பிடிக்கும் நெருப்பு - நெஞ்சம்
நெக்குற அன்பால் நெகிழ்த்தும் நெருப்பு
சினத்தை சிதைக்கும் நெருப்பு - எனைச்
சிறிதும் விடாதோங்கும் தெய்வ நெருப்பு. (நெ)

12. தளர்வை தகிக்கும் நெருப்பு - மூண்டு
தாண்டவ மாடிடும் தைர்ய நெருப்பு
களவைக் கரிக்கும் நெருப்பு - ஒரு
கறையும் புகவிடாக் கடவுள் நெருப்பு. (நெ)

13. அளவுக் கடங்கா நெருப்பு - பிண்ட
அண்ட ரண்டமுந் தானான நெருப்பு
விளைவைக் கொடுக்கும் நெருப்பு - ஞான
வீரந் தரும்பரி வார நெருப்பு. (நெ)

14. வேதாந்த மூர்த்தி நெருப்பு - என்னுள்
விளக்கேற்றி வைக்க வெழுந்த நெருப்பு
ஆதாரந் தானும் நெருப்பு - தனக்
கன்னிய மில்லாத ஆத்ம நெருப்பு. (நெ)

15. வேகங் குறையா நெருப்பு - முழுதும்
வேகவைக் காமல் விடாத நெருப்பு
ஏக மயமாம் நெருப்பு - சற்றும்
ஏங்க விடாதெனைத் தாங்கும் நெருப்பு. (நெ)

16. ஊட்டம் மிகுந்த நெருப்பு - என்றும்
ஊர்த்துவ மாக உயர்ந்த நெருப்பு
தேட்ட மறுக்கும் நெருப்பு - என்றன்
தேவை வடிவாய்ச் செழித்த நெருப்பு. (நெ)

17. நல்லார்க்கும் நல்ல நெருப்பு - ஞானம்
நாடாரை நாடாத ஞான நெருப்பு
இல்லார்க் கிரங்கும் நெருப்பு - அவர்க்
கெப்போதும் ஆனந்த மீயும் நெருப்பு. (நெ)

18. இச்சை யிலாத நெருப்பு - நல்ல
இச்சைகள் யாவையும் ஈயும் நெருப்பு
அச்ச மில்லாத நெருப்பு - தன
தன்பர்க் கருந்துணை யான நெருப்பு. (நெ)

19. மிளிர விளங்கும் நெருப்பு - திரு
மேனிக் கதிர்விடும் யோக நெருப்பு
துளிர்விட் டெரியும் நெருப்பு - நம்பால்
துரிய ஒளிதரும் தூய நெருப்பு. (நெ)

20. குறையாத ஞான நெருப்பு - உலகச்
குளிரழிக் குங்குரு தேவ நெருப்பு
இறையாக நின்ற நெருப்பு - ஏழை
என்னைவிட மன மில்லா நெருப்பு. (நெ)

21. ஒளிக்கெல்லாம் மூல நெருப்பு - உள்ளே
ஊறிஊ றிக்கன லூட்டும் நெருப்பு
வெளிக்கு விளங்கா நெருப்பு - வெட்ட
வெளியாக்க வேவந்த வேக நெருப்பு. (நெ)

22. பாவன மான நெருப்பு - பரி
பாகம் செயும்பக்தி யாக நெருப்பென்
ஜீவன மான நெருப்பு - என்னுட்
ஜீவ நெருப்பு சுபாவ நெருப்பு. (நெ)

23. தேவர்கள் நாடும் நெருப்பு - உலகச்
சிறுமைகள் ஒன்றிலும் சேரா நெருப்பு
பூவுல கோங்கும் நெருப்பு - சிவ
போக வடிவான புண்ணிய நெருப்பு. (நெ)

24. எளியேனி னிச்சை நெருப்பு - எனக்
கின்றி யமையாத ஏக நெருப்பு
ஒளியெனக் கூட்டும் நெருப்பு - ஒன்றும்
ஒளிக்கா துணர்த்திட வுற்ற நெருப்பு. (நெ)

25. தேடிய தேட்ட நெருப்பு - தானே
சிற்சுக மான சிவோஹ நெருப்பு
வாட விடாத நெருப்பு - அடிமை
வாங்கிக் கொண்டென்னை வளர்க்கும் நெருப்பு. (நெ)

26. சுற்றி யெரியும் நெருப்பு - சற்றும்
தூர விடாத துணையாம் நெருப்பு
பற்றிப் பரவும் நெருப்பு - எனைப்
பாக்கி யிலாபஸ்ம மாக்கும் நெருப்பு. (நெ)

27. சூழ்ந்து ஜ்வலிக்கும் நெருப்பு - சற்றுஞ்
சோம்பாம லன்பரைத் தூக்கும் நெருப்பு
ஆழ்ந்த அறிவு நெருப்பு - யார்க்கும்
ஆழங்கா ணவொண்ணு ஆன்ம நெருப்பு. (நெ)

28. ஆடா தெரியும் நெருப்பு - ஆடி
ஆடியே ஆணவ மோட்டும் நெருப்பு
ஈடேது மில்லா நெருப்பு - ரம
ணேச னெனும்பவ நாச நெருப்பு. (நெ)

29. எனேச்சர ணேற்ற நெருப்பு - எனே
எவ்விதத் துங்காக்கும் செவ்வி நெருப்பு
வினைக்கெதி ரான நெருப்பு - மூ
வினைகளை வீழ்த்தும் விசேஷ நெருப்பு. (நெ)

30. தவக்கன லான நெருப்பு - எனேத்
தாஞுக்கிக் கொள்ளும் தயாள நெருப்பு
சிவச்சுயஞ் சோதி நெருப்பு - குரு
தேவ நமோரம ணுய நெருப்பு. (நெ)

# 8. பாப்பாப் பாட்டு

**காப்பு**

பாப்பாவி னோடு பகவான் ரமணதுதிப்
பாப்பாட வேகடைக்கண் பார்ப்பானே - சாப்பாடா
நாப்பாட நாம(ம்) நடுநாட வுள்ளமென்றன்
காப்பாய வேழமுகன் காண்.

**நூல்**

இராகம்-புன்னுகவராளி தாளம்-ஆதி

1. ஞானக் குழந்தையடீ நல்லபாப்பா-நீ
ரமணா ரமணாவென்று சொல்லுபாப்பா
ஆனந்த மாகஜெபித் தாடுபாப்பா-சிவன்
அவரே நம் தந்தையடீ யன்புப்பாப்பா.

2. குற்றமில் லாதமனங் கொண்டபாப்பா-நீதான்
குருவைக்கண் டுய்வடையக் கூடும்பாப்பா
மற்றவர் வயதுமுதிர் வெய்திபாப்பா-வீண்
வாதம் புரிவாரடீ வண்ணப்பாப்பா.

3. சச்சிதா னந்தமுடற் ருங்கிநடந்தே-யிந்தத்
தரணியில் வந்ததடி தங்கப்பாப்பா
அச்சுத னயனர னுயமூவரும்-அதற்
கயலாகா ரென்றுதெளிந் தாடுபாப்பா.

4. அண்ணா மலையினவ தாரமேயடீ-**அரு
ணாசல ரமணன்**அவன் நாமம்பாப்பா
கண்ணாரக் கண்டதோர் கடவுளிவரே-மற்றுங்
கடவுளெவ் விதங்கண்ணிற் காணும்பாப்பா ?

5. யாருங் குருவில்லாம லாத்மஞானியாய்த்-தானே
யவனிக்கெல் லாங்குருவா யாஞன்பாப்பா
சேருந் தொண்டர்களையந் தீர்ந்துதெளியும்-படி
திவ்ய திருஷ்டியருள் செய்வான்பாப்பா.

6. இருந்த படியிருந்தே யுலகமெல்லாந்-தன்பால்
இழுத்தருள் செய்தபர மேசன்பாப்பா
அருந்தவஞ் செய்தடையு **மாத்மஞானமே**-கைமேல்
**அதிசுல பமா**ய்த்தரும் அண்ணல்பாப்பா.

7. கண்ணு லறிவுதருங் கண்ணன்பாப்பா-நம்
கருத்தைத் திருத்துமதி காரன்பாப்பா
உண்ணுடி நில்லாதெங்கும் ஓடுமனத்தை - யழித்
தோங்கு மவுனவுப தேசன்பாப்பா.

8. நரப்பசு வாகிவந்து நம்மைவிழுங்கும்-சிவ
ஞானப் புலிரமண நாதன்பாப்பா !
உருப்பெறுந் தெய்வமிதை யுன்னிடிலகங்-கார
மொழித்து சுகவுணர்வை யூட்டும்பாப்பா.

9. தேகம் படைத்தபயன் சிவோஹமென்றே - யுளந்
தெளிதலே யென்றருளுந் தெய்வம்பாப்பா
**கோஹம் விசாரப்படை** கொண்டுயிருடன் - இவன்
கொல்லாமற் கொல்லுங்குரு தேவன்பாப்பா.

10. தன்னை யறிந்தமருந் தந்திரத்தையே - இந்தத்
தரணிக் கருளுந்தெய்வத் தந்தைபாப்பா
**முன்னை மறைப்பொருளை முத்துப்போலவே - தமிழ்
மொழியி லளித்தகுரு மூர்த்தி**பாப்பா.

11. நினைப்பு மறப்புறக்கம் நின்றபொழுதே - தன்
நிஜத்தை யுணர்த்தும்ரம ணேசன்பாப்பா
வினைப்பயன் மீதிலழல் விழியுறுத்தி - யவை
வேக விழிக்கும்சிவ வீரன்பாப்பா.

12. ஆசைப் பறவைதொடா அன்புக்கனியாய் - நம்மை
யாக்கிப் புசிக்குந்திரு வாளன்பாப்பா
ஓசைப் படாமலுணர் வாயஹமஹம் - என்றே
யுள்ளே விளங்குமுரு வாளன்பாப்பா.

13. கண்ணுக் கறிவளித்துக் காணுமனத்தை - உறங்
காமலே கண்டிருக்குங் கண்ணன்பாப்பா
எண்ணுக்குள் ஒன்றுபோலே யின்றியமையா - அறி
விருப்பா யிருக்குமவன் ஏகம்பாப்பா.

14. உனக்கு மெனக்குமுடற் சிந்தையிரண்டே - ஆனால்
உள்ளத்தில் **"நான்"**ஒன்றுதா னுண்மைபாப்பா
மனத்தை யுடலைவிட்டு வாளாவிருந்தால் - எல்லாம்
மறைந்து ரமணவடி வாகும்பாப்பா.

15. கற்று மடங்காதாரைக் காட்டிலுமிங்கே - ஒன்றுங்
கல்லாத வர்க்கெளிய கல்விபாப்பா
**பற்று மிகுந்துசித்தி பண்ணுவோரினும் - அன்பும்**
**பணிவு மிகுந்தாற்சுல பந்தான்**பாப்பா.

16. கால மிடமென்னுமோர் கட்டில்லாமலே - பெருங்
கருணை பொழியுமொளிக் கண்ணன்பாப்பா
பாலர் முதல்விருத்தப் பக்குவிகளை - எல்லாம்
பரத்திற் செலுத்தவல்ல பாகன் பாப்பா.

17. **நானொரு தேகமென்றே நம்புவதினும் - வேறு**
**நாத்திகப் புத்தியொன்று மில்லைபாப்பா!**
**நானெனுஞ் சொற்பொருளை நாடுவதினும் - வேறு**
**நல்ல தபசுமொன்று மில்லை**பாப்பா.

18. உள்ளத்தி லூறுகின்ற வுண்மையறிவைக் - கற்க
உலகின் புத்தகமுத வாதுபாப்பா!
கள்ளம் புரிமனத்தைக் கட்டியழித்தால் - ஞானங்
கையிற் கனியாய்க்காண லாகும்பாப்பா.

19. மனதை யழிப்பதற்கு வாசிப்பெதற்கோ? - பண்டை
வாசனை மாய்ப்பதற்கு வாதமெதற்கோ ?
தனதெனக் கென்றவம்பு சண்டையெதற்கோ? - இதைத்
தள்ளிவிட் டுய்வாய்சமர்த் தாகப்பாப்பா.

20. உலகறி வூட்டுங்கல்வி உயிரிலாவித்தை - இது
உன்னை யறியவுத வாதுபாப்பா !
கலக மனமெதென்று கண்டுபிடித்தால் - அங்கே
காணுஞ் சுயசொரூபக் காட்சிபாப்பா.

21. தன்னையறி யாது(அ)பர சாத்திரங்கற்ருல் - வீண
சண்டை யல்லாமலேது சாந்திபாப்பா ?
தன்னை யறிந்தடங்கிற் சாத்திரத்திலே - மீண்டும்
சந்தேகம் ஏதுமுதிக் காதுபாப்பா.

22. **பேரறி வைப்புகட்ட மேடைமேடையாய் - ஏறிப்**
**பேசிப் பிரயோசனம் இல்லைபாப்பா !**
**ஊரறி யாமலுள்ளத் தொடுங்கிநிற்பே! - இந்த**
**உலகுக் குணர்த்தும்பேரு பாயம்பாப்பா.**

23. மோனத் திருந்தகந்தை முளைத்தபின்னே - எண்ணம்
முளைக்கும் ; மொழிபிறகே முளைப்பதனுல்
மோனத் திருந்தெழும்பும் மூடமழிக்கும் - சக்தி
மொழியி லிருக்கமுடி யாதுபாப்பா.

24. நான்குவகை யாகச்செய்யும் யோகங்களெல்லாம் - **போலி**
**'நான்'**ஒன் றெழாமல்நடக் காதுபாப்பா
**"யாங்குளதிந் நான்?"**எனவே நாடுவதொன்றே - யோகம்
நான்கி லுயர்ந்தநெறி யாகும்பாப்பா.

25. சத்தில்லா தேகமனச் சட்டையொழித்தாற் - பின்பு
சாவும் பிறப்பும்யாரை சாரும்பாப்பா ?
முத்தி யிதன்றியின்பம் மூவுலகிலுந் - தேடல்
மூட மயக்கமடீ மோனப்பாப்பா.

26. தன்னுள் சிவனைக்கண்டாற் சர்வவுயிரும் - சிவன்
    தானாகக் காணவேது சங்கைபாப்பா ?
முன்னமுன் னுள்ளேயக மூலமறிந்தே - நின்றால்
    முழுதுஞ் சிவசொரூப மொன்றேபாப்பா.

27. எல்லா வுடம்பினுள்ளும் எந்தைரமணன் - குடி
    யிருப்ப துணர்ந்தாலேது இம்சைபாப்பா
பொல்லாரை யும்வெறுக்கப் புத்திவருமோ - சிவ
    போதமுள் தலைப்படும் போதுபாப்பா ?

28. தானே யனைத்துமென்ற தத்துவங்கண்டால்-தான்
    தன்னலத் தியாகஞ்சித்தி யாகும்பாப்பா
நானே எழாது,ரம ணேசனெழுந்தே - செய்யு(ம்)
    நர்த்தனங் காணும்!இது ஞானம்பாப்பா

29. போற்றுவார் தங்களிடம் போதலொழிந்தே - உள்ளே
    போகப் பயின்றுகொண்டாற் போதும்பாப்பா
தூற்றுவார் தம்மாற்பாபச் சுமையனைத்து(ம்) - நீங்கித்
    தொலைந்ததென் றேமகிழ்ந்து துள்ளுபாப்பா.

30. சும்மா விருந்தாலொரு துன்பமுமில்லை - பர
    சுகமே சொரூபமடீ ஜோதிப்பாப்பா
தம்மால் விளைவதன்றி சங்கடமெல்லாம் - பிறர்
    சற்றுங்கா ரணமில்லை தங்கைப்பாப்பா.

31. அற்ப மனத்தைரம ணார்ப்பனஞ்செய்தாற் - பர
    மாத்ம சுகத்தையே யளிப்பான் பாப்பா
**பற்பல வாகியவு பாசனைக்குள்ளே - மிகப்**
    **பரம சுகிர்தம்! இதைப் பண்ணுபாப்பா !!**

32. **அருணா சலரமண** அப்பனடிக்கே - நீயும்
    அடிமைப் படுவாயடீ யன்புப்பாப்பா
குருநாதன் றனையுள்ளக் கோயிலினுள்ளே - கண்டு
    கொண்டிருக்கும் வாழ்வைக்கற்றுக் கொள்ளுபாப்பா.

(ஞானக்)

## 9. அண்ணுமலை ரமணுண்டி !

1. அண்ணு மலைரம ணுண்டி - அரு
ணுசல ணுற்பிறப் பாழியைத் தாண்டி,
கண்ணுலென் உள்ளத்தைத் தூண்டி - அருட்
காதலாற் கண்ணீரைக் கக்கவைத் தாண்டி (அ)

2. தாய்தந்தை சாமியு மாஞன் - குரு
தாரக நாமமும் தன்பெய ராஞன் ;
வாய்வந்து வாழ்த்திட வைத்தான் - வேறு
வாழ்வறு மாறென் மனத்தைச் சுவைத்தான். (அ)

3. மொட்டைத் தலையழ காலே - மன
மோஹன மோன முறுவலி ஞலே,
கட்டழன் மேனியி ஞலே - என்
கண்ணும் மனமுங் கவர்ந்தத ஞலே, (அ)

4. **"ரமண"** னெனும்பெய ராலே - அநு
ராக மெழுங்குரல் நாதத்தி ஞலே,
அமல வருட்கணை யாலே - என்னை
அடியோடு கொள்ளை யடித்தத ஞலே, (அ)

5. சிவவடி வானதி ஞலே - எல்லா
தெய்வமும் **"நான்"**என்று செப்பின தாலே,
தவவொளி தன்முகத் தாலே - கண்ணுற்
சங்கை யறவென்னைச் சந்தித்த தாலே, (அ)

6. சோண மலைப்பெய ராலே - அதிற்
சொக்கிக் கிடக்குஞ் சுகமயத் தாலே,
காண வரும்பல ராலே - "இவன்
கண்ணன்!"என் றேயாசை காட்டின தாலே, (அ)

7. பார்வை மயக்கத்தி ஞலே - திரு
பாத மலர்மது பானத்தி ஞலே,
தேர்களிற் றின்னடை யாலே - கண்டென்
சிந்தை கலங்கித் தெளிந்தத ஞலே, (அ)

8. கோவணத் தாடையி ஞலே - அருள்
கொண்டசொற் கூறிதழ்க் கோவையி ஞலே,
பூவணப் பொற்கையி ஞலே - அவன்
போதித்த பேரின்பப் போதையி ஞலே, (அ)

9. மும்மடி தன்வயி ருலே - அவன்
மூப்பிலு மிளமையே நான்கண்ட தாலே,
சிம்மகம் பீரத்தி ஞலே - குரு
**தக்ஷிண மூர்த்தித் திருவடி** வாலே, (அ)

10. இத்தனைப் பேரழ காலே! - மன
மெல்லாம் பறிபோயி னேன்அவ ஞலே !
''சத்திய மாம்பொருள் நானே'' - என்ருன்
தன்னை மறந்தவன் தன்வய மானேன். (அ)

11. ஆசையைக் காட்டி யழைத்தே - புவி
யாசைப் பிசாசை யடியோ டழித்தே,
பாச மளித்தவன் பாலே - மனம்
பற்றிய தாசைப் பயித்தியத் தாலே ! (அ)

12. மோஹன மோனச் சிரிப்பே - அவன்
முகத்தினிற் கண்டபின் எனக்கே திருப்பே ?
சாகவும் நான்துணி வுற்றேன் - இனித்
தாழ்வுவாழ் வெல்லாமென் தன்பொறுப் பற்றேன். (அ)

13. எல்லா மெனக்கென் றிருந்தேன் - உடல்
என்னுரு வென்றிட வேகற்றி ருந்தேன்;
சொல்லாமற் சொல்லி ஏமாற்றி - எல்லாச்
சொத்தும் பறித்தென்னைச் சோம்பேறி யாக்கி, (அ)

14. தன்னைப்போ லாண்டியாய்ச் செய்தான் - என்
    தாய்போல வந்து தனிப்படச் செய்தான் !
''உன்னைக் கொடு''வென்று கேட்ட.ான் - நான்
    ஓடி ஒளிந்தாலு மேவிட மாட்டான் ! (அ)

15. தன்னையே நம்பிடச் சொல்வான் - யாரும்
    தானென் றெழுந்தால்தன் சக்தியால் வெல்வான்;
என்னை விடாதவ னென்றே - யானும்
    எல்லோரை யும்விட் டவன்பின்னே சென்றேன். (அ)

16. நானெங்கும் போகச் சகியான் - தானே
    நானென் றணைந்திடும் ஞானச் சுகியான் ;
மானமும் போகச் சிரித்தான் - என்னை
    வாழவைப் பான்போல வந்து வரித்தான் ! (அ)

17. ''என்னிட மேயிரு'' என்பான் - ''வே
    றெதையும் பாராதே,நீ என்னைப்பார்'' என்பான்!
அன்னிய மில்லாத அன்பால் - இன்(று)
    அவனினும் அன்புளார் யாருளர் என்பால்? (அ)

18. யாரிட மும்விட மாட்டான்! - ''உனக்(கு)
    யார்வேண்டும் ? நானல்ல வோ?''என்று கேட்டான்
வேறிடம் வேண்டுவ தற்றேன் - என்னை
    வேட்ட ரமணன்சொல் மேன்மையைக் கற்றேன் (அ)

19. யாருங் கேளாமலே பேசி - சொல்வான்
    ''அனன்னிய மாகவே நீஎன்னை நேசி'';
பாருங் ககனமும் ஏசி, - தானே
    பயனென்று னேபர தேசிசந் யாசி ! (அ)

20. கோவண மொன்றே யுடுத்தான் - என்னைக்
    கொண்டுவாழ் வெல்லாமுங் கொள்ளை யடித்தான் ;
ஜீவன மெல்லாங் கெடுத்தான் - **''நமோ
    ஸ்ரீரம ணாய''**வே சொல்லிக் கொடுத்தான் ! (அ)

21. கண்ணும் மனமும் களிக்க - புவிக்
காதலும் வாழ்வும் கசந்து புளிக்க,
உண்ணமு தாகவி ருந்தான் - வே
றெருவ ரெனைப்பற்ற வுள்ளம் பொருந்தான் ! (அ)

22. எல்லாம் அவனென்ற போதோ - எனக்
கேதுங் குறைவில்லை என்றான்;இப் போதோ,
சொல்லாம லெங்கோ மறைந்தான்! - என்
துக்கத்தைச் சொல்லிக்கொள் வேன்யாரி டந்தான்? (அ)

23. ''என்னப்பன் என்னப்பன்'' என்றே - அழு
தேங்கித் துயரமு மெய்தின னின்றே ;
பொன்னைப் புவனத்தைக் கொண்டோ - வாழ
புத்தி யெனக்கினி போவது முண்டோ ? (அ)

24. பித்துப் பிடித்தவ னானேன் அந்தப்
பேயாண்டி யென்னைப் பிரிந்ததுந் தானே !
செத்து மடிந்தாலு(ம்) நன்றே - அருள்
தேசிக னென்முன் தெரிந்திடா வின்றே ! (அ)

25. எப்போது முள்ளவ னென்றான் - என்னை
யேமாற்றித் தன்னுரு வோடெங்கு சென்றான்?
தப்பேதுஞ் செய்துவிட் டேனோ? - அதைத்
தானெண்ணி யென்னையுந் தள்ளிவிட் டானோ?(அ)

26. தொட்டதைத் ''தூ''வென்று தள்ளான் - தொட்டுச்
சொந்த மளித்தவன், ஏனென்னைக் கொள்ளான் ?
விட்டக லாததி றத்தான் - அருள்
வெண்கதிர் வீசும்பொன் மேனி நிறத்தான் ; (அ)

27. நஞ்சமுங் கள்வருங்கூட - பொறுத்
தான்;குரு நாதன் எனைப்பிரிந் தோட
வஞ்சம் நினைத்தது மேனோ ? - மண
வாளனில் லாததோர் வாழ்வெனக் கேனோ ? (அ)

28. ஆண்டவன் பின்விட லாமோ ? அரு
ணசலன் பிள்ளையீ தாற்றிட லாமோ ?
''ஆண்டியை நம்பிட லாமோ?'' - என்றிவ்
வவனியர் ஏச அவன்கேட்க லாமோ ? (அ)

29. ஒன்றுமில் லாதானை யெண்ணி - நான்
உருகுதல் கண்டுல கேளனம் பண்ணி
நன்று நகைத்திட வைத்தான் - உள்ள
நாணமும் போகட்டும் மென்றே நினைத்தான்? (அ)

30. இப்படி யாருஞ்செய் வானே ? - தன்னை
இச்சித்த வென்னையும் ஏமாற்று வானே ?
அப்படிச் செய்திடான் ! ஐயே !! - **அவன்**
**ஆசை எழுந்துநான் அழிவது மெய்யே!!!** (அ)

31. ''நானிதோ! நானிதோ!!'' என்றே - குரு
நாத னிருப்ப துணர்ந்தாலு மின்றே
மானிட னுகவா ரானே? - பாத
மாமலர் சூட மகிழ்ந்துதா ரானே ? (அ)

32. உள்ள முடைந்தழும் போது - அவன்
ஓங்காரக் கிண்கிணி கேட்குமென் காது !
மெள்ள வவன்குரல் கேட்கும் - ஆனல்
மேனியைக் காணு துளமங்க லாய்க்கும் ! (அ)

33. ஆவ லடங்கிடு முன்னே - மறைந்
தான்எனக் கார்துணை யாவது மின்னே ?
யாவையும் வல்லவன் றனே - உரு
வாகவென் கண்முன்னர் ஏன்வந்தி டானே ? (அ)

34. எக்குற்ற மும்மன்னிப் பானே! - பின்னர்
என்குற்றங் கண்(டு)ஏன் பிரிந்திருப் பானே ?
திக்கற்ற வென்னைப்பா ரானே? - குரு
தேவ னுருவிற் றிரும்பிவா ரானே? (அ)

35. இன்றேனு மென்றேனும் மீண்டும் - ரம
ணேச னுருக்கொண்டிங் கேவர வேண்டும் !
அன்றேல் அகதி நான் பாராய்! - **அரு**
**ணசலா, நின்பிள்ளை, என்முன்னந் தாராய் !** (அ)

## 10. ரமணு வாராயோ

1. அகந்தை யிருளின் நள்ளிரவில்
   ஆன்மக் கதிரே வாராயோ ?
   மிகுந்த கருணை ரமணனெனும்
   மேன்மைப் பெயரை மேவினையே.

2. இறைவா ரமணு அருளாலே
   என்னுள் விடிவாய் எழுவாயோ ?
   குறையா அகந்தை இருள்மாயக்
   கொன்றுன் னறிவொ ளிகூருயோ ?

3. இருளின் மயக்கில் எத்தனைநாள்
   இன்னுங் கழிப்பேன் ? இயலேனே
   அருளின் தலைவா ரமணேசா
   அந்தோ அந்தோ வாராயோ

4. நீயே வந்தா லன்றிளனை
   நிறைந்து மூடும் நீளிருளை
   நாயேன் கடக்க வியலேன்மெய்
   ஞானச் சுடரே வாராயோ ?

5. வீட்டுள் ளிருளில் விட்டாலே
   வீறிட் டழுமே சிறுகுழவி
   காட்டுள் ளிருளில் கண்மயங்கிக்
   கதறு கின்றேன் வாராயோ ?

6. அறிவாம் புத்தி விளக்கொளியும்
ஆசைப் புயலில் அணைந்ததுவே
அறிவுக் கறிவான் மச்சுடரே
அப்பா ரமணா வாராயோ ?

7. இட்டுச் சென்று வெளிச்சத்தில்
என்னைச் சேர்ப்பேன் எனமார்பைத்
தட்டிச் சொல்வார் யாருமிலை
தந்தாய் ரமணா வாராயோ ?

8. நானா ரென்னுங் கோல்வழியில்
நழுவி நழுவி விழுகிறதே !
யானா லெதைக்கொண் டெங்குறுவேன்
அருணை ரமணா வாராயோ ?

9. வழியைக் காணேன் விசாரமெனும்
வலது கையில் ஊன்றிக்கொள்ளும்
கழியைக் காணேன் கதியில்லேன்
கருணைக் கடலே வாராயோ ?

10. ஒளியில் லாமல் என்முயற்சி
ஒருங்கே பயனற் றேய்ந்தனவே
வெளியில் ஞான ஒளியிலெனை
மீட்க விரைந்து வாராயோ ?

11. கள்ளப் புலன்கள் காரிருளில்
கண்ணைக் குத்திப் பிடிங்கினவே
கொள்ளைக் காரர் வசம்நீங்கிக்
கூட்டிச் செல்ல வாராயோ ?

12. போலி மனம் போன்ம் போக்கினிலே
போய்போய் முயன்றும் புகலில்லை
காலந் தாழ்த்திக் கழிக்காமல்
கடிதில் ரமணா வாராயோ ?

13. இடறி இடறி இருளில்விழும்
என்றன் பிழையைப் பொருள்செய்தால்
அடையுங் கதியே தையோநீ
அருள்கூர்ந் தென்பால் வாராயோ ?

14. எங்கே எங்கே ஒளியென்றே
ஏங்கு மென்னை இருணீக்கி
அங்கே அழைத்துச் சென்றிடவே
அறிவே ரமணா வாராயோ?

15. பற்று கின்ற இருளிலகப்
பட்டுப் புலம்பி என்தலையே
சுற்று கின்ற தையோஎன்
துணையே ரமணா வாராயோ?

16. ஒடுங்கி இருளில் உளங்கலங்கி
ஒன்றும் புரியா துடல் முழுதும்
நடுங்கு கின்ற தையோ என்
ரமணு ரமணு வாராயோ ?

17. பிளந்த கந்தை இருளொளிப்
பெருமான் வருகை எதிர்ப்பார்த்துத்
தளர்ந்து வீழ்ந்தே னெனைக்காக்க
தயவே ரமணு வாராயோ ?

18. சேர்த்துப் பிடித்தென் சிறைமீட்டுச்
செல்ல வருவாய் என ஏங்கிப்
பார்த்துப் பார்த்துப் பதைக்கின்றேன்
பகவான் ரமணு வாராயோ ?

19. பொழுதும் விடியும் சூரியனுய்ப்
புனிதா வருவாய் வருவாய் என்
றழுது கிடக்கின் றேனையா
ஐயா ரமணு வாராயோ ?

20. வேர்த்துக் கொட்டி யகந்தையறும்
விடியற் காலை காற்றுக்காய்
காத்துக் கிடக்கின் றேனுண்மைக்
காதல் ரமணு வாராயோ ?

21. பேரைச் சொல்லி யழைத்தாலென்
பேரி லருள்வார் உனையன்றி
யாரை நம்பி யழைப்பேன்என்
ஐயா ரமணா வாராயோ ?

22. மண்ணாய் மடிக்கும் அகந்தையிருள்
வலையில் நின்றே விடுபட்டென்
கண்ணீ ரோயும் காலமெதோ
கடவுள் ரமணா வாராயோ ?

23. ஒளியைக் காட்டி உலகநசை
ஓங்கும் இருளில் கைகொடுத்தே
வெளியில் கூட்டிச் சென்றிடநீ
விரைவில் ரமணா வாராயோ ?

24. ஆவிக் கொளியை அளிப்போரை
ஆன்மச் சுடரை அறிவொளியைக்
கூவிக் கூவி யழைக்கின்றேன்
குருவே ரமணா வாராயோ ?

25. இருட்டுச் சிந்தை மனத்தாலே
எத்தனை யாண்டோ முயன்றிடுமென்
குருட்டு முயற்சித் தனைநம்பக்
கூடா தப்பா வாராயோ ?

26. விண்ணிற் கதிரோன் தனைக்காணு
விருட்டுக் குகையா மகந்தையிடம்
கண்ணை யிழந்தே கைகூப்பிக்
கதறு கின்றேன் வாராயோ

27. அஞ்சத் தக்க வகந்தையிருட்
காளாய் மீள வறிவின்றிக்
கெஞ்சிக் கும்பிட் டழுகின்றேன்
கேள்வா ரமணா வாராயோ !

28. குகையா மகந்தை யிருள்பிளந்து
கொண்டே ஞானக் குன்றேறிப்
பகலைக் காணப் பேராசைப்
பட்டேன் ரமணா வாராயோ ?

29. பழுதே புரியும் பாவிமனப்
பார விருளிற் பலகாலத்
தழுகை ஓய்ந்துள் ளானந்தம்
அளிக்க ரமணா வாராயோ ?

30. ஈன வகந்தை இருள்வாழ்க்கை
எல்லாம் கனவாய்ப் போகவருள்
ஞான வொளியிற் சேரகுரு
நாதா ரமணா வாராயோ

# 11. ஸ்ரீ ரமணேச சதகம்

1. அகிலந் தழைத்திட அவதரித் தனையே
அருட்குரு நாதா ரமணேசா

2. லோக மஹாகுரு லோக மஹாகுரு
லோகே சுவரனே ரமணேசா

3. கௌபீ னப்பெரு மானிட வடிவில்
கண்கண்ட தெய்வமே ரமணேசா

4. வனையா வலையாய் வலிதே வந்தெனை
வளைத்த குருவே ரமணேசா

5. சோதிச் சுடர்விரி யாதித் தனினுயர்
ஆதி ப்ரம்ம(ம்)நீ ரமணேசா

6. சௌமிய வடிவே சகுணப் பிரம்மசொ
ரூபமே யப்பா ரமணேசா

7. விரூப அரூப சொரூப மான
வீரூபா க்ஷியனே ரமணேசா

8. சைதன்ய உருவே சகுணமாங் குருவே
சாந்த மூர்த்தி ரமணேசா

9. மோன மணிச்சுடர் ரமண மணங்கமழ்
ஞானப்பொன் மலரே ரமணேசா

10. வாயக முற்ற மணங்கமழ் ரமண
வான்நனி ரசமே ரமணேசா

11. தயிரிலை பாலிலை தாயன் புரையாலென்
வயிறு நிறைந்தது ரமணேசா

12. மீட்டும் யாழொலி கசந்ததுன் மென்மொழி
யூட்டும் அருளால் ரமணேசா

13. ஞாயிறு போன்றுதான் யார்க்கும் பொதுவென
ஞாய முரைப்போய் ரமணேசா

14. ஞயம்படு நின்னுரை நல்லரல் லாரையும்
வயம்பட திருத்தும் ரமணேசா

15. வல்வினை தன்பயன் வந்துரு வாறருட்
சொல்வினை தந்தோய் ரமணேசா

16. நொய்கொதி பொறுக்குமோ என்வினை நின்திரு
நோக்கினு லழிந்திடும் ரமணேசா

17. மையறு முள்ளத் தொளிர்மலை யானே
மங்கள வாழ்வே ரமணேசா

18. கோலக் கிரியான் குலமணி யேதவ
சீலத் தெளிவே ரமணேசா

19. சுத்தநிர்க் குணபர சுகநிலை வாழ்வே
சுடரொளி விளக்கே ரமணேசா

20. மின்னொளி பின்னிடும் பொன்னொளி மேனியாய்
என்னருங் குருவே ரமணேசா

21. காட்சியின் மாட்சியா லென்னுள் ளேயரு
ளாட்சிசெய் யரசே ரமணேசா

22. போனது போகப் புதுவாழ் வருளிய
பூரண வடிவே ரமணேசா

23. வாளா விருக்க வானருட் சக்தி
வழங்கும் வள்ளால் ரமணேசா

24. வள்ள லெனவரை யாதளித் தென்றன்
உள்ளத் துறைவோய் ரமணேசா

25. கேட்டுப் பெறவெனக் கேது சுதந்திரம்
ஊட்டுவ துன்கடன் ரமணேசா

26. ✱ வார மிலாதயை வாரிதி யாகவென்
நேரமு முள்ளோய் ரமணேசா

27. மானிடர் தேவருள் என்மேல்நின் னன்பினை
மறுப்பா ரெவருளர் ரமணேசா

28. ஓரா யிரந்தா யாரெனி னுமெனக்
குன்போ லாமோ ரமணேசா

29. மொழியுரைக் குட்செய் முடியா முதலே
கழிபெருஞ் சுகமே ரமணேசா

30. சிரமேற் கூப்பிய கரமொடு தொழுவேன்
திருவருள் நிதியே ரமணேசா

---

✱ வாரம் - வரம்பு

31. தூவித் தூவிப் பூமலர் பாமலர்
துதிக்க வருள்புரி ரமணேசா

32. வெய்யிலின் கொடுமைக் கஞ்சியுன் கழல்நிழல்
உய்யவந் துற்றேன் ரமணேசா

33. பூங்கழல் வந்தேன் புன்மையென் னுள்ளே
புகுந்திடா தெனைக்கா ரமணேசா

34. ஞேய முலகிலோர் நெல்லள வேனுமுள்
நில்லா தெனைக்கா ரமணேசா

35. கெடுவழி எனைப்போர் தொடவிடா வகையுன்
சுடுநெருப் பாலழி ரமணேசா

36. புகழா சித்தழி யாதெனை நின்கீழ்ப்
புழுவென வடிமைகொள் ரமணேசா

37. ஈன மொழிந்திட இன்பம் விளைந்திட
இணையடி யருள்வாய் ரமணேசா

38. கீடமென வேபுலைக் கீழ்மையே னென்றன்
தோடம ழிப்பாய் ரமணேசா

39. ✱ ஔவிய மில்லையுன் னடியார்க் கடிமையா
யாசித் திருப்பேன் ரமணேசா

40. அருளினு ழமறியே ஞர்வம் சொல்லவே
யறிவே னருள்வாய் ரமணேசா

---

✱ ஔவியம் - பொறாமை

41. லட்சலட் சமாய் ஜெபம் உச்சரித் தறியேனுன்
இச்சையொன் றறிவேன் ரமணேசா

42. நூற்பொருள் மறைமொழி யேதுமறி யேனுன்
காற்பட வறிவேன் ரமணேசா

43. யோகம் தந்திரம் மந்திர மறியேனுன்
தாகமே லோங்கினேன் ரமணேசா

44. தாக(ம்)நின் கழலில்முன் தந்தழ வைத்தெனை
தானே யேற்றாய் ரமணேசா

45. நைந்துநைந் தெழுமனம் நிரம்பி வழிந்திட
நல்லருண் மழைபொழி ரமணேசா

46. ஏதுமற் றிடச்செய் தெல்லாம் தரவே
எனையுனக் கெடுத்தாய் ரமணேசா

47. கிட்டாப் பெருநிதி யென்றதெல் லாமெனுள்
கிட்டிட அருள்புரி ரமணேசா

48. பார்க்கு மிடந்தொறும் பரம்பொரு ளுனையே
பார்க்கும் வரமருள் ரமணேசா

49. ஐயமெ னக்கெழா தவைமடிந் தொழிந்துன்
னருளொளி யீவாய் ரமணேசா

50. பௌர்ணமி நிலவிலும் சிறுகறை யுண்டெனைப்
பூரண வொளிசெய் ரமணேசா

51. மதியுங் குளிரும் மலரும் மணம்போல்
இரண்டற செய்தருள் ரமணேசா

52. யுகாந்தம் பலவிலு மெனைப்பிரி யாதுன்னுள்
ஒன்று யணைப்பாய் ரமணேசா

53. பேரா னந்தப் பெருங்கட லேயுன்னில்
பிரியா தெனைக்கரை ரமணேசா

54. நேரமி னிக்கழி யாதெனை நின்றுள்
நேசத்தி லழிப்பாய் ரமணேசா

55. பட்டப் பகலென பரசிவ வெளிதனில்
கட்டிப் புரட்டெனை ரமணேசா

56. என்னுளு மங்கள மாகிய வாழ்வேநீ
என்னோ டிருப்பாய் ரமணேசா

57. பீடமென் னிதயமே பிரியா தமர்ந்துன்
பிள்ளையென் னோடிரு ரமணேசா

58. நீக்கமில் லாமல் நிறைந்துநீ ராட்டியென்
ஏக்கம் தொலைப்பாய் ரமணேசா

59. அறிவறி யாவடி யேனுக் கருட்பே
ரறிவருள் செய்வாய் ரமணேசா

60. மூவர்க் கரிதாம் முற்றியல் நிலையெனுள்
மூட்டுவை நீயே ரமணேசா

61. நுண்ணிய வணுவினும் நின்னுரு காட்டிநின்
னுண்மை யுணர்த்துவாய் ரமணேசா

62. வேரற் ழழிமா றேசம் சார
விருக்ஷம் கெடுத்தாய் ரமணேசா

63. இனிப்பிற வாவரம் பிரியாப் பெருவர
மீந்தருள் வாய்நீ ரமணேசா

64. செனனம ரணவினை தெறித்திட வடியேன்
மனமழித் தெனைக்கா ரமணேசா

65. நினைவுசொல் செயலெல்லாம் நீயாய் நின்றெனை
நித்தமுங் காப்பாய் ரமணேசா

66. யூகமொன் றில்லேன் செய்பிழை யாகும்
அநேகமும் பொறுத்தருள் ரமணேசா

67. நெஞ்சமு னக்கென தந்தேன் ஏற்றினி
யஞ்சலென் றருள்புரி ரமணேசா

68. வீரக் குருமணி யேயெனை நின்கையால்
வீரனுக் கிடுவாய் ரமணேசா

69. ஞிமிறென பூங்கழல் நாடி யருட்தேன்
நேசித் திருப்பேன் ரமணேசா

70. தேனுகர் வண்டென திருவடி யினில்வாழ்
வேனெனக் கருள்செய் ரமணேசா

71. நோக்கம்வே றொன்று மிலாதுன் பணிக்கே
நோக்கியிங் குள்ளேன் ரமணேசா

72. வையக மெங்கிலு மலையா துன்னிரு
கைவச மானேன் ரமணேசா

73. பொழுதுமு ழுவதுமுன் சிந்தனை வயமாய்ப்
போனே னருளால் ரமணேசா

74. கூவிக் கூவியே நின்னைத் துதிப்பதென்
ஆவிக் கினித்தது ரமணேசா

75. லாகிரி கொண்டவன் போலுனைக் கூவியென்
தேகம் புளகிப்பேன் ரமணேசா

76. பித்தெனக் கேற்றியுன் பித்தினுற் புதுமைகாண்
பித்தெனைக் கவர்வாய் ரமணேசா

77. விடயக் காட்டை வேரற எரித்த
வடவாக் கினியே ரமணேசா

78. ஞெகிழிக் கனலுன் னேர்பட் டவர்தம்
நீச மெரித்திடும் ரமணேசா

79. ஞிமிர வலியிலா நீசனை நிமிர்த்தினை
நின்னரு ளென்கொல் ரமணேசா | ளான்

80. வல்லவன் நானெனு மாணவ மழித்துன்
வல்லமை நாட்டுவாய் ரமணேசா

81. தைரிய மென்செய லில்லையஃ துன்செயல்
தளையறுத் துணைப்பெற ரமணேசா

82. ஒவ்வொரு நாளுமோர் புதுப்புது வழியிலென்
உளங்கவர்ந் தாயே ரமணேசா

83. ஊட்டுந் தாயினு முளங்கவ ரன்பால்
ஊமனு யானேன் ரமணேசா

84. சொந்தமோ டென்றனை மைந்தனுக் கினையென்
தந்தைதாய் யாவு(ம்)நீ ரமணேசா

85. பெறற்கரும் நினக்கே பிள்ளையா னேனினி
பெறுவதற் கொன்றிலை ரமணேசா

86. சீவன முன்னிரு திருவடி நிழலே
தேவையின் றொன்றிலை ரமணேசா

87. கனக திருப்பதம் என்சிர மணிதரும்
கருணைக் கிணையெது ரமணேசா

88. யமபயம் நீக்கிநீ என்றனைக் கண்ணுக்
கிமையெனக் காப்போய் ரமணேசா

89. மெள்ளமெள் ளவேவெனை யில்விட் டிழுத்துன
துள்ளே கரைப்போய் ரமணேசா

90. எங்ஙன முய்வே னென்ற வெனைப்பிடித்
திங்ஙனம் செய்தோய் ரமணேசா

91. உன்னினை யொன்று லுலகை மறந்தே
னுன்வய மானேன் ரமணேசா

92. வானவர் கோனுமுன் வாயிலில் நிற்கயான்
மலரடி யணைந்தேன் ரமணேசா

93. வினையே னென்செயல் தூய்மையா லில்லையுன்
மிககரு ணையேஇது ரமணேசா

94. என்தவ மில்லையீ துன்கருணை மழையே
இங்கெனை ஏற்றது ரமணேசா

95. கொட்டம ழித்தெனை இட்டுவந் தனைநீ
விட்ட வழியினி ரமணேசா

96. மேனிலை யாவையும் ஈயுமுனக் கென்னல்
வேண்டிய தொன்றிலை ரமணேசா

97. நேசமுனதிரு பாதத் தன்றியோர்
ஆசையும் வேண்டேன் ரமணேசா

98. வேண்டா விருப்ப மெனக்கென வீந்தாய்
வேறென்ன வேண்டும் ரமணேசா

99. தொன்றுதொட் டுனக்கென் றேயிருந் தேனெனக்
கென்றினி யொன்றிலை ரமணேசா

100. வாழி யருணகிரி வாழி ரமணகுரு
வாழி வாழி ரமணேசா

---

# II. கீதங்கள்

## 1. ஸ்ரீ அருணாசல லிங்காஷ்டகம்

இராகம் - கல்யாணி　　　　　　　　　　தாளம் - ஆதி

1. ஆதியு மந்தமி லாச்சிவ லிங்கம்
அரியய னிடையெழு மக்கினி லிங்கம்
ஜோதிச தாசிவ ஜோதியி லிங்கம்
சூட்சும வாத்மசொ ரூபவி லிங்கம்
பாதிசி வைக்கருள் பங்குள லிங்கம்
பண்டெழு மார்கழி யாதிரை லிங்கம்
நாதமு தற்பொரு ளாகிய லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணாசல லிங்கம்.**

2. மூலம தாகமு ஊத்தெழு லிங்கம்
முக்தர் சுவைத்திடுங் கைக்கனி லிங்கம்
ஆலமி டற்றில டக்கிய லிங்கம்
அன்பருக் காதர வாகிய லிங்கம்
மாலய னேத்திவ ணங்கிய லிங்கம்
மாமணி வாசகர் வாழ்த்திய லிங்கம்
ஞாலமி தற்கக மாகிய லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணாசல லிங்கம்.**

3. சுந்தர பொன்மய சோபித லிங்கம்
சுத்தம னத்திற்சு கோதய லிங்கம்
அந்தர தேவர்கள் பூஜித லிங்கம்
ஆவர ணாதிய கற்றிடும் லிங்கம்
பந்தம கன்றவர் சொந்தவி லிங்கம்
பக்குவ ருள்ளமி னித்திடும் லிங்கம்
நந்தமிழ் நாட்டெழும் ஞானவி லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணாசல லிங்கம்.**

4. சத்தினர் செய்பிர தக்ஷிண லிங்கம்
சத்தறி வின்புரு நித்திய லிங்கம்
சித்தர்கள் முக்தர்கள் சேவித லிங்கம்
தீனத யாளச தாசிவ லிங்கம்
பக்தியு ளத்தினிற் சிக்கிய லிங்கம்
பண்ணவர் பாடும்ப ராபர லிங்கம்
நத்தின வர்க்கருள் ஞானவி லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணசல லிங்கம்.**

5. சோமனைச் சென்னியிற் சூடிய லிங்கம்
தூயசு யம்புரு வாகிய லிங்கம்
காமனைச் சுட்டக டைக்கணி லிங்கம்
கண்ணுத லாங்கரு ணகர லிங்கம்
ஏமனை நூறிய வீச்வர லிங்கம்
எங்குரு வாம்**ரம ணேச்வர லிங்கம்**
நாமநி னைப்பருள் ஞானவி லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணசல லிங்கம்**

6. மூவினை மூலம றுக்குமி லிங்கம்
மோனம தாலுப தேசிக லிங்கம்
சாவினை மீறிய சாக்ஷியி லிங்கம்
தத்பொரு ளாகிய சங்கர லிங்கம்
ஆவியை யீர்க்கும்**அண் ணமலை லிங்கம்**
ஆருயி ராகிய வாத்தும லிங்கம்
நாவுயர் நால்வரும் பாடிய லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணசல லிங்கம்.**

7. பூரண ஞானபு ராதன லிங்கம்
போத சுகப்பரி பூரண லிங்கம்
ஆரண. மேன்முடி வாகிய லிங்கம்
அஞ்சலென் றேயப யந்தரும் லிங்கம்
காரண மற்றருள் காட்டுமி லிங்கம்
கவலைய றுத்திடுங் கற்பக லிங்கம்
நாரண ஞன்முக ஞடிய லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணசல லிங்கம்.**

8. அட்டமு கத்தரு ணசல லிங்கம்
அந்தர்மு கத்தக மாகிய லிங்கம்
வெட்ட வெளிப்பொரு ளாகிய லிங்கம்
வீரவி ராகியர் மேவிடு லிங்கம்
சுட்ட மனத்திரு நீறணி லிங்கம்
சொல்மனம் ஒன்று✱மண் ணமலை லிங்கம்
நட்ட நடுப்பொரு ளாகிய லிங்கம்
**ரமண**னெ னும்**அரு ணசல லிங்கம்.**

## 2. ஶ்ரீ ரமண சரணம்

இராகம் - கேதாரம் தாளம் - ஆதி

1. அருண சலனே ரமண சரணம்
அண்ண மலையாய் சரணம் சரணம்
கருண நிதியே சரணம் சரணம்
கடவுள் ரமண சரணம் சரணம்
குருநா யகனே சரணம் சரணம்
கொடையோ ருருவே சரணம் சரணம்
நரவே டமுறும் சிவனே சரணம்
**ரமண** சரணம் சரணம் சரணம்.

✱ சொல், மனம், ஒன்றும் நெருங்கமுடியாத லிங்கம் என்பது பொருள்

2. தீனர்க் கருள்வோய் சரணம் சரணம்
தேவா ரமணா சரணம் சரணம்
மோனப் பிழம்பே சரணம் சரணம்
மூலப் பொருளே சரணம் சரணம்
ஈனக் களைநீக் கிடுவோய் சரணம்
எனையா ளுடையாய் சரணம் சரணம்
ஞானக் களிறே சரணம் சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

3. ஆசைப் பொருளே சரணம் சரணம்
அப்பா ரமணா சரணம் சரணம்
மாசற் றவனே சரணம் சரணம்
மருணீக் கிடுவோய் சரணம் சரணம்
தேஜோ மயனே சரணம் சரணம்
சிவமங் களனே சரணம் சரணம்
ராஜர்க் கரசே சரணம் சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

4. என்மா குருவே சரணம் சரணம்
இறைவா ரமணா சரணம் சரணம்
புன்மை யொழிப்போய் சரணம் சரணம்
புனிதா புகலே சரணம் சரணம்
தொன்மா முடியே சரணம் சரணம்
தொழுவார் துணையே சரணம் சரணம்
நன்மை யருள்வோய் சரணம் சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

5. கண்கா ணவருங் கடவுள் சரணம்
கவலைய றுப்போய் கதியே சரணம்
பண்பா டளிக்கும் பரமா சரணம்
பதியே **ரமண பகவான்** சரணம்
மண்பால் வந்தம ஹேசா சரணம்
மறைநூல் முடிவோர் வடிவே சரணம்
நண்பா நாதா சரணம் சரணம்
**ரமணு** சரணம் சரணம் சரணம்.

6. அற்றார்க் கருள்வோய் சரணம் சரணம்
அன்பே யருளே சரணம் சரணம்
பெற்று யென்னைப் பிதாவே சரணம்
பிரியாய் பெரியோய் சரணம் சரணம்
பற்றே களைவோய் சரணம் சரணம்
பற்று யுனையே தருவோய் சரணம்
நற்று ணிழலே யருள்வாய் சரணம்
**ரமணு** சரணம் சரணம் சரணம்.

7. கடுவா தையெலாங் களைவாய் சரணம்
கௌபீ னதரா சரணம் சரணம்
விடுவா யில்லாய் சரணம் சரணம்
வேதப் பொருளே சரணம் சரணம்
தொடுவா யுள்ளே சுயமே சரணம்
துரியா தீதா சரணம் சரணம்
நடுவாய் நடமா டிடுவாய் சரணம்
**ரமணு** சரணம் சரணம் சரணம்.

8. ஆதா ரமதா யாஞய் சரணம்
அம்மை யப்பா குருவே சரணம்
பாதா தரமே தருவாய் சரணம்
பரஞா னமயப் பழமே சரணம்
வேதா திருமாற் கரியாய் சரணம்
விஜனசுட் டழிக்கும் விழியாய் சரணம்
நாதா தீதா சரணம் சரணம்
**ரமஞ** சரணம் சரணம் சரணம்.

9. தாயே தமரே சரணம் சரணம்
தலைவா முதல்வா சரணம் சரணம்
வாயாற் றுதிப்போர் வரமே சரணம்
மனவாக் கிறந்த மௌனீ சரணம்
மாயா மயக்க மறுப்போய் சரணம்
மன்ஞ சரணம் மகிழ்வே சரணம்
நாயே னெனையுங் காப்போய் சரணம்
**ரமஞ** சரணம் சரணம் சரணம்

10. தாஞய் தலைமை பெற்ருய் சரணம்
தானே தாஞம் பொருளே சரணம்
ஞாஞ கார ரமஞ சரணம்
நான்நா னெனவுள் நடிப்போய் சரணம்
தேஞர் நாமத் திதிப்பே சரணம்
தேசா வீசா சரணம் சரணம்
''நாஞ ரெனப்பார்'' என்போய் சரணம்
**ரமஞ** சரணம் சரணம் சரணம்.

11. அலியாண் பெண்ணு மல்லாய் சரணம்
அவையா யவைகட் கரியாய் சரணம்
புலிவாய்க் கொளல்போற் புணர்வாய் சரணம்
புறமே கவிடாப் புகலே சரணம்
கலிவா யெனைமீட் டருள்வாய் சரணம்
கரையற் றவருட் கடலே சரணம்
நலியாப் பொருளே சரணம் சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

12. இமையும் பிரியா விறைவா சரணம்
இமையோர்க் கரசே சரணம் சரணம்
எமையாட் கொண்டாய் சரணம் சரணம்
எல்லாம் வல்லாய் சரணம் சரணம்
தமியே னருமைத் தந்தாய் சரணம்
தயவே புரிவாய் சரணம் சரணம்
நமனின் நமனே சரணம் சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

13. வல்லார்க் கெல்லாம் வல்லாய் சரணம்
மனமற் றொளிர்மா மலையே சரணம்
எல்லாப் பொழுது முள்ளாய் சரணம்
இங்கங் கெங்குமி ருப்போய் சரணம்
பொல்லாங் கொழிக்கும் புனிதா சரணம்
புவிமேற் குருவாம் பொருளே சரணம்
நல்லோர்க் கினிக்கும் நாமா சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

14. பூமிக் கிதயப பொருப்பே சரணம்
பூன்றப் பொருளே சரணம் சரணம்
ஓம்உற் பவிக்கு மொன்றே சரணம்
உளமா மகமே சரணம் சரணம்
காமத் திரளைக் கடிவோய் சரணம்
கவருங் காந்தக் கண்ணா சரணம்
நாமச் சுவையே சரணம் சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

15. தேவா திபனே சரணம் சரணம்
திரையற் றசிவத் தெளிவே சரணம்
பாவாற் பரவும் பயனே சரணம்
**பகவான் ரமணா சரணம் சரணம்**
சாவா நிலையே தருவோய் சரணம்
தனுபோ தமழித் தருள்வோய் சரணம்
நாவா யானேய் சரணம் சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

16. தமசற் றொளியே தருவோய் சரணம்
தனிலாழ் தவவித் தையனே சரணம்
சமனா ருமிலாச் சதுரா சரணம்
தானா யொளிர்சத் தகமே சரணம்
கமலோ னரிசங் கரனே சரணம்
கரையேற் றுகடைக் கண்ணா சரணம்
**ரமணா க்ஷரமா வடிவே** சரணம்
**ரமணா** சரணம் சரணம் சரணம்.

---

# 3. ஸ்ரீ ரமணேச தெய்வம்

இராகம் : மாயாமாள கௌளை                                                    தாளம் - ஏகம்

1. அண்ணும லக்கண்ண மர்ந்தோங்குந் தெய்வம்
   அணுயா சமாய்க்கட் டழித்தாளுந் தெய்வம்
   விண்ணோங்கு தேவர்க்கு மெட்டாத தெய்வம்
   விழிப்பிற் றுயின்றோர்வி ழிக்கண்ட தெய்வம்
   கண்ணுலி முத்துக் கரைத்துக் கதிக்கே
   கலக்கத்த ரும்போத காமாரி தெய்வம்
   திண்ணங்கொ டுத்தென்னுட் டித்திக்குந் தெய்வம்
   சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

2. எல்லோருங் கைவிட்டி கத்தாத ரங்கெட்
   டிருக்கின்ற தீனர்க்கு மீகின்ற தெய்வம்
   மெல்லப்பி டித்தேய ருட்பொற்கு கைக்குண்
   மெருக்கிட் டொளிர்விக்கு மெஞ்ஞான தெய்வம்
   வெல்லற்க ரும்மாய வேரைப்பறிக்கும்
   **விசாரப்பெ ருஞ்சக்தி வேலே**ந்துந் தெய்வம்
   செல்லாவ கத்துட்ப்ர தேசத்தி ழுக்கின்ற
   சிற்சக்தி **ரமணேச தெய்வமே தெய்வம்.**

3. பண்கொண்டு பாடப்ப தங்கூட்டுந் தெய்வம்
   பணிக்கன்றி வீண்போகப் பண்ணுத தெய்வம்
   மண்கண்ட தொல்கால மாகக்கி டைக்காத
   மௌனோப தேசத்தின் வல்லாண்மை காட்டுங்
   கண்கண்ட தெய்வங்க திக்கான தெய்வம்
   கலங்காத தீரங்க ணித்தாளுந் தெய்வம்
   திண்கொண்ட மாயந்தெ ரித்தோட்டுந் தெய்வம்
   சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

4. தாபப்பு யற்காற்ற டுத்தாளுந் தெய்வம்
தனக்கென் றெனைக்கொள்ளுஞ் சத்தான தெய்வம்
கோபக்கொ டும்பேயின் பாபத்திற் காட்டிக்
கொடுக்காது காக்குங்கு றிப்புள்ள தெய்வம்
ஆபத்து ருப்பாது காப்பான தெய்வம்
அறப்பாதை மீருவ ணைப்பான தெய்வம்
தீபப்ப ரஞ்சோதி தெய்வம் சிதேகம்
சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

5. தர்க்கித்து வாதாடித் தானுண்மை காணத்
தடிப்புற்ற வாயர்க்குச் சாராத தெய்வம்
மிக்கத்த டித்தப்ப ழம்புத்த கத்திற்
படித்தும்பு ரட்டற்கு ளெட்டாத தெய்வம்
நெக்குற்ற நெஞ்சத்தி னேயம்பு ரண்டே
நினைத்துத்து திப்போரின் பக்திப்பெ ருக்கிற்
சிக்கித்தி திக்குஞ்சி தானந்த தெய்வம்
சிவப்பிரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

6. கட்டற்ற ஞானக்க ளிப்பான தெய்வம்
கதிக்கன்றி மக்கட்க(ண்) ணைக்கட்டுஞ் சித்தி
எட்டுந்தெ ரிந்தோர்க்கு மெட்டாத தெய்வம்
எலாப்பற்றும் விட்டோர்க்கெ ளித்தான தெய்வம்
மட்டற்ற வானந்த வாரிக்கி ழுத்தே
வருங்கங்கை யாய்வந்து வாய்த்துள்ள தெய்வம்
சிட்டர்க்க ருட்சச்சி தானந்த தெய்வம்
சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

7. பார்வைக்கு ளேவந்து பட்டோரை யெந்தப்
படிக்குமு டிக்கும்ப லங்கொண்ட தெய்வம்
ஆர்வங்கொ டுத்தாசை காட்டிப்பி டித்தே
யகங்காரம் மாய்க்கின்ற அன்பான தெய்வம்
கார்வந்து மூடாதென் கண்ணைத்து டைக்குங்
கருத்தாற்க ணத்துங்கண் மூடாத தெய்வம்
சீர்வந்து பாடத்தெ ளிந்தூற்றெ னக்குட்
டெரிக்கின்ற **ரமணேச தெய்வமே தெய்வம்.**

8. உறக்கத்த முந்தும்பு விக்குண்மை யீதென்
றுணர்த்தற்கு டற்பெற்று லாவுற்ற தெய்வம்
பிறக்கப்பு சிக்கப்பெ ருந்துன்பு ழன்றே
யிறக்கப்பி டிக்காத வெல்லார்க்கு மின்பஞ்
சிறக்கப்பி றக்காதி றக்கத்தெ விட்டா
தினிக்கப்பெ றும்பேறு மெய்தப்ப ரக்கண்
திறக்கத்த ரும்ஞான தீபப்ர காசச்
சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

9. பாராதி யண்டம்ப ணிந்தேத்துந் தெய்வம்
பணிந்தேனை வாவென்று பாலூட்டுந் தெய்வம்
நாராய ணன்பங்க யத்தேவர் நாடும்
நடுப்போத மாயுண்ண டிக்கின்ற தெய்வம்
வீராதி வீரர்க்கு வித்தான தெய்வம்
விழிக்காத நெஞ்சில்வி ளங்காத தெய்வம்
தீராத ஜென்மஞ்சி தைக்கின்ற தெய்வம்
சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

10. கள்ளர்க்கு மன்பேக ளித்தீந்த தெய்வம்
கணக்கற்ற ஜீவர்க்க திக்குற்ற தெய்வம்
தள்ளத்த காதென்றெ னைக்கொண்ட தெய்வம்
தனக்கேப ணிக்கொண்டெ னைத்தாங்குந் தெய்வம்
வள்ளற்பி ரானென்று மண்ணோடு விண்ணும்
வணங்கும்பெ ருந்தெய்வம் வந்தன்ப ருள்ளம்
தெள்ளத்தெ ளிந்தோங்குஞ் சித்தான தெய்வம்
சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

11. கானற்பு னற்கண்ட வாவுங்க ருத்தைக்
கடாக்ஷித் திழுக்குங்க ழற்காந்த தெய்வம்
மோனத்தி ருந்தேமு முக்ஷுக்க ளுள்ளே
முனைப்பற்ற ழிக்கும்மு ழுப்போத தெய்வம்
நானற்ற பேரின்ப ஞானம்பெ றற்கிந்த
**நான்யார்?** எனக்காண லாமென்ற தெய்வம்
தீனர்க்கு ளேதீன னேனும்வி டாதச்
சிவப்ரம்ம **ரமணேச தெய்வமே தெய்வம்.**

# 4. என்சொல்லி எண்ணு கேனே!

இராகமாலிகை தாளம் - ஆதி

1. அற்புதனைத் தற்பரனை யாதியண்ணு
மலையானை **ரமணவடி** வானுன்றன்னைப்
பொற்பதனைப் புண்ணியனைப் புவனமுண்ட
பூரணனை போதவரு ணசலத்தே
சற்குருவா வந்தவனைத் தகராகாயச்
சதுரோனை, சத்தியலைச் சாருமாறே
யெற்கருளு மிறையோனை யிகலிலானை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

2. ஐங்கரனை யறுமுகனை யரனைநாரா
யணனைநான் முகனையிறை யாதியோரைத்
தன்மயமா யன்றியொன்றுந் தனியாய்க்காணு
சர்வேச மகாபதியைத் தரணிவந்த
தங்குருவாய் சர்வமதத் தாரும்போற்றுந்
தயாநிதியைத் தனிமுதலைச் சுவாமியாக
எங்கணிலே யினிப்போனை யீறிலானை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

3. ஆரியனை யங்கணனை யணுவினுள்ளும்
அணுவாகி மகத்தான வான்மஞானச்
சூரியனை, சந்திரனுய்த் துயரநீக்குஞ்
சோதியனைச் சுயம்பரனைச் சுகமயத்தேன்
வாரியனை, தொழுங்குலத்தோர் மனத்துற்ருேனை
வஞ்சமிலாக் கருணையனை மதுரைநீத்த
ஈரிருநாற் பருவகலை யிளைஞன்றன்னை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே!**

4. ஒற்றையரைக் கோவணனை யுடைமையற்ற
வுடையானை யுள்ளவனை யுள்ளக்கள்ளஞ்
செற்றவனை **ஸ்ரீரமணத் திருவினனை**
செகத்தினையன் னியமெண்ணுச் சிவோஹமோனக்
கொற்றவனைப் பற்றறுத்துக் கொண்டோருள்ளக்
குகையானைக் குருபரனை, கொடியபாவம்
எற்றிவிழ வெனையாண்ட விறைவன்றன்னை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

5. சுழியானை யருணகிரி ஜோதியானைச்
சுயராஜ்ய பதத்தானைச் சூர்யசந்த்ர
விழியானை வேதாந்த விளக்கானானை
விண்ணவனை, பிரளயத்தின் வெள்ளத்தாலும்
அழியானை யம்மையப் பனுமானானை
அகத்தானை, பிறப்பறுத்திவ் வடியனேனை
யிழியாத நிலையேற்று மேனியானை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

6. கரைகாணக் கல்வியனை, கண்ணாற்கண்ட
கடவுளைநற் கரைசேர்க்குங் கதியானானை
உரைசேரப் பலர்பாடு மொருவன்றன்னை
யுத்தமனைச் சத்தியனை யுலகமாயத்
திரைசேராப் பதத்தானைச் சிறியேனன்ன
தீனரக மும்பிரியாச் சிந்தையானை
இரையாக வெனையுண்ண வெண்ணினானை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

7. புகலாத வாச்சியனைப் புகலைப்பொன்றுப்
பூரணனை, புரைகாணப் புனிதன்றன்னை
மிகையாகாப் புகழானை மேலோர்க்கெல்லாம்
மேலோனை வேண்டுமென்று விரும்புவோரை
யகலாத வண்மையனை 'அஹம்ந்நா' னென்னும்
அருளான்ம தேவதையை யருட்கைகோத்தே
யிகலேது மணுகாவா றெனைக்காப்போனை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

8. சத்திமயச் சதுரோனை, சாகாக்கல்வி
தருவோனைத் தரணிதொழுஞ் சாந்தவிண்ணை,
பத்திவலைப் படுவோனைப் பாதாளேசன்
பாங்குறைந்த பாலசூ ரியனைஜீவன்
முத்திநிலை தருவோனை மூவருள்ளும்
முதலாகு மூலவனை, மூடனென்னை
யெத்துயரு மணுகாவா றிருத்துவோனை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

9. ஆரணமா முடியானை யடியேற்கான
வப்பனை யொப்பிலா வருளினானை
**காரணமே யில்லாமற் கருணைபெய்யுங்**
**கார்முகிலை,** காந்தனும் **ரமணக்கண்ணை**
நாரணனுன் முகனிடையே நடனத்தானை
நற்றாயாய்த் தந்தையாய் நாடுமென்முன்
ஈருறவு மோருருவா யிணங்கினானை
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

10. விண்ணவனை **ஸ்ரீரமண வேடத்தானை**
வேங்கடனை வினையறுக்கும் வீரத்தானை,
கண்ணிணையின் விருப்பானைக் கரும்பைத்தேனைக்
கற்கண்டைக் கசக்கவைக்குங் களிப்பூற்றானை
உண்ணருளா முணவானை யுயிர்கட்கெல்லா
முயிராகி யோங்குவனை, யோய்ந்தெனுள்ளே
**யெண்ணமற வெண்ணுவனை, யெண்ணற்றானை,**
**யெண்ணுகே னென்சொல்லி யெண்ணுகேனே !**

---

## 5. ஸ்ரீ அருணாசல குரு ரமணம்

இராகம் - மோஹனம் தாளம் - ஆதி

அருணாசல குருரமணம் அருணாசல குருரமணம்
அருணாசல குருரமணம் அருணாசல குருரமணம்
அருணாசல குருரமணம் அருணாசல குருரமணம்
அருணாசல குருரமணம் அருணாசலமே.

1. யதிநாயக பரவடிவம் எவரும்பணி யிறையுருவம்
கதியேதரு மதிபனெனுங் கடவுட்சிவ கதிர்மதியம்
துதிசெய்யடி யவரிடம்வந் துறையும்பர சுகநிலையம்
அதிசீதள பரமசிவம் அருணாசல குருரமணம். (அ)

2. ஜகநாடகந் தனைநிஜமாய்த் திடமாய்நினைத் திடுமடியேன்
சுகநாசகப் பஹிர்முகமே தொடராதெடுத் துரிமையுடன்
மகனுமென வருள்புரியும்; மனமாமுய லகனவன்மேல்
அகநாடக சிவசொருபம் அருணாசல குருரமணம். (அ)

3. சகியாதுளம் உலகினிலே தனியாய்த்துய ரடையுமெனைத்
தகியாதொரு பவமுமினித் தவவாழ்வினைத் தருவதனுற்
சுகியாகவே யுறவருளுந் துணையாம், நரசுரவுலகம்
அகிலாண்டசற் குருசொருபம் அருணாசல குருரமணம் (அ)

4. இமமாமலைத் தவமுயலும் எவரும்பர சிவனுடலில்
''நமதாண்டவன் அருணமலை ரமணுவெனும் பெயருடனே
இமையோர்தொழ வுள''னெனவந் தணைவார்க்கிறை யருள்
புரியும்
அமலாத்துமப் பரமசுகம் அருணாசல குருரமணம். (அ)

5. பசுமாபதி சிவனருணா சலமாயுறை பரமனருட்
சிசுவாகிய திருவடிவம் சிவசுந்தர ரமணமயம்
விசுவாகரம் புனைந்தடியார் வினைவாசனை யெனுமனமாம்
அசுராதிசங் கரம்புரியும் அருணாசல குருரமணம். (அ)

6. பயனுடிலாப் பெருமுனிவோர் பலநாள்புரி தவவலிவின்
பயனுயடை படுபொருள்தம் பரமேச்வர பதமுடனே
தயவால்மனி தனினுருவில் தரைமீதுல வியதெனினும்
அயன்மால்தொழும் ஒளிவடிவம் அருணாசல
குருரமணம். (அ)

7. வருணாதிப னெனவருளின் மழைபெய்குரு நமதிதயத்(து)
இருணாசம துறச்சிறிதும் இமையாதுத விடுமதுநங்
கருணாகர ரமணனெனக் கனிவார்எவர் அவர்கணிலே
அருணோதய வெழில்வதனம் அருணாசல குருரமணம். (அ)

8. இகமும்பர மிருவகையும் இசையும்புகழ் கலைபலவும்
மகவும்பிற வகைசுகமும் மனையும்பல மனிதருளே
தகவும்சுக தனவகையும் தருமே,தனைச் சரணடைவார்
அகநாசகத் திருநடனம் அருணாசல குருரமணம். (அ)

9. விதிமீறிநல் வரமருளும் வினைவாய்விடு படவருளும்
நதியாடுவர் பெறுநலமும் ''ரமணா''வெனி லுறவருளும்
எதிரென்றோரு தடையெதுவும் இலையாம்படி விலகவரும்
அதிபாலியத் துறவரசன் அருணாசல குருரமணம். (அ)

10. பிணிபோய்ச்சுகம் பெறவருளும் பிறவாப்பர நிலையருளும்
மணியாதிபொன் னணிபலவும் மனைமேலுற வரமருளும்
பணியாள்நிலம் பசுவுணவும் பணியுந்தரும் பலபலவாம்
அணிமாதியை அடிமைகொளும் அருணாசல குருரமணம்.
(அ)

---

# 6. ஸ்ரீ ரமண நாமமே

இராகம் - கர்நாடக தேவகாந்தாரி          தாளம் - ஆதி

1. ஜன்ம நாசமே சேர வைப்பதும்
கன்ம வாசனை கழல வைப்பதும்
புன்மை யாவையும் போக்க டிப்பதும்
நன்மை யாவதும் **ரமண நாமமே.**

2. மலம ழிப்பதும் மனம ழிப்பதும்
வலம ளிப்பதும் வரம ளிப்பதும்
சொலவி னிப்பதும் சுகம ளிப்பதும்
நலம ளிப்பதும் **ரமண நாமமே.**

3. வல்ல தென்பதும் மாயை தீரவே
கொல்ல வல்லதும் கூடி ஏகமாய்ப்
புல்ல வல்லதும் புண்யம் யாவினும்
நல்ல தென்பதும் **ரமண நாமமே.**

4. கோத கன்றதும் குணமு யர்ந்ததும்
சாத னைப்பலம் தான ளிப்பதும்
சேத னத்ததும் சிவம யத்ததும்
நாத ஞவதும் **ரமண நாமமே**

5. திடம ளிப்பதும் திருவ ளிப்பதும்
உடனி ருப்பதும் ஓய்வி லாத்துயர்
அடவி சுட்டக மகமென் றன்பருள்
நடன மாவதும் **ரமண நாமமே.**

6. அன்று மாலயன் அயர நின்றதும்
வென்று மாயையை வீட ளிப்பதும்
கன்றின் தாயெனக் கருணை செய்வதும்
நன்று நன்றுநம் **ரமண நாமமே.**

7. தேட்ட மாவதும் தியான மாவதும்
ஊட்ட மாவதும் உள்ளி ருந்தருள்
ஆட்ட மாவதும் அகமு கத்தில்நம்
நாட்ட மாவதும் **ரமண நாமமே.**

8. கான மாவதும் கடவு ளாவதும்
பான மாவதும் பரம தத்துவத்
தான மாவதும் தன்ன வர்க்கருள்
ஞான மீவதும் **ரமண நாமமே.**

9. அத்த னானதும் அருண மாமலைச்
சித்த னானதும் தெய்வ மானதும்
முத்தி யானதும் மோன மும்நவ
ரத்ன மானதும் **ரமண நாமமே.**

10. அம்மை யப்பனும் ஆசை யப்பனும்
எம்மை யப்பதம் எய்து விப்பதும்
இம்மை யிற்குரு என்றுள் ளூறிடும்
நம்ம யப்பொருள் **ரமண நாமமே.**

## 7. ரமணா ரமணா

இராகம் : கானடா — தாளம் : ரூபகம்

ரமணா ரமணா ரமணா ரமணா
ரமணா ரமணா ரமணா ரமணா (ரமணா)

1. அருணா சலனே ரமணா வெனுமித்
திருநா மமதே செகமா யமறப்
பெருமா வலியா யுடையே னருள்வாய்
குருநா யகனே பகவான் ரமணா (ரமணா)

2. காடும் மலையுங் கடுமா தவர்கள்
தேடும் பொருளைப் பெறவே தினமுள்
நாடும் பரிசே பரிசென் றிதயத்
தாடும் (ஸ்)புரணத் தகநா யகனே (ரமணா)

3. அயனே யரியே யறியா வழலின்
மயனே யருணா சலனே ரமணா
பயனிவ் வுடலாற் பெறுதற் கெனையுன்
வயமாக் கியருள் புரிவாய் ரமணா. (ரமணா)

4. நானே தெனநீ யறிவா யெனிலத்
தானே பொருளாய், தடையே துமிலா
வானு குவையென் றகமூ றிடுசெந்
தேனே குருவே சிவனே ரமணா. (ரமணா)

5. அழியாப் பதமுன் னருளா லலதென்
னெழியா வலைமா மனமே தழியும் ?
வழியா துமிலே னுனையன் றியருள்
பொழிவாய் ரமணா பரிபூ ரணனே. (ரமணா)

6. தேகா திகளே திடமா யகமாம்
மோகா ரணியம் முடிவா யறுமோ
ஆகா திதெனு லருணா சலநின்
சாகாப் பதமே சரணா யினனே (ரமணா)

7. கலையும் பணியுங் கவியும் புகழும்
அலையும் மனநா சமுறச் செயுமோ ?
தலையும் பணியச் சரணா கியனா
மலையும் ரமணே சனுமே கதியே. (ரமணா)

8. தீரா தபவத் திரையற் றுளமுன்
சீரார் பதமுற் றகலாச் சுகமே
ஆரா தினுமேன் அலைமா றருள்வாய்
தாரா யினியுன் சரணம் புயமே. (ரமணா)

9. நிறைமா நிதியும் நிலமும் பணியும்
முறைசெய் யரசும் பெறினும் முடிவிற்
குறையா துமிலாப் பதமிங் குறுமோ
இறைவா இவையேன்? எனையாள் ரமண. (ரமண)

10. கெடுவல் வினைவா சனையான் மயலால்
உடலும் மனமும் உலகும் நினையாத்
திடமுன் னருளாற் சிறியேன் பெறவே
கொடைநீ யருள்வாய் குருவே ரமண (ரமண)

## 8. கருணகர நாதன்

இராகம் : கர்நாடக தேவகாந்தாரி தாளம் : ஆதி

ரமண யநமோ ரமண யநமோ நமவே
ரமண யநமோ ரமண யநமோ நமவே

1. கருண கரநா தனுனைக் கதியாய்ப் பெறுமோர்
அருளா தரவீந் தனையன் பினகப் பொருளே
ஒருநா ளுமுனைப் பிரியா வரமீந் தருள்வாய்
அருண சலனே **ரமண யநமோ நமவே.** (ரம)

2. சிவசத் திமயத் திருவா ளவெனக் கருளாற்
பவமுக் திசுவைப் பழமே பரிவா லருள்வாய்
தவசக் தியர்ஞா னியர்தம் மகமன் றினிலே
நவநா டகனே **ரமண யநமோ நமவே.** (ரம)

3. அழிவா குமுடற் றனையற் றருளா லறிவாம்
விழியே திறவாய் விரைவாய் குருவா கதிருச்
சுழியீன் றசுயஞ் சுடரே சுனையாய்க் கருணை
பொழிநா யகனே **ரமண யநமோ நமவே.** (ரம)

4. மதியா(ம்) மதிவா ழவொளிச் செயுமா விதயக்
கதிரே கருணைக் கடலே கடைக்கண் ணருளின்
நிதியாங் குவையே நினையே சரணு யுடையேன்
பதியே **பகவான் ரமணு யநமோ நமவே.** (ரம)

5. கலையா வினுமே தகுமான் மசிவக் கலையே
அலையா வழியா கவெமக் கருள்செய் தருணு
சலநா தனெனத் தரைமீ துலவும் பரமே
தலைவா **பகவான் ரமணு யநமோ நமவே.** (ரம)

6. தகவா யுலகெங் கும்வணங் கும்**ஜெகத் குருவே**
பகவான் அடியோம் பதியே யருள்பாய் நயன
முகமே முதல்வா முனிநா யாகவெம் முடன்வாழ்
அகமே **பகவான் ரமணு யநமோ நமவே.** (ரம)

7. தரைமீ துலவிச் சரண்தந் ததனிக் கடவுள்
உருவே குருநீ யெனவுண் மையின்மூ வுலகும்
பரவுஞ் சுரமா னிடபன் மதசற் குருவே
பரமேச் வரனே **ரமணு யநமோ நமவே.** (ரம)

8. கவிசித் திதருங் தவமுக் தகலா மகுட
நவரத் னமகா மணியே யருணு சலபூம்
பவனத் துறைதே வபராத் பரமோ னசதா
சிவசக் திமயம் **ரமணு யநமோ நமவே.** (ரம)

9. மனவே தனையா(ம்) மரணம் ஜனனங் கெடவே
இனியா ரருள்வா ரெனவேங் குமெமக் கெனநீ
தனிமா னிடதே கமெடுத் ததயா நிதியே
புனிதா **பகவான் ரமணு யநமோ நமவே.** (ரம)

10. அருணு சலநா தனபே தசொரூ பவருள்
தருவாய் ரமணு தலைவா தருகற் பகமாய்
உருவாய் வருவா யருள்வா யுயிருக் குயிரே
**குருவே பகவான் ரமணு யநமோ நமவே.** (ரம)

## 9. அருணாசல ரமணா

இராகம் - ஆனந்த பைரவி தாளம் - ஆதி

அருணாசல ரமணாகுரு வருணாசல ரமணா
அருணாசல ரமணாசிவ அருணாசல ரமணா

1. சிவசுந்தர வழகந்தண ஜெகமாகுரு ரமணா
பவபந்தம தறசிற்சுக பதமீந்தருள் ரமணா
தவமுந்திரு பலமெய்ச்சுகந் தரவந்தருள் ரமணா
புவனந்தொழு மலர்சேவடிப் புனிதாகுரு ரமணா. (அ)

2. தினமுன்பத மிருகைத்தொழு திருவாழ்வருள் ரமணா
வினயத்துடன் ரமணப்பெயர் விழைநாவருள் ரமணா
மனமுன்னருள் வடிவத் து(ன்)னி மகிழற்கருள் ரமணா
நனவிற்றுயி லுறவற்புத நடமிட்டருள் ரமணா. (அ)

3. பரவத்திரு வருணாசல பதமூட்டிய ரமணா
அரவொப்பிய மனமற்றிட வருளிட்டருள் ரமணா
இரவிற்பக லிலுமுன்னுட னிணைவித்தருள் ரமணா
சிரமத்தெனை மிகவற்பமு மிடவொப்பிலா ரமணா. (அ)

4. கருணைக்கட லருணக்கிரி கடவுட்சுத ரமணா
இரு(ள்) நைத்திட வுதியற்புத விதயக்கதி(ர்) ரமணா
தருணத்திது பழவாதனை தவிரற்கருள் ரமணா
அருணைப்புகழ் புவிமூவிலு மதிரச்செய்த ரமணா. (அ)

5. படமுந்துறு பணியகங்கண பரமேச்வர ரமணா
கடவுட்டரை யிடைமானிட வுடலேற்றனை ரமணா
கெடசிச்சட முடிநீயகங் கிளர்வுற்றெழு ரமணா
மடமற்றென திடரற்றுனை மருவச்சுக ரமணா. (அ)

6. உததித்திரை குமிழிக்கிணை யுலகத்துயி ருனேயே
அததற்குதித் திடநிற்றிட வழிவுற்றிட வமையும்
பததத்துவ மெனலெற்கநு பவமுற்றிட விதுகால்
பதிதத்துவ மெதுவத்திலென் றனைவைத்தருள் ரமணா. (அ)

7. சிலையைக்குனி தனுவாக்கினை சிவகோசரி யுணரப்
புலையைத்திரு வமுதாக்கினை புவிவந்தபின் னருண
✱மலையைக்கட லெனவாக்கினை மகனென்சிறு மதியை
அலையற்றருட் பரமாக்குவை யதியற்புத ரமணா. (அ)

8. சகமாயையு முனதன்பின ளதனுலுன தடியார்
அகமாயம தழியும்பர வமுதம்மழை பொழியும்
மிகவேகமு முறுமூழ்வினை விடுபட்டிடு மெளிதாய்
இகமேலுன தடியார்க்கரு ளிணையுங்குரு ரமணா. (அ)

9. அணிமஞ்சுறை யருணசல ரமணநின தருளால்
கணமுன்றனை மறவாதுனக் கடவேனெனி லுலகிற்
பணமுந்துகி லிடமுஞ்சுவை யுணவும்பெறப் பலவாய்
எணவும்மன முளதோவெனக் கிதுநீயருள் ரமணா. (அ)

10. விரியாதுள மலராயினு மெனதுள்ளமு முனதாம்
பெரிதாகிய வருளால்விக சிதமாவது பெரிதோ?
**அரியாதியி தரசீவர தகவாரிஜ குகையில்**
**அறிவாய்ரமி பரமாத்மனே யருணசல ரமணா.** (அ)

---

✱ மலையைக் கடலென வாக்கினை :- ''அருள் நிறைவான அமுதக்கடலே'' என்று ஸ்ரீ பகவான் அருணசலத்தை அமுதக் கடலாகக் கூறிய அருள்வாக்கைச் சுட்டுவது.

# 10. அற்புத மாயை

இராகம் - சிந்துபைரவி தாளம் - ஆதி

நமோரம ணயந மோரம ணயந மோவரு ணசலனே
ஶ்ரீரம ணயந மோரம ணயந மோவரு ணசலனே.

1. அற்புத மாயையி னல்விரி கின்றவிவ்
வண்டமெல் லாமுமனக்
கற்பனை யென்றுமெய் கண்டவை தீர்ந்து
கடந்தபெ ருந்தவனே
தற்பர ஞானப ராபர னேயருள்
தந்தைச தாசிவனே
சற்குரு வேபர மாத்மதி ருஷ்டிநீ
தந்தருள் தந்தருளே ! (நமோ)

2. சுற்றிய மைந்தசு கந்துயர் யாவுமுள்
தோன்றிடக் காரணமாப்
பற்றிய 'தேகம்நான்' என்றெனும் பைத்தியப்
பாமர பாவமிதை
எற்றி யெறிந்தென துண்மைநீ என்றறிந்
தின்புற வின்னருளான்
முற்றறி வீந்தருள் வாய்தொழின் மூன்றும்
முடித்த முனீச்வரனே. (நமோ)

3. செத்தவர் எத்தனை எத்தனை கண்டு
தெரிந்துமின் னுந்தெளியா(து)
இத்தரை மீதினில் ஞாயம் எனக்குற
ஏன்முயல் கின்றனனோ !
சத்திய மற்றபு விக்குறு வாழ்வினைச்
சார்வது விட்டுனிடம்
புத்திப தித்துபு றத்தைவி லக்கப்
புரிந்தருள் பூரணனே. (நமோ)

4. கண்வழி காண்பன காண்பவ ஞயின்,நான்
கண்டிட வொன்றுமில்லை !
மண்ணுல கில்தன மாமலை சேர்த்திடும்
வாழ்விலு மொன்றுமில்லை !
விண்ணுல கின்பம் மனத்தின் விகற்பம் !
விசித்திர மொன்றுமில்லை !
உண்முக மாகி, உனக்கெனை யீவதே
உத்தமம் உத்தமமே. (நமோ)

5. தோன்றி யொடுங்கும் ஜீவேச ஜகங்கள்
சுழுப்தியி லில்லையென்ருல்,
ஏன்தெரி யும்நன வுக்கன வெண்ணி
இருப்பஞே? என்றுமிதைப்
போன்ற மஹாபழி புத்திம யக்கைப்
புறந்தள்ளி ஆன்மநிலை
ஊன்றி யிருந்திட வேண்டும்; எனக்கருள்
ஊட்டுக, ஊட்டுகவே. (நமோ)

6. மேலுட லோடுயிர் வாழ்பொழு தேயருள்
மெய்நிலை கண்டடியேன்
பாலுட னீங்கிமி தந்திடு வெண்ணெயாய்ப்
பாரினில் வாழ்ந்திடவே
காலடி வீழ்ந்துனைக் கண்டு துதித்தனன்
காரண சற்குருவே !
ஆலடி யன்றெரு நால்வரை ஆரருள்
ஆழ்த்திய ஆண்டவனே ! (நமோ)

7. தன்னை யறிந்தென கந்தை யழிந்திடத்
    தந்திரம் செய்தருள்வாய் ;
என்னி லிதற்கொரு வன்மையி லேனிதை
    எந்தை யறிந்திடுவாய் ;
உன்னை யலாலுத விக்கினி யாரிடம்
    ஓடியி ரந்திடுவேன் ?
அன்னைய லாற்குழ விக்கினி யாதர
    வாரெனச் சொல்லுவதோ ? (நமோ)

8. என்ன நடந்ததின் றென்ன நடப்பினி
    யென்ன நடந்திடுமோ ?
அன்னவை யாவு மறிந்தம ஹேசன்நீ
    யல்லவோ, ஆதலினல்
என்னை யடைந்துன் எழிற்சுவை காட்டநீ
    எண்ணி யிசைந்திலையேல்,
உன்னை யடைந்துநான் உண்மை யுணர்ந்திட
    உள்வலி யுள்ளவனே ? (நமோ)

9. ''இன்றுவ ரும்சில நாளில்வ ரும்திரு
    வின்னருள்!'' என்றெளியேன்
நின்றழ நீநெடு நாளதை, நீட்ட
    நினைந்தனை யோ?அறியேன் !
கன்றுவ ரும்வழி யைக்கற வைப்பசு
    காப்பது கண்டிலையோ ?
நன்றிது! நானுனக் கின்றிது கூறுதல்
    நாடில் நகைப்பலவோ ? (நமோ)

10. ''தகதக'' வென்றொளி வீசுமுன் தண்ணுரு
        தாரணி வாழ்பொழுதே
    முகமுக மோடொரு நோக்கிலெ னக்கருள்
        மூட்டிய மெய்முறையால்,
    மிகமிக சீக்கிர மேயொளி ஞானமும்
        வீசுமெ னத்தெளிந்தேன் ;
    ''அகமக'' மென்றருள் ஆடல் புரிந்திட
        அன்பொடெ ழுந்தருளே !                    (நமோ)

# 11. குயிலொடு கூறல்

இராகம் - காம்போதி தாளம் - ஜம்பை

1. இளங்குயிலே யண்ணலிடம் எனக்காக நீசென்று
''விளங்குமுன தருள்தாக வேட்கையினுல் வெம்புகின்ருள்
களங்கமிலா வருட்பிழம்பே, கண்ணேஸ்ரீ ரமணேசா,
வளங்கனிந்த மலைமருந்தே, வா''வென்று கூவாயோ ?

2. ''அறியாதி ருந்தவளுக் கன்றே யுணர்த்தியருட்
குறியா லுனைக்கொடுத்தாய் அன்றுமுதல் கோவென்றே
வெறியா லழுதழுது விம்முகின்ருள் ரமணேசா,
வறியார்க்கே யீவாயே, வா''வென்று கூவாயோ ?

3. ''அண்ணு மலைநினைந்தே அழன்மெழுகா யுருகியுளம்
புண்ணுகிப் புலம்புகின்ருள் போயொருகால் பாராயோ ? / பாராயோ
எண்ணுத மனத்தார்க்கும் இரங்குவையே ரமணேசா,
கண்ணுளா, வா''வென்றே கனிவோடே கூவாயோ?

4. ''திருச்சுழியின் செல்வரடி தீண்டாமல் தெருநாய்போல்
இருக்கமனம் சகியாமல் ஏதேதோ புலம்புகின்ருள்
உருக்கியசெம் பொன்போன்ற ஒளிமலையே ரமணேசா,
சுருக்கெனவே வா''வென்றே சொல்லெடுத்துக் கூவாயோ?

5. ''கண்டவரெல் லாநகைக்கக் கண்கலங்கி யழுகின்ருள்
கொண்டவர்கை விடிலந்தக் கோதைமனங் கொதிக்காதோ?
அண்டமெலா மளிக்கும்அரு ணுசலனே, ரமணேசா,
பண்டெழுந்த கடலமுதே பார்''என்று பகராயோ ?

6. ''மையாடு கண்ணிலஞ்ஞு மலையாட வுள்ளுருகி
மெய்யாடித் தளர்கின்றாள்; வீண்காலம் கழியாமுன்
ஐயா,அ வட்குயிரே, அழகாளா, ரமணேசா,
செய்யாயோ வருள்''என்றே சென்றுடனே கூவாயோ ?

7. ''என்றேனு மகம்புணர்வா ரென்றெண்ணி வாழ்கின்றாள் ;
இன்றேநீர் 'இல்லை'என்றால், இப்பொழுதே பிணமாவாள் ;
குன்றே விளங்குசிவக் கொழுந்தேஸ்ரீ ரமணேசா,
நன்றேயின் றிவள்மகிழ வா''வென்று நவிலாயோ?

8. ''உண்பதற்கோ, உலகரைப்போல் உடுப்பதற்கோ அன்றி
கண்பதைக்க வுனக்காகக் காத்திருந்து நலிகின்றாள்; (யிவள்
விண்பரக்கும் அருணமலை வேந்தேஸ்ரீ ரமணேசா,
பெண்பதைக்கப் பாபமன்றோ?வா''வென்று பேசாயோ ?

9. ''கரம்பூண்ட வளைகழலக் கண்ணயரக் கால்தளர,
மரம்போன்றே கிடக்கின்றாள், மன்னவநின் மலரடிகள்
சிரம்பூணக் கொடுப்பீரேல் ஜீவன்வரும்; ரமணேசா,
வரம்வேண்டும்; வரல்வேண்டும்; வாவென்று கூவாயோ?

10. ''கருத்தழிய வுனையெண்ணிக் காய்கின்ற தவளாக்கை !
மருத்துவர்வந் 'திவள்நோய்க்கோர் மருந்தில்லை' எனமீண்டார் ;
திருத்தநின தருள்மருந்தே தேவையின்று ரமணேசா,
வருத்தமென்ன? என்னுடனே வா''வென்று கூவாயோ ?

---

# 12. உனக்கே நமஸ்காரம் !

இராகம் : செஞ்சுருட்டி　　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

1. உனக்கே நமஸ்காரம் உனக்கே நமஸ்காரம்
உண்மைப் பரம்பொரு ளேரமணு
மனக்கண் விளக்கிடும் அகக்கண் மணியே
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

2. பார்க்கும் பொழுதெல்லாம் என்னுள் ளிருந்தவை
பார்ப்பதோ டென்னையும் பார்ப்பவனே!
ஊக்க மெனக்களித் துய்க்கும் ரமணு
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

3. கேட்கும் பொழுதெல்லாம் என்னுள் ளிருந்தவை
கேட்பதோ டென்குரல் கேட்பவனே !
ஊட்ட மளித்தெனை யுய்க்கும் ரமணு
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

4. முகரும் பொழுதெல்லாம் என்னுள் ளிருந்தவை
முகர்வதோ டென்னை முகர்பவனே
உகந்தபே ரன்பினல் உய்க்கும் ரமணு
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

5. சுவைக்கும் பொழுதெல்லாம் என்னுள் ளிருந்தவை
சுவைப்பதோ டென்னைச் சுவைப்பவனே
உவக்குங் கருணையால் உய்க்கும் ரமணு
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

6. தொட்டிடும் போதெல்லாம் என்னுள் ளிருந்தவை
தொட்டறிந் தென்னைத் தொடுபவனே !
உட்பல மீந்தெனை உய்க்கும் ரமணு
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

7. எண்ணுவ தெல்லா மறிந்தெனுள் எண்ணவோர்
எண்ணமில் லாதெனை எண்ணுவனே !
உண்ணுவ தென்னை யுகந்த ரமணா
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

8. அறிபவை யாவு மறிந்தென் னகத்தென்னை
யறிந்தவா றென்றும் அமர்பவனே
உறுந்துய ரின்றியே யுய்க்கும் ரமணா
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

9. தூங்கும் பொழுதென்னுள் தூக்கம் கனவுமென்
தோற்றமுங் கண்டு துலங்குவனே
ஓங்கும் அறிவொளி யுய்க்கும் ரமணா
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

10. மாயு முடலக மாய மழித்தெனை
வாழ்வித்து **நான்**என வாழ்பவனே
ஓயும் படிக்கெனை யுண்ணும் ரமணா
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

11. எல்லாப் பொழுதிலும் எல்லா விடத்திலும்
எல்லாமா யென்னுள் ளிருப்பவனே
உல்லாச மாயுள் ளுலாவும் ரமணா
உனக்கே யுனக்கே நமஸ்காரம் !

---

# 13. பரஞ்சோதி ரமணேசா

ராகம் : குறிஞ்சி தாளம் : ஆதி

பாரு லாவும் பரஞ்சோதி நமோ நமோ
பரம சாந்த சுகவாசா நமோ நமோ
பால மோன தவராஜா நமோ நமோ
- பகவானே

ஆரணம்பர வும்பாதா நமோ நமோ
அகிலம் ஊட்டும் அருட்போதா நமோ நமோ
அன்னை சக்தி சிவநாதா நமோ நமோ
- அருணேசா

தீர வீர ஜெயதேவா நமோ நமோ
தேசு லாவும் சிவவேடா நமோ நமோ
தீன பக்த பரிபாலா நமோ நமோ
- ஜெகதீசா

தாரக ரமண நாமா நமோ நமோ
சகலரும் பணியும் பாதா நமோ நமோ
சரணம் சரணம் குருநாதா நமோ நமோ
- ரமணேசா

# 14. நாவே விடாது சொல்வாய்

இராகம் - காபி தாளம் - ஆதி

நாவே விடாது சொல்வாய் - நமோ - ரமணாய வென்ற நாமம்
(நா)

1. ஜீவேச லோகத் திரிபே சிறிதேனு மற்ற அறிவே
நீவேண்டு மாறு தருவான் நிலையான நெஞ்சி னோடே (நா)

2. காமாதி பாப மணுகா, கருமப் பலன்க ளணுகா
ஏமாதி துன்ப மணுகா, இறுமாந் தகத்தி ருந்தே (நா)

3. அருணா சலத்தி னோடே - நமோ - ரமணா யவென்று பாடே
ஒருநாமம் வேறெ தீடே உடனே கிடைக்கும் வீடே (நா)

4. இகமும் பரத்தும் சுகமே எளிதிற் பெறற்கிவ் விதமே
அகமா ரசொல்க நிதமே அதுவே விமுக்தி பதமே (நா)

5. உலகங் கடந்த விரிவே உடலோ டுவந்த திருவே
இலகும் சுகத்தி னுருவே இணையற் றஞான குருவே (நா)

# 15. "ரமணா" எனச் சொன்னால்!

இராகம் : இந்துஸ்தான் செஞ்சுருட்டி தாளம் : ஆதி

ரமணா வெனச் சொன்னாலே - நமவாதை யேது மேலே - இனி
நமவாதை யேது மேலே - குரு (ரமணா)

1. அருணா சலத்தி னாலே அவனா னநின்கண் ணாலே
ஒருகா லெனைக்கண் டாலே உளமோ யுமேதன் னாலே (ரமணா)

2. குருதே வனென்று கூவி குழையன் பெழுந்தென் னாவி
பெருகுங் கண்ணீரைத் தூவி பெருமான் பதத்தை மேவி
(ரமணா)

3. மனமற் றஞான வாழ்வே மருவக் கணித்து தாவே
தினமுற் றகத்துள் ஆழ்வே தெரியிற் பின்னேது தாழ்வே
(ரமணா)

4. இதயா சனத்தின் மீதே இறைநீ எழுந்த போதே
மதமா யைவாதை ஏதே மனமே இராதப் போதே
(ரமணா)

5. அருணா சலத்தி னுருவே அரிவே தனுற்ற திருவே
அருளான் மஞான குருவே அறிவாம் அகத்தின் உருவே
(ரமணா)

# 16. அண்ணுமலையானே !

இராகம் : ஜோன்புரி தாளம் : ஆதி

அண்ணு மலையானே - ரமணு - அண்ணு மலையானே

1. எண்ணுத பேர்க்கு மிரங்கிடு வாயே அண்ணு மலையானே
கண்ணிற் கண்டுங் கருணைசெய் யாயோ ரமணப் பெருமானே (அ)

2. உலகே சுகமதா யுடம்பே நாஞ யுழன்றது போதாதா
விலகி பந்தம் வீட்டின்பம் பெறவே விரும்பிட லாகாதா (அ)

3. நானென தென்றே நாடாம லுள்ளே நாடிடச் செய்யாயோ
ஞான ரமணநாயக ஞேடே ரமித்திட வையாயோ (அ)

4. தினந்தினம் அருள்நீ செய்வது தெரிந்தும் மறந்தவனுனேனே
சினந்து நீயும் சிசுவென்னை யகன்ருற் செய்வதொன்
( றறியேனே (அ)

5. அருணு சலசிவா அருளே யளிக்கவா அண்ணு மலைரமணு
கருணு சமுத்ரமே குருஞான ரத்னமே அருணு சலரமணு (அ)

---

# 17. அருணாசலத்தைப் பாராய்

இராகம் : சரஸ்வதி மனோஹரி தாளம் : ஆதி

1. அம்மா ! அருணா சலத்தைப் பாராய்! சும்மா விருக்குதே !
அதுபோ லமர்ந்துள் ளசையா திருக்க வாசை பெருக்குதே !
இம்மா திரத்தி னிருப்பே வலிந்திங் கென்னை யிழுக்குதே !
''ஏதும் நினையா தென்போ லிரு''வென் றென்னுள்
ளொலிக்குதே (அம்)

2. காணக் காணக் கருத்துள் ளொடுங்கிக் கண்கள் நிலைக்குதே ! வெறுங்
கல்லன் றுயிரைக் கவருங் காந்தக் கவர்ச்சி பலிக்குதே!
ஆணைப் பெண்ணை, அனைவ ருளமும் அபக ரிக்குதே! உலக
ஆசை யழிக்கும் ஆசை பெருக்கி யமைதி யளிக்குதே !
(அம்)

3. உள்ளங் கவர்ந்த கள்வன் ரமணன் ஒளிந்தங் குள்ளானோ ?
உச்சிச் சிகர வடிவா யொளிரும் ஒற்றைக் கண்ணானோ
மெள்ளந கைக்கும் வெற்புரு ரமணன் வெளியில் வாரானோ ?
விலகா தென்றன் விழியைக் கவர்ந்த வேந்தன்
ஆனானோ ? (அம்)

4. விளக்கைச் சுற்றும் விட்டில் அயரா விதமாய் அடியேனே
வெற்பைச் சுற்றும் வேட்கை பொங்கி மேன்மேல் எழுவேனே!
விளக்கில் வீழ்ந்தவ் விட்டில் மடியும் விதமாய் மனந்தானே
விண்ணோன் அருணா சலனால் அழியும் ! வேறொன் றறியேனே.

(அம்)

5. கருதக் கதிநல் கருணா சலனிக் கடவுட் கிரையானேன்;
கருமத் திரளும் கவலைச் சுழலும் கழலக் கடவேனே !
அருமைப் பொருள்எற் கருணா சலஸ்ரீ ரமணப் பெருமானே !
அவனிப் பொருளாற் பயனென்? அவனாண் டவனா னடியேனே.
(அம்)

# 18. மாசறுத்த ஞான மஹாகுரு

('சீர் சிறக்கு மேனி' என்ற திருப்புகழ் மெட்டு)

1. மாச றுத்த ஞான மஹா குரு அரு
ணாச லத்தி னுண்மை அபே தமென் றொரு
வாச கத்தி னோசை மலிந் தொலித் திட - வளர்வோனய்

2. பாத முற்ற பேர்கள் பவங் கெடச் சிவ
போத முற்ற ளித்தே புகல் தருங் குரு
நாத னுற்ற நாமம் நமோ நமோ - நம ரமணய

3. நாவி லுற்ற போதே நறுங் கனிச் சுவை
ஆவி பற்றி இன்பம் அழைத் தளித் தருள்
பாவ மற்ற வாழ்வே பலித் திடத் - தரும் பகவானே

4. வான கத்தில் மண்ணில் வருஞ் சுகந் தனைத்
தானி னைக்கி லாதே தனுள் நடம் புரி
நான கத்து நாதன் இதோ இதோ - வெனரமிப்பேனோ?

# 19. ஸ்ரீ ரமண நினைவு

இராகம் : ஜோன்புரி | தாளம் : ஆதி

நினைத்தாலும் இனிப்பூறுதே - **(a)** ரமணனை - **(b)** அருணாசலத்தை (நி)

1. (a) என்-மனந்தான வனைத்தேடுதே-(b) உள்ளே-மனந்தா...
என்னை-அணைத்தாவி பிணைத்தன்றுள் இணைத்தானைக்
கணப்போது (நி)

2. உனைக்காண விழித்தேடுதே - (a) ரமணா-(b) மீண்டும்-உனை..
(a) என்-வினைக்காம்தண் டனைத்தானோ மனக்காதல்
பலிக்காதோ (நி)

(b) தீ-வினைக்காம்.... -(c) முன் செய்த-வினைக்காம்... (நி)

3. உன்-உருக்காண விருப்பாகுதே-**(a)** திரு-உருக்......
**(b)** அருள்-உருக் ...
**(a)** முன்-நெருப்பான பொருப்பேயுன் அருட்கண்புன்
சிரிப்பின்று (நி)

**(b)** மாலயன்முன்-நெருப்பான .........

4. **(a)** மனம்-அயக்காந்த வயத்தாகுதே-**(b)** உயிர்-அயக்காந்த
உடல்-மயிர்க்கால்கள் சிலிர்ப்பாகி உயிர்க்காமல்
நினைக்காமல் (நி)

5. **(a)** உடல்-இளைத்தாவி நிலைசோருதே **(b)** மனம்-இளைத்தாவி
என்னை-விளித்தாசை களைக்காமல் அளித்தானெங்
கொளித்தானோ. (நி)

---

# 20. ஜெய ரமணா குரு ஸ்ரீரமணா

(''வாழ்வேது - சுக வாழ்வேது'', என்ற மெட்டு)

ஜெய ரமணா - குரு - ஸ்ரீ ரமணா
அருணா சலசிவ னேரமணா (ஜெய)

1. தேவ தேவ கருணா கரனேபவ
தீன பந்துவே ஸ்ரீரமணா
பாவநா சபர மேஸ்வர பகவான்
பாஹி பாஹிகுரு ஸ்ரீரமணா (ஜெய)

2. அருண சைலஅவ தார சொரூபா
அமல ஞானகுரு ஸ்ரீரமணா
கருணை மாரிபொழி ஞான கடாக்ஷா
காம நாசசிவ னேரமணா (ஜெய)

3. இதய பங்கஜ மெழுந்தருட் ஜோதி
என்றும் விளங்கிடு வாய்ரமணா
சதம காதிசுர போகமும் வேண்டா
சமாதி சுகமருள் வாய்ரமணா (ஜெய)

4. தன்னை யறிந்து தெளிந்திட அருள்வாய்
ஜனனம ரணரஹி தாரமணா
உன்னை யன்றிகதி யேதருள் செய்வாய்
ஓம்நமோ பகவ தேரமணா (ஜெய)

5. ஜாக்ர சொப்ன சுழுப்திய தீதா
   சர்வ சாக்ஷிபர மேரமணு
   ஆக்கை யானெனு மகந்தை யழித்தே
   ஆத்ம போதமருள் வாய்ரமணு (ஜெய)

6. கோப தாபமத மோஹசங் காரா
   கோர சாபசம ணுரமணு
   பாவ ஜீவமருட் போதவி நாசா
   பாஹி பாஹிபக வான்ரமணு (ஜெய)

7. கண்ணி ணுலறியுங் கன்மனச் செய்கை
   காணும் ஞானக்கண் ணேரமணு | ரமணு
   எண்ணம் வாக்குமனு காம லெழும்பே
   ரின்ப ஞானகுரு வேரமணு (ஜெய)

8. ஆக மேயளவ தாகிய விந்நான்
   யார்?அகந் தையழிப் பாய்ரமணு
   ஏக மாயக மகம்புரி நீநான்
   என்னும் உண்மையருள் வாய்ரமணு (ஜெய)

9. பக்தி யோககரு மம்பர ஞானப்
   பாதை கூடுமிட மேரமணு
   சக்தி சாந்தி யருள் சர்வமும் தானே
   தானெனும் சகஜ னேரமணு (ஜெய)

10. உண்மை ஞானசுக மேயுரு வாயிவ்
   வுலக முற்றகுரு வேரமணு
   எண்ண மற்றவிழிப் பாகிய இன்ப
   ஏக போகரம ணுரமணு (ஜெய)

## 21. என்ன விந்தையே!

இராகம் - செஞ்சுருட்டி தாளம் - ஆதி

மாலோர்க்குங் காண்பரிதாய் நின்ற தந்தையே - இம்
மண்ணோருங் காணவந்தாய் என்ன விந்தையே.

1. பூலோகம் செய்தபெரும் புண்ய ரூபமோ - நீதான்
பொய்யாத சாதகரின் பூர்ண த்யாகமோ - அன்றி
நூலோதி ஏமார்ந்தோர் நொந்த தாபமோ - நாங்கள்
நோகாமற் கண்டுகொண்ட ரமண ரூபமே. (மா)

2. பன்னூற்ருண் டுக்கொருகாற் பாரில் தோன்றிடும்-ஞானப்
பகலவனே **ஸ்ரீரமண பகவனே** யுனைக் - காண
என்னோற்றோம் ! என்னோற்றோம் ! ஏதுமில்லையே ! - எனினும்
எங்கள்முன்னும் வந்து நின்ரு யின்ப ரூபமே. (மா)

## 22. கடந்த ஆன்ம வானமே

(''ஜிந்தகி .........'' என்ற மெட்டு)

கடந்த ஆன்ம வானமே கால்கொண் டுலவும் ஞானமே
கடவுள் ரமணன் கோலமே .(கட)

1. காரணம் காரியம் கடந்த ஞான வீதியே
காதலாய்க் கசிந்த அன்பர் கண்முன் வந்த ஜோதியே
நாரணன் நால்வேதியே நாடரும் அனாதியே (கட)

2. மனம் இறந்த வாழ்விலே வாழும் வண்ணம் பூவிலே
வந்தி ருந்த ரமணநாம மென்றுமூறி நாவிலே
கொண்ட ணைந்து வாழ்வனே குருவி னோடுள் ளாழ்வனே
(கட)

3. பரம்பொருள் அண்ணுமலை பாத மோடுலாவியே
பாரில் வாழ்ந்த நாளிலே பணிந்து ரமணன் தாளிலே
பார்வை கொண்ட கண்களே பாக்ய சற்ஜ னங்களே (கட)

4. பிறந்திறந்து போவதே பெரியநோ யிதோய்வதே
பேறடைந்து வாழ்வதேல் பிறந்த தெங்கென் ருய்வதே
பிரம ஞான மார்க்கமே பேத மற்ற நோக்கமே (கட)

5. அநித்ய தேகம் ஆன்மஞே? அல்ல சிந்தை யான்மஞே ?
அல்ல அல்ல வென்றகண்ட மான ஞான மாரெஞேர்
தேஹம் நாஹம் கோஹமே ஸோஹம் ஸோஹம்
ஸோஹமே (கட)

## 23. அது நீயே !

இராகம் : செஞ்சுருட்டி தாளம் : ஆதி

1. உலகம் நிறைந்த ஒளிநீயே
உணர்வாய் விளங்கும் ஒளிநீயே
பலவென்று தோன்றும் பகிரண் டகோடி
யலைநின் றவாழி நிலைநீயே !

2. வானம் ஒடுங்கும் வெளிநீயே
மனமற் றமோன மதுநீயே
மானந் திருந்த மலரோ னுமால்முன்
மறைவற் றெழுந்த மலைநீயே!

3. நிகழ்கா ல(ம்)நின்ற நிலைநீயே
நிசிநா ளிலாத அசிநீயே
அகமா யிருந்துள் ளறிவின் பமான
**பகவா** னதீத பர(ம்)நீயே

4. எல்லா மொடுங்கு மிட(ம்)நீயே
இயல்பாய் விளங்கும் சுய(ம்)நீயே
இல்லாத தின்றி யெல்லா முமாகி
சொல்லா சொரூப சுக(ம்)நீயே!

5. அருணு சலேச னவன்நீயே
அகஞா னமான சுக(ம்)நீயே
குருநா மமான **ரமணு யதேவ**
**நம**வென் னுமுள்ள மதுநீயே !

## 24. உனது திருவருளே

இராகம் : தேவகாந்தாரி தாளம் : ஆதி

1. உனது திருவருளே - இந்த - உலகக் காட்சியெல்லாம்
மனது வடிவினனுய் - நீயே - மாயையும் ஆகுவையே
தனதுள் ளறிவொளியா - யிதயம் - தங்கும் போதினிலே
எனது நானிலதால்-தோன்ற-எதுவு மில்லையயலே
-ரமணு (உன)

2. அறிவு வடிவினன்நீ - யாஞலும் - அருணு சலத்தினிலே
உறவில் குருவடிவாய் - கண்முன்-உடலோ டுலவினையே
மறைவில் அறிவொளியாய் - வாழும் - வழியை யருளினையே
இறைவ நினதருளால்-எனையுன்-இயல்பி லிணைத்தருளே
-ரமணு (உன)

## 25. பகவான் அருள் விழிகள்

இராகம் : மாண்டு தாளம் : ஆதி

தன்மையை நினைப்பூட்டும் முன்னிலையாய்-உள்ள
சற்குரு ரமணனின் கூர்விழிகள்
இன்மையை உண்மையா யெண்ணும்மன-மாயம்
எரித்துநீ ருக்கிடும் இரவியடி.

# 26. வரமொன்று தந்தான்

இராகம் : சாமா தாளம் : திசிர ஏகம்

வரமொன்று ரமணேசன் தந்தான்
வாழ்வில் தாஞக (வ)

1. உரமுண்ட அறியாமை மாற - இந்த
உலகங்கள் கனவாகத் தீர
நரமன்று நானென்ற போதம் - கண்டு
நடுநின்று வாழ் என்று சொல்லி. (வ)

2. யாதொன்று மறியாத வென்னே - தனக்
காளென்று கொண்டேற்ற பின்னே
ஏதொன்று மில்லாமல் வைத்தான் - நான்
என்னென் றுரைப்பே னிதைத்தான். (வ)

3. கண்ணுர மனமாரக் கண்டேன் - என்னேக்
கரைசேர்க்குங் கலமாகக் கொண்டேன்
எண்ணுத துயிலாத நாட்டில் - வாழ
எளிதான வழியொன்று காட்டி. (வ)

4. உடலென்றும் உயிரென்றும் ஏதும் - பிரித்
துணர்கின்ற உரனில்லாப் போதும்
கிடவென்று தன்காலி லிட்டான் - உள்ளங்
கிளர்கின்ற நடமாடி விட்டான் ! - வேறு
கதியின்றி பதியாகி விட்டான் ! (வ)

---

# 27. காரணம் என்ன சொல்வேன்?

இராகம் : கர்நாடக தேவகாந்தாரி　　　　　　　　　　தாளம் : ரூபகம்

1. காரணம் என்ன சொல்வேன் - உன்
கருணை மழையினுக்கே - செய்த
தாரணை தியானமெல் லாம் - ஒரு
சாதனை யல்ல வப்பா - ரமண　　(கா)

2. நாரணன் நான்முகனின் - முயற்சி
நாண மடைந்த தென்றால் - வே
றுருவைத் தன்தவத் தால்-முயன்
றடைந்திடக் கூடுமப்பா - ரமண　　(கா)

3. சாத்திரங் கற்ற தில்லை - சதுர்
சாதனை யுற்றதில்லை - ஆனால்
பாத்திர மாகிடவே - அடிமைப்
படுத்திய நின்னருட்கே - ஒரு　　(கா)

4. ஆடித் திரிந்த வென்னை - உன்மேல்
ஆசைப் படுத்தி யுன்னைப்
பாடிப் பதம் பெறவே - தந்திரம்
பண்ணிய நின்னருட்கே - ஒரு　　(கா)

5. பூருவ புண்ய மல்ல - இதுநாள்
புரிந்த தவமு மல்ல
யாருமில் லாநிலையில் - எனக்குன்
னருட்டுணை வந்ததென் றால்-ஒரு　　(கா)

6. தாய்தந்தை யாகினை நீ - அருளும்
சற்குரு வாகினை நீ - தன்னை
ஆய்வழி செய்தவன் நீ - வலியவந்
தாண்டவன் நீரமண - ஒரு　　(கா)

---

# 28. இதய வாழ்வு

இராகம் - செஞ்சுருட்டி தாளம் - ஆதி

1. கொண்டுசெல் வாரே ஒருதின மிதயக்
குகையில் ரமணகுரு நாதன்-என்னைக்
கண்டவர் சொல்லாக் காட்சி விளங்கும்
ககன வுலகினிலே வாழ-என்னை (கொ)

2. தாகமும் பசியும் தன்னலப் பகையும்
தமசுமில் லாப்பர வெளியில்-ஞான
மோகன ரமணன் மோன முரளியே
முடிவிலா துலவிடு மங்கே-என்னைக் (கொ)

3. நனவுடன் துயிலும் கனவுமில் லாத
ஞானர வியொளிரும் நாட்டில்-அங்கே
மனமுட லகன்றே அவருடன் ஏக
மங்கள வாழ்வினில் வாழ - என்னைக் (கொ)

4. குறைபிணி துயரும் மரணமும் காம
க்ரோத வுலோபமு மணுகா-தங்கே
அறிவொளி நிலவில் ஆனந்த மாக
ஆத்ம ரமணகுரு நாதன்-என்னைக் (கொ)

5. போனவர் திரும்பாப் புதுநக ரதிலே
பொன்மய மாளிகை யுள்ளே-அங்கே
ஞானமெய் ரமணச் சபைநடு வதிலே
நாதன வருடனே வாழ-என்னைக் (கொ)

# 29. அருட்புக லடைவு

இராகம் ஃ செஞ்சுருட்டி　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　　தாளம் ஃ ஏகம்

1. என்னை உய்விக்க எண்ணங்கொண்ட - ஓர்பெரும்
　　உத்தமனை யடைந்தேன் - அவன்
　செய்விக்கும் லீலைகளால் - என்னையவன்
　　தேர்ந்ததை நானறிந்தேன்! - என்னை, (உய்)

2. மாலுமி யின்றி பெருங் - காற்றில்
　　மரக்கல மாகாமல் - மேன்
　மேலு மெனைக் காத்தே - யருள்செய்யும்
　　விந்தையை என்னசொல்வேன் - என்னை, (உய்)

3. துன்பந் தருவன போல் - எனக்கொரு
　　சூழ்நிலை தோற்றுவிப்பான் - ஆனல்
　இன்பம் அதன் முடிவாய் - எனக்கவன்
　　ஏற்படுத் திக்கொடுப் பான் - என்னை, (உய்)

4. எண்ணத்திற் கெட்டாததாய் - முன்கூட்டி
　　ஏதேதோ திட்ட மிட்டே-யருள்
　வண்ணத்தி லூறிடவே - என்னையவன்
　　வளர்ப்பதைக் காணுகின் றேன் - என்னை, (உய்)

5. இத்தனைப் பொறுப்புடனே - குழந்தையாய்
　　என்மேல் விருப்புடனே - யுள்ள
　சத்திய **ரமணனையே** - என்றென்றும்
　　**சரண கதியடைந்தேன்** - என்னை, (உய்)

# 30. என்ன வேண்டும்?

இராகம் : செஞ்சுருட்டி　　　　　　　　　　　　　தாளம் : ரூபகம்

1. என்ன வேண்டும், என்ன வேண்டாம் என்பதை யெல்லாம்
　　என்னைவிட நன்கறிந்தோன் எம்பெரு மானே !
　தன்னை வேண்டும் அன்பர் தந்தை தாயுமா னானே
　　பின்னையார்பின் பேகவேண்டும் பிள்ளையாம் நானே!
　　　　　　　　　　　　　　– எனக் (கென்ன வேண்டும்)

2. நானினைத்த தீவதென்றால் ஞாய மாகுமா? - ஸ்ரீ
　　ரமணனிச்சை யன்றியேதும் நல்ல தாகுமா?
　தானினைத்த தீவன் ! கேட்போன் தாசனாகுமா ?
　　சர்வமும்அ றிந்தோன்செய்கை தப்பு மாகுமா?
　　　　　　　　　　　　　　–எனக்(கென்ன வேண்டும்)

3. இச்சையற்ற வாழ்விலுள்ள இன்ப மின்பமே !
　　எண்ணமற்ற ஞானமொன்றே இன்ப மின்பமே !
　அச்சமற்ற வாழ்வளிப்போன் அப்ப னென்பமே !
　　அன்றிமாந்த ரால்விளைவ யாவும் துன்பமே !
　　　　　　　　　　　　　　–எனக்(கென்ன வேண்டும்)

4. காணநல்ல தேயெனக்குக் காட்டி வைப்பனே !
　　காதுநாசி காயம்நாவும் கட்டி வைப்பனே !
　ஆணவங் கிளம்பிடாமல் ஆத ரிப்பனே !
　　அவ்வப்போதங் கானவாறே ஆட்டி வைப்பனே !
　　　　　　　　　　　　　　–எனக்(கென்னவேண்டும்)

5. என்றுநானெங் கென்னவொன்றி யற்ற வேண்டுமோ,
　　அன்றதங்கே ஆக்குவான்கேட் டாக வேண்டுமோ ?
　நன்றேயன்றித் தீமைவந்திங் கென்னைத் தீண்டுமோ?
　　ஸ்ரீ-ரமணனன்றி வேறெனக்கென் னாக வேண்டுமோ?
　　　　　　　　　　　　　　–எனக்(கென்ன வேண்டும்)

# 31. எப்படியோ அருள்வாய் !

இராகம் : பியாக் தாளம் : ரூபம்

1. எப்படியோ அருள்வாய்-அதை
எவ்விதம் நானறிவேன்?
இப்படி யப்படியென்-றுன்னை
ஏற்பது வீணல்லவோ? (எ)

2. வாழ்வில் எவையெல்லாம் - நான்
வாய்ந்திடில் நன்மையுண்டோ
யாவையும் நீ யறிவாய் - தரும்
வல்லமை யும்உடையாய்! (எ)

3. நின்னருள் சம்மதமாய்-எது
நேர்ந்திடு மோவதெல்லாம்
என்மனப் பூரணமாய் -ஏற்(று)
இன்புற வேயருள்வாய். (எ)

4. புன்மை யொழிந்திடவும் - அருள்
போத மெழுந்திடவும்
என்னினும் என்பொருட்டாய்க்-கவலை
ஏற்பவன் நீயல்லவோ! (எ)

5. தூநெறி நீதருவாய்! - நான்
துன்புற நீசகியாய்!
ஏனினி மேற்கவலைப் - படு
வேன்**குரு வேரமணா!** (எ)

---

## 32. அருளால் நடக்காத துண்டோ?

(''எந்தனுள்ளம் துள்ளிவிளை யாடுவது மேனே''.. என்ற மெட்டு)

இன்னுமையங் கொள்வ தேனே ஈசனருள் மேலே ?
இன்றுநடக் காததுண்டோ எந்தை நினைத் தாலே ?

1. முன்னைவில்லாக மேரு தான் வளைய வில்லையோ ?
முப்புர மேளரிக்க வேநகைக்க வில்லையோ?
என்னென்ன அற்புதங்கள் ஈசன்செய்ய வில்லையோ?
இன்றுநடக் காததுண்டோ எந்தைநினைத் தாலே ?

(இன்னு)

2. பொல்லாத நஞ்சமுது போல உண்ணவில்லையோ ?
புன்மையை நன்மையாக்கும் போதனவ ரில்லையோ?
எல்லாம்செய் வல்லவர்க்கீ தென்னபெருந் தொல்லையோ?
இன்றுநடக் காததுண்டோ எந்தைநினைத் தாலே ?

(இன்னு)

3. சங்கமும் ஆழியுடன் தானெழுந்தே ஓடியே
தந்திக் கிரங்கிவந்த தாலவரை நாடினேன்
எங்கும்நி றைந்தோனன்றோ? இங்கெழுவ தில்லையோ?
இன்றுநடக் காததுண்டோ எந்தைநினைத் தாலே

(இன்னு)

4. ஒன்றும்பெ ருதபாவி யாயிருந்த போதிலும்
ஓம்நமோ ஸ்ரீரம ணயவென்பா ருள்ளிலே
என்றுமிருப் பானன்றோ ? என்னைவிட எண்ணுமோ ?
இன்றுநடக் காததுண்டோ எந்தைநினைத் தாலே?

(இன்னு)

5. பாசம்பொ ருமைசினம் பாவம்யாவும் மூடியே
பற்றிடி னும்பரம னுகளன்னைத் தேடியே
ஈசன் ரமணனருள் என்னைத்தூய்மை செய்யுமே
இன்றுநடக் காததுண்டோ எந்தைநினைத் தாலே

(இன்னு)

# 33. அருள்முன் மாயை வலி

1. பெருத்த வலகு மிறகுகளும்
   பெற்ற பருந்து பிறையளவுக்
கரிச்சா ஞேடு சண்டையிடக்
   கையா லாகா தோடுது பார்!

2. பறம்பு மலைபோற் பருவுருவைப்
   படைத்த யானை படுக்குமிடத்
தெறும்புக் கூட்டத் தினுக்கஞ்சி
   யெழுந்து விலகி நிற்குதுபார்!

3. சுட்டுப் பொசுக்கிக் கடனீரைச்
   சுருட்டித் தூக்குஞ் சூரியனைப்
பட்டுக் குடையான் மறைத்துவிட்டுப்
   பகலில் மனிதர் நடப்பதைப்பார்!

4. பருமை யிழுக்கும் புகைவண்டி
   பலமு மோட்டு பவன்கையிற்
றிருகைத் தள்ள முடியாமற்
   றேங்கி யடங்கி நிற்குதுபார்!

5. உலகிற் பெரிய யோகியையு
   முலுக்கி யுடைக்கும் மாயையுனை
விலகி வழிவிட் டிடரமணன்
   மிகவு மெளிதாய் விழிப்பானே.

# 34. இன்னும் எத்தனை நாள் ?

இராகம் - குறிஞ்சி தாளம் - திசிரஏகம்

1. இன்னு மெத்தனைநாள்-மாயை
ஏகாதி பத்திய மென்னிடமே !
அன்னை யரற்றிவிட் டால்-அதற்
கப்புற மண்ண னடிப்பானோ?
என்னைக் காத்திடவே-ரம
ணேச னெழுந்தான்; நீசமன
முன்னை வாசனைகள்-இனி
மூண்டெழ முடியுமோ முன்போல (இன்)

**ஏ ஆசைப் பேயே !**

2. ஆசைக் கொடுபேயே-உன்
ஆட்டமெல் லாமும டங்கிவிடும்
நீச உலகினிலே-சுகம்
நெல்லள வில்லை எனுநிஜத்தை
ஈசன் ரமணனருள் - வந்
தென்னுள் விளக்கி யெழுந்ததனால்
ஓசைப் படுத்தாமல்-நீ
ஓடி மறைந்துன் னுருவழிவாய்! (இன்)

**ஏ கோபமே**

3. கோபப் பெருமூடா - உன்
கொட்ட மடங்கிக் குறும்பழியும்
ஆபத் தணுகாமல் - பே
ரன்புப் படையை யளித்ததனால்
பாபச் சுடுமொழியை-ஸ்ரீ
பகவா னறுப்பார்! பரமான்ம
தீபத் தொளிமுன்னே - உன்
றிருட்டுத் தனமற் றுருவழிவாய் ! (இன்)

**ஏ உலோபமே!**

4. நரகச் சுயநலமே - உன்
நாடக மோய்ந்திடு(ம்) நாளினிமேல்
பருகு(ம்) நீர்முதலாய் - எல்லாம்
பலர்க்கு மளிப்பதிற் பார்சுகத்தை!
அருகில் ரமணனருள்! - இனி
யாருனைச் சுகமென நம்புவரே?
வரகி லிருந்துமண - நெய்
வடியுதென் ருல்நம்ப மனம்வருமோ? (இன்)

**ஏ மோகமே!**

5. மோக விடப்பாம்பே ! உன்
முன்பல் லிரண்டு முடைந்துவிடும் !
சாகப் போகின்ருய் - ஸ்ரீ
சற்குரு ரமண னருளாலே!
தேகத் தினைநாளுய் - விடம்
செலுத்தி மயக்குமுன் றிறமையெல்லாம்
போகப் போகிறதே - பரி
பூரண வுண்மை புரிந்துவிடும் ! (இன்)

**ஏ மதமே!**

6. கெட்டாய் மதநாயே - இனிக்
கெஞ்சிடி னும்மிடம் நெஞ்சிலில்லை
முட்டாள் தனமாக - நானே
முதலிலென் றெதிலும் முனைவேனே!
விட்டே னுன்தொடர்பை-குரு
வீர ரமணனின் வீக்ஷணத்தால்!
சிட்டாய்ப் பறந்திடுவாய் - சீசீ
திரும்பிப் பாராதோடி மறைந்திடுவாய்! (இன்)

**ஏ பொறுமையே!**

7. அற்பப் பொறுமையனே - உன்
னுட்சி முடிந்தரு ளாட்சிவரும்
முற்பட் டகமகிழ்வேன் - யார்
முன்வந்து மேன்மையை முன்னிடினும்
பற்பல நாளாக - உன்னுற்
பட்ட தவமானம்! பாக்யமில்லை!
இப்போ தோடிவிடு - ரம
ணேசன்கை வாளுனை வீசிவிடும்! (இன்)

**ஏ அன்புருவமே!**

8. அன்புப் பெருந்துணையே - அரு
ணுசல னோரம ணுகுருவே
இன்பத் தவநிதியே-பர
மேச்சுர னேயினி யேனுமெனைத்
துன்பப் படுத்திவந்த-அறு
துஷ்டப் பகைவரைச் சுட்டெரித்தே
உன்பற் றளித்தருள்வாய் - ஆன்ம
உத்தம பக்தியை யூட்டிடுவாய். (இன்)

9. எந்தை குருரமணு - உனக்
கென்மே லிருக்கு மிரக்கமதால்,
சந்தே கத்தினுக்கே - யிடம்
சற்றுமில் லாமலென் சத்துருமுன்
பந்தயம் வைத்துவிட்டேன்! - எனைப்
பாது காப்பதுன் பாரமையே!
வந்தே யுதவிடுவாய் - அருள்
மான ரக்ஷணமுடன் வாழ்ந்திடவே! (இன்)

**ஏ ரமணக் கண்ணு!**

10. போரை மூட்டிவிட்டாய் - உள்ளே
பொல்லாதா ருள்ளதைக் காட்டிவிட்டாய்;
யாரைத் துணைகொண்டே - பகை
யரக்க ரறுவரை யதம்புரிவேன்?
**தேரை நடத்தியருள் !** - யுத்தம்
செய்ய வெனக்குத் திறமையருள்!
வீரன் ரமணனருள் - என்னுள்
வென்றதென் றிங்கே விளக்கியருள்! (இன்)

## 35. இதயத் தேரில் எம்பெருமான்!

1. இதயத் தேரி லெம்பெருமா
னெழுந் தருளினு னினிமேலே
சிதையு முலகந் திரண்டாலுஞ்
ஜெயமென் னுடைய செல்வமதே!

2. ஒருவன் ரமண னென்றுணையா
யோங்கி நின்ருன் ! உலகெல்லாம்
வெருவி யெதிரே திரண்டாலும்
வெற்றி யெனதே, வியப்பென்னே!

3. இறைவன் ரமண னிச்சைக்கே
யீந்தே னென்னை யிங்கினிமேன்
மறைவொன் றில்லை, பயமில்லை!
மகிழ்வே வாழ்வின் வடிவானேன்

4. அறிவின் விழிப்பை யடையாமல்
அலையு முலகக் கௌரவரே
நெறியில் ரமண னென்தேர்மே
னின்ரு னினிநீர் நிகராமோ?

5. உலகக் கௌரவம் விழைவோரே
யுண்மைக் கௌரவர் நூற்றுவராம்!
உலகின் புகழிக ழொழித்தோரே
யோகேச் வரனுக் குற்றவராம்.

6. அன்பு மடக்குமு மச்சமிலா
வறிவுந் தெளிவு மிவைநான்கும்
என்பின் ரெுடரும் பாண்டவராம்
இறைவன் ரமணன் ரிஷிகேசன்.

7. கோடிக் கணக்கிற் கௌரவரின்
கூட்ட மெதிரே குவிந்தாலும்
ஆடிக் காற்றிற் றுரும்பேபோ
லருளின் முன்னே யறியாமை.

8. அயலைப் பாரா ரணுவேனும்
அறிவைப் பேரா ராராரோ
பயமற் றன்னோ ரென்னிறைவன்
பக்கம் வருவீர் வருவீரே.

9. நல்லோர் சிலரு(ம்) நாசத்தார்
நடுவே காணப் பட்டாலும்
எல்லா மறிந்த ரமணேசன்
இச்சைப் படியே யெதிர்ப்போமே!

10. உலகே யுலகே யுன்புகழும்
ஒவ்வாப் பொய்யா முன்னிகழும்
இலகு மறிவா யிருப்போரை
யெதிரும் வலிமை யெய்துவதோ?

11. மாலை சூட்டு மடவுலகே,
வசையைப் பேசும் சடவுலகே,
வேலைக் கிரைக்க வல்லாயோ?
விரிநீர் வடிக்க வல்லாயோ?

12. மனித வுலகின் வசைமாரி
மற்றும் புகழா(ம்) மண்மாரி
புனித வானிற் போங்கதிரைத்
தொடுமோ? புவியோர் பொருளாமோ?

13. இன்று புகழு முலகத்தார்
எறிவார் கல்லான் மறுநாளே;
என்றும் மீண்டும் எடுத்துண்ணேம்
எச்சி லென்றே யுமிழ்ந்ததையே.

14. ஐயன் ரமண ஞணையெதோ
வதுவே நாம்செய் யருட்பணிகள்;
வையம் வழங்கும் கைச்சாற்றை
வாங்கோம், மதியோம், வாழ்வோமே!

15. வாழ்க்கைக் கனவை மதியாமல்
மாயைச் சேற்றில் பதியாமல்
ஊக்கத் துடனே யுழைத்தருளா
லுண்மைப் பொருளா யுய்வோமே !

16. ஒன்றே துணவன்! அவன்ரமணன்
ஒருவ னன்றிப் பிறவெல்லாம்
இன்றே யின்றே! யென்றுண்டோ?
ஏனெங் கெவ்வா றேற்போமே?

17. உதித்திங் குலவி யோய்வதெலாம்
உள்ளோன் ரமண னருளன்றோ?
மதிப்ப தெவரை? அவனடியில்
வாழ்வோம் ! வாழ்வோம் ! வாழ்வோமே !!

---

# 36. பகவான் ரமணனேயே பாடுகின்ருேம்

இராகம் : தேசியம் தாளம் : ஆதி

பகவான் ரமணனேயே பாடுகின்ருேம் - அவன்
பாதமலர் நம்தலேமேற் சூடுகின்ருேம்
குகையாம் இதயத்திலே கூடுகின்ருேம் - சற்
குருவருளா லுலகில்விளே யாடுகின்ருேம். (ப)

1. அகம்யார் ஆய்வதனுல் அகந்தை மாய்வதனுல்
சுகக்கடல் ஆழ்வதனுல் தோற்றமெலாம் ஓய்வதனுல்
ஜெகமென் ருென்றுமில்லே, தேசகா லங்களில்லே
சிவமே யுள்ளதன்றி ஜீவநான் ஏதுமில்லே. (ப)

2. செல்வம் வறுமையெல்லாம் சிறுமை பெருமையெல்லாம்
நல்லவை தீயவெல்லாம் **ரமணனே** யன்றியில்லே!
வல்லவன் அருளின்வழி வாழ்வையே ஒப்படைத்தோம்
எல்லா மிறைவனன்றி யென்னதென் றேன்நினேப்போம்?(ப)

3. உடல்பொரு ளாவியிலே யுரிமைகொண் டாடாமலே
**கடவுள் ரமணன்** கையிற் கருவிக ளாய்க்கொடுத்தோம்
உடையோ னிடமவற்றை யொப்படைத்த காரணத்தால்
விடவே ருென்றுமில்லே வேண்டுவது மொன்றுமில்லே. (ப)

4. விரும்ப வெறுக்கவென்றே வேருென்றும் வெளியிலில்லே
திரும்பி யகமுகமே சிவசிவ வென்றிருப்போம்
விரும்புவோ னெழுவதெங்கே வெளியு முள்ளுமெங்கே
**திரும்புவ திருப்**பேயன்றிச் செயல்வடி வாவதில்லே. (ப)

5. இருப்பாம் அறிவையன்றி இன்பம்வே ருென்றுமில்லே
இருப்பெனும் சக்தியன்றி யெழுச்சியன் னியமுமில்லே
இருப்பவ னிருப்பதன்றி யெழுந்திட எவனுமில்லே
**இருப்பே ரமண**னென்னும் இறைவனேக் காண்பதனுல் (ப)

## 37.இறைவனைக் கண்டிட எண்ணிளுல்

1. இறைவனைக் கண்டிட வெண்ணிளுல் - வே
றெதையுமே காணு திருந்திடு;
இறைவ னுனைக்காண வேண்டுமேல்-வே
றெவருங்கா ணுமலி ருந்திடு.

2. இறைவன்சொல் கேட்க விரும்பிளுல் - வே
றெதையுமே கேளா திருந்திடு;
இறையுன் குரல்கேட்க வேண்டுமேல்-வே
றெவர்காதுங் கேளாமல் ஏத்துவாய்.

3. இறைவனை நீதொட வெண்ணிளுல்-வே
றெதையுந் தொடாம லிருந்திடு;
இறைவ னுனைத்தொட வேண்டுமேல்-வே
றெதுவு முனைத்தொட விட்டிடேல்.

4. இறைமணம் முகர்ந்திட விச்சையேல்-வே
றெதையுமே நீமுக ராதிரு;
இறையுனை முகர்ந்திட வேண்டுமேல்-வே
றெதளுலு மேமுக ராதிரு.

5. தெய்வ ருசியைநீ தேடிளுல்-நா
தீஞ்சுவை தேடா திருந்திடு;
தெய்வ முனைச்சுவைத் தேகொள்ள-வேண்டில்
செகத்தாற் சுவைக்கப் படாதிரு.

6. வெய்யிலி லோட விரும்பிளுல் - நிழல்
வீட்டை விரும்பிலை என்றுதான் - பொருள்
பொய்யுல கில்மனம் போகுமேல் - ஈசன்
போகட்டு மென்றே பொருள்படும்.

7. சொப்பனப் பித்த மிருந்திடில் - இன்னும்
 தூக்கம் விடவில்லை என்றுதான் - பொருள்
 இப்புவி நீமெய்யென் றெண்ணிஞல் - ஈசன்
 என்பது பொய்யென்ற வெண்ணமே.

8. அட்ட வுணவை யுண்ணுமலே - நேரம்
 ஆக்கிற் பசியில்லை என்றுதான் - பொருள்
 கெட்டதை நீவிடக் கூசிஞல் - தெய்வக்
 கேண்மையெல் லாம்வெறுங் கேலிதான்.

9. காம னிருப்பிடம் ராமனே - ஒரு
 காலு முருன்;அருட் கைவில்லோ-டுள்ளே
 ராம னிருப்பிடம் காமனே - வரான்
 நாசமுற் ருனிதை நம்புவாய்.

10. ஐம்புல னுலும் ரமணனை - நன்
 கனுபவிக் கவெண்ணில் ஆகுமே-விரைந்
 தெம்பெரு மானருள் கூடும்நீ - இனி
 யேனு முயன்றே யெழுந்திரு. (இறை)

# 38. மனமே மனமே ஓடிவா!

இராகம் : இந்துஸ்தான் காபி　　　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

1. மனமே மனமே ஓடிவா மௌன வெளியி லாடவா
இனிமே லலேயா தின்பமுடன் இதயா சனத்தில் வாழவே (ம)

2. ஞான மோஹன ஸ்ரீரமண நாயக னழைத்தான் வாராயோ
ஈன வுலகில் என்னபயன் எம்பெரு மானுடன் வாழவே (ம)

3. பொன்னை மாதரை பூமியைநீ போற்றி யழிந்தது போதாதா
என்னை யாளுடை **ஈச்வரரமணன்** இன்ப மடைந்தினி
வாழவே (ம)

4. வெய்யிலி லோடி யயர்ந்தாயே வீட்டிலி ருப்போம் ஓடிவா
ஐயன் ரமணன் அகமக மெனவே ஆடிடும் நடனங் காணவே
(ம)

5. செய்கை யெல்லாம் வீணுனக் கோர் தேவையும் வேண்டாம்
ஓய்ந்திடுவாய்
தெய்வ ரமணன் சீரடி மேலே செல்லக் குழந்தையாய்
வாழவே (ம)

# 39. மனமே மயங்காதே

இராகம் ៖ சாரங்கா | தாளம் ៖ ஆதி

மனமே இனியாகிலும் மயங்காதே - பொல்லா
மாநில வாழ்க்கையில் முயங்காதே

1. நேற்றிருந் தாரின் றிருப்பது நிஜமா
   நிலையில்லா வாழ்க்கையே சதமாமா - பூவில்
   நிலையில்லா வாழ்க்கையே சதமாமா (மனமே)

2. பொன்னொடு பொருளும் பூமியிற் சுகமும்
   மின்னலைப் போலவே மறைவதைப் பார்நீ - வானில்
   மின்னலைப் போலவே மறைவதைப் பார்நீ (மனமே)

# 40. வருந்தாதே நெஞ்சே!

இராகம் ஃ சாமா தாளம் ஃ ஆதி

வருந்தாதே - நெஞ்சே - வருந்தாதே
வாழ்வில் சுகமுமுண்டு - மேவுந் துயருமுண்டு (வரு)

1. வரும்பெருந் துன்பமும்போய் மறந்திடும் நாளுமுண்டு
அருஞ்செல்வஞ் சேர்வதுண்டு வெறுங்கையு மாவதுண்டு (வரு)

2. திண்மையுடல் குன்றிச் சிதைவ தியல்பேயுன்
உண்மை நிலேக்கென்றும் ஊறில்லே யாதலினல் (வரு)

3. நல்லோனென் றேயுன்னே நாட்டிற் புகழ்ந்தோர்பின்
பொல்லா னெனப்பேசி புன்மொழி புகன்ருலும் (வரு)

4. நன்றுதீ தென்றிங்கே நடப்பதெல் லாம்ரமணன்
அன்றிவரா தவன்றன் அருட்செய லென்றெண்ணி (வரு)

5. ஐயன் ரமண னுன்றன் ஆன்மலா பங்கருதிச்
செய்யும் பெருங்கருணேத் திருவிளே யாட்டென்றே. (வரு)

# 41. கவலையை ஒழி

1. கவலைக ளுன்னைக் கடித்துத் தின்பதின்
காரணங் கண்டாயோ?
கவலையெ லாம்போய் அமைதியில் வாழ
காதலுங் கொண்டாயோ?
நவநவப் பொருளால் சுகமுற நினைத்தால்
நஷ்டமே விளைவாகும்
அவைகளி லிருந்தோ சுகம்வர முடியும்?
ஆய்ந்திடு தெளிவாகும்.

2. ஐம்புல அறிவே அவனியின் வடிவம்
அதற்குமேல் உண்மையில்லை
ஐம்புல நுகர்வே சுகமென நம்பில்
அல்லலுக் களவுமில்லை
ஐம்புலத் திருப்திக் காகவுழைப் போர்க்
காயுளில் ஓய்வு மில்லை
ஆண்டவன் ரமணன் அறிவுரை கேட்டால்
அதன்பின்னோர் கவலையில்லை.

3. சுகவடி வுன்றன் சொரூபமே; வெளியில்
சுகமொரு சொட்டுமில்லை
தோன்றுட லுலகைச் சுவைத்திடு முனைநீ
சோதனை செய்வதில்லை
அகமுக மாக திரும்பிடு; சுகத்திற்
களவழி வேதுமில்லை
அடுத்தது காணு தகத்திரு; கடவுள்
ஆனந்த மெல்லையில்லை.

4. உடலைக் கொடுத்தது ஊழ்வினை யாகும்
உடல்விடு கணம்வரைக்கும்
உறுசுகம் துன்பம் ஒவ்வொன்று மூழில்
உள்ளது தான்கிடைக்கும்
கடவுளைச் சரணம் புகுந்திடில் வருந்தக்
காரணம் ஏதிருக்கும்?
கடவுளின் பாதம் உன்பொருட் டெந்தக்
கவலையுந் தான்வகிக்கும்.

5. வினைப்பய னுண்போன் நீயுள்ளவரையில்
விடுதலை கிடையாது
வினையுன தாயின் கவலைகள் பயனுய்
மிகுமன்றி விலகாது
முனைப்பினை ரமணன் அடிக்குண வாக்கு
மோனமே கலையாது
முக்தி யிதன்பின் கவலைகள் ஏதும்
மூளவே முடியாது.

# 42. எத்தனையோ கற்றனையே!

இராகம் ஃ இந்துஸ்தான் பியாக் தாளம் ஃ திசிர ஏகம்

எத்தனையோ கற்றனையே, இதனைக் கேட்டாயா?
இனிமே லேனும் அமைதியாக இருக்க மாட்டாயா?

1. நம் புத்திக்கெட் டாததெல்லாம் - நன்றாய்ப்
புரிந்து நடத்துகின்ற - ஒரு
சக்திக்கு விட்டுவிட்டால் - உள்ளத்திற்
சாந்தி நிலைத்து விடும்.

2. நெஞ்சைப்புண் ணுக்கிக் கொண்டே-நீ
நினைத்து நினைத்துச் செய்யும்-செயல்
கொஞ்சமும் தேவையில்லை - குருவருள்
கொண்டு நடத்துவ தால். (எத்)

3. மூட்டையை வண்டியில்வை - தலைமேல்
முக்கிச் சுமக்காதே - மனச்
சேட்டையா லாவதில்லை - திருவருட்
சித்தம் நடத்தி வைக்கும்.

4. தேகமும் சித்தமுமே - உனதல்ல
தெய்வத்தின் கைக்கருவி - ஏனோ
ஏகன வன்செயலிற் - கர்த்ருத்வம்
எய்தித்திண் டாடுகின்றாய்? (எத்)

5. தேகத்தை 'நான்'எனவே - கொள்ளாமை
செத்துப் பிறவாமை - இவ்வாறு
சாகத் தெரிந்து கொண்டோன் - உண்மையில்
தன்னைத் தெரிந்துகொண்டோன்.

6. செய்பவ னுயெழுந்தால் - சுகதுக்கத்
தேட்ட முனைச்சேரும் - பின்னர்
✱எய்பவ னைவிடுத்தே - அம்பையே
ஏசி வெறுத்துநிற்பாய். (எத்)

7. உள்ள ஒருவனன்றி - நீநான்
உண்மையி லொன்றுமில்லை - சற்றுங்
கள்ளமில் லாதகத்தை - அவனருட்
கையி லளித்திருப்பாய்.

8. ஈசன ருட்செயலைக் - குறுக்கிட்
டிந்த மனம்தடுக்கும் - இது
நாச மடைந்துவிட்டால் - திருவருள்
ஞானனு பூதிதரும். (எத்)

9. தன்னை மறுத்தடங்கு - உடல்மனம்
தானென் றெழாமலிரு - அதன்
பின்னை யிருப்பதெதோ - அதுவே
ப்ரம்ம மெனப்படுமாம்.

10. ஞான குருரமணன் - அருளால்
நடப்பதெல் லாம்நடக்க - உடலக
ஈன வெழுச்சியெழா - விழிப்போ
டிருப்பதே நங்கடனும். (எத்)

---

✱ எய்பவன் - கர்மம் புரியும் அகங்காரியாகிய ஜீவன், அம்பு-பலனை அனுக்கிரகிக்கும் ஈசுவரன்.

# 43. மனத்தேற்றம்

(நொண்டிச் சிந்து)

தாளம் : ஆதி

1. கட்டுக் குலையாதிந்தக் காய மிருக்குமோபிற்
காலமே-என்ன-கோலமே - உடல் - மாளுமே - உயிர்
விட்டுப் பிரியுமுன்னே மீண்டும் பிறவாவழி
காணுமே - அருள் வேணுமே

2. எந்தக் குகையினுள்ளே சென்றால் பிடிக்க எமன்
ஏங்குவான் - பின் - வாங்குவான் - விட்டு - நீங்குவான்
அந்தக் குகையிதயம் வந்து பிறவாவகை (-தெய்வம்
ஆற்றுமே - சாவை - மாற்றுமே

3. வண்டி வாகனம்பணம் உண்டி உடை நகைகள்
யாவுமே - விட்டுச் - சாவமே - வீணாய்ப்-போகுமே-தெய்வம்
அண்டிக் கிடப்பவருக் கந்தக் கவலையொன்று
மில்லையே - பய - மில்லையே

4. கண்ணா யுயிராய்ச் சேர்த்த காசு பணம் நம்மைக்
காக்குமோ - வந்து - பார்க்குமோ - பின்னர் - ஏய்க்குமோ
அண்ணா மலைரமணா அண்ணா அப்பாவென்றால் (- திரு
வாய்க்குமே - முத்தி - யாக்குமே

5. முட்டு முட்டாகப் படித்துக் குவித்த நூல்
மூட்டையே - துயர் பாட்டையே - மனச்சேட்டையே - கற்ற
தட்டுக் கெட்ட படிப்பும் சாகும் போதே நம்மைத்
தாங்குமோ ? - வீணாய்த் - தூங்குமோ?

6. பட்டம் பதவிக்கல்வி நட்ட மாகுமுனக்குப்
பந்தமே - இல்லை - சொந்தமே - புத்தி மந்தமே-நம்மை
விட்டுப் பிரியாச் சுகம் ஈயும் இதயக் கல்வி
வேணுமே - பக்தி பூணுமே.

7. தேகத்தை நாமாய்த் திரித்து நினைத்திடுஞ்
சிந்தையே - மாய - விந்தையே - இதற் - கெந்தையே
வேகத் தளித்தவி சாரத்தை மேற்கொள்ள (- ஆத்ம
வேண்டுமே - துன்பம் தாண்டுமே.

8. அண்மையி லேநமக் கானவர் நண்பர்கள்
யாருமே - இல்லை-ஊருமே-நன்ருய்ப்-பாருமே - குரு
உண்மையி லேநமக் குற்ற உயிர்த்துணை
ஒன்றுதான் - அவர் ஒன்றுதான்.

9. மேற்கொண்ட சுற்றம் மனைவி புதல்வர்கள்
வேறுதான் - என்றும் வேறுதான் - புத்தி மாறுதாம்
ஆட்கொண்ட தெய்வம் ரமணஞென் றேதுணை (- நம்மை
யாகுதாம்-பயம் போகுதாம்.

10. சொப்பன வாழ்வுச் சுகந்துயர் பூமியில்
தோற்றமே - வெறும் - மாற்றமே - ஏ - மாற்றமே -ரம
ணப்ப னருட்பெயர் செப்பிட வேயருட்
தோற்றமே நீக்கும் கூற்றமே.

## 44. உடல் நானென்று எண்ணவோ?

(''என்னை யாரென்று எண்ணி ...........'' என்ற - மெட்டு)

1. உடல் - நானென்றும் எனதென்றும் இனி எண்ணவோ? இங்கு
    நல்ல தென்றும் தீதென்றும் வினை பண்ணவோ?
நாம்-ஏன்எண்ண வடிவாவோம்? இழிவல்லவோ?
    இறவாத பிறவாத இயல்பல்லவோ? .... (உடல்)

2. கனவன்றி நனவெந்த விதமுண்மையோ?
    காமாதி துயரன்றி என்ன நன்மையோ?
நாம்-மனமன்றி அதைக்காணும் அறிவல்லவோ?
    மறையாத குறையாத மகிழ்வல்லவோ? .... (உடல்)

3. நரவேட முடன் பூவில் நடமாடினன்
    ரமணேசத் திருநாம மலர்சூடினன்
அவன் - பரமோன உபதேசம் பலமல்லவோ?
    பனிபோன்ற அகங்காரம் அதைவெல்லவோ?
..... (உடல்)

4. தவமன்றி புவிவாழ்வு சுகமாகுமா?
    தனைநாடல் தனின்வேறு தவமாகுமா?
அவனன்றி அணுவேனும் அயலாகுமா?
    அருளன்றி உலகாதி பொருளாகுமா? .... (உடல்)

5. மறையாத உபதேச உரையோதினன்
    மனமாயம் அறும்ஞானக் குழலூதினன்
அறிவான ரமணேசன் அகம் அல்லவோ?
    அறியாமை அறியாத சிவனல்லவோ ? ...... (உடல்)

---

# 45. அகத்தினி லிவ்வா றடிக்கடி யெண்ணுக

(''மனஸி விசிந்தய வாரம் வாரம்'' என்ற-மெட்டு)

1. எங்கும் பரவிய வெனக்குப் - புலை
யெண்சாண் சிறைக்கூட மெதற்கு?
கங்குல் பகலில்லா வெனக்கு - திரி
கால பலன்களு மெதற்கு?

2. சற்றும் மறப்பிலா வெனக்கு - ஜட
சாத்திரக் குப்பைக ளெதற்கு ?
முற்றும் ஒருவனு மெனக்கு - வரும்
முக்தி பந்தசிந்தை யெதற்கு?

3. உண்மையில் இல்லாத வனுக்கு - பந்த
முக்திகள் கூறும்நூற் பெருக்கு !
உண்மையில் வேறிலா வெனக்குச் - சதுர்
யோகங்க ளின்றைய வெதற்கு?

4. இன்பதுன் பமில்லா வெனக்கு - த்வந்த
வெவ்வுல கின்பமு மெதற்கு?
சம்பத்துந் தாழ்வுமே தெதற்கு - சிவ
சச்சிதா னந்தமா மெனக்கு;

5. தூக்கத்தி லில்லாத வனுக்கே - ஜாக்ர
சொப்பன சுகதுக்கக் கிறுக்கு !
தாக்கற்ற சின்மய மெனக்கே - அவஸ்
தாத்திர யப்பித்த மெதற்கு?

6. நானுட லென்பவன் றனக்கு - யோகம்
நால்வகை செய்வதற் கிருக்கு !
தானன்றி வேறில்லா வெனக்கு - யோக
சாதனத் தின்றைய வெதற்கு ?

7. உள்ளவன் ரமண னவனே - நான்
ஒன்றிலை யென்றென்று மவனே
தள்ளவும் கொள்ளவு மெவனே - யுண்டு
சச்சிதா னந்தமெய்ச் சிவனே.

## 46. ஆன்மீகர்களின் வீரநடைப் பாட்டு

1. ஏழை யல்ல, கோழை யல்ல
வின்ன லுன்ன தல்லநீ
யீன னல்ல, தீன னல்ல
நீயி ழிந்த தில்லைநீ
வாழ வன்மை யற்ற கேவ
லத்த னல்ல வென்றுமே
மாண்டு போகுந் தேக மல்ல
மாறி வீண் மயக்கிலே
வீழும் பொய்ம்ம னம்மல் லாய்
மிலேச்ச னல்ல; பாபவெம்
வினைக்கு ளூற்று வீர மற்று
விம்மி விம்மி வெங்குழி
யாழு மற்ப ஜீவ னல்ல
வல்ல நீய தற்குமே
லந்த மற்ற தொந்த மற்ற
வாத்ம தேவ னும்;அறி.

2. காணு(ம்)நீக டந்த ஞானக்
கண்ண னேக லக்கமோர்
காலு மில்லை, காண நின்னைக்
காட்டி லும்மற் றொன்றில்லை,
வேணு மென்று நீவி ரும்ப
வொன்று மில்லை வேறதாய்
வெறுப்பு மில்லை, யெங்கு(ம்) நீவி
ளங்கு கின்ற வேந்தனும்.
தாணு நீச னுதை னன்ஜ
னிப்பி லானி றப்பிலான்,
சராச ரம்மெல் லாம டங்குஞ்
சத்து நீஜ டத்துடல்
ஆணு மல்ல பெண்ணு மல்ல
வாண்பெ ணுக்கை யாவுளும்
அகண்ட ஞான ஜோதி யான
வாத்ம தேவ னும்;அறி.

3. நீசு கம்சு கங்கள் யாவுந்
தோன்று முன்று ளித்துணே !
நீப ரம்ப ரந்த வண்ட
முன்னு ளேப னித்துளி !
நீப லம்ப லத்த பஞ்ச
பூத முன்ப தத்துளே !
நீயொ ளியொ ளிக்க
திர்நி லாநெ ருப்பு யாவுளு(ம்)
நீயு ளாயுன் ஞலம் மூன்று(ம்)
நின்ரு ளிர்ப்ப வாதலா
னீநி னேப்ப தற்கு மெட்டி
லானி னேப்ப ழிந்தபின்
னீம னுஷ்ய னல்ல நீய
வன்ன வன்னீ யாத்மனு(ம்)
நித்ய சுத்த னித்ய
முத்த னீயறிந்து நிற்கவே.

# 47. தன்னை அறிவது ஞானம்

(''உள்ளம் என்பது ஆமை .........'' என்ற மெட்டு)

தன்னை அறிவது ஞானம் - வேறுய்
சகலமும் அறிவது ஈனம் !
முன்னிலை காண்பது மாயம் - அக
மூல மறிவதே ஞாயம். (தன்னை)

1. உன்னை நீ யறியாது - அறி
வுற்ற தெல்லாம் மனச்சூது
என்னது நானறும் போது - துயர்
எய்திடக் காரணம் ஏது? . (தன்னை)

2. நீயா ரென்றறி வாயோ - ஓடி
நினைத்திடும் உடல்மனம் நீயோ-இதை
ஆயா திருப்பதே மடமை - தன்
ஆன்மாவை அறிவதே கடமை (தன்னை)

3. உடலே நீஎன்ப தாலே - பிறப்
போடிறப் பேவந்த தாலே
விடவே இதையினி மேலே - அக
வீடடைவாய் அத னாலே (தன்னை)

4. உலகம் ஐம்புல வுணர்வே - அது
உண்மையில் லாத கனவே
பலவாம் காட்சிகள் பொய்யே - அதைப்
பார்த்திடும் சாக்ஷிநீ மெய்யே (தன்னை)

5. பொருளால் வருவது போகம் - அதைப்
புறக்கணித் தால்சிவ யோகம்-திரு
அருளால் வருவதே இன்பம் - மற்ற
தத்தனையும் வெறும் துன்பம் (தன்னை)

# 48. தியானப் பாட்டு

1. கண்ணை மூடி யமர்ந்துகொள்
கடவு ளென்று நினைந்துகொள்;
எண்ணி டாம லெதையுமே
யிறைவ னென்றே நினைந்துகொள்.

2. காணு முலகை நினைப்பதாற்
கடவு ணினைவு போய்விடும். ;
வேணு முறுதி முதலிலே
விரும்பித் தியானம் பண்ணுவாய்

3. எந்த வடிவிற் கருதினும்
அந்த வடிவிற் றோன்றுவார்.
சொந்த வடிவம் பெயரிலார்;
சுத்த மோன சின்மயம்.

4. இன்ப மான வொருபொரு
ளிருக்கு துன்ற னெஞ்சிலே.
அன்பு கொண்டு தேடினு
லளவில் லாத சுகமடீ.

5. எங்கு முள்ள கடவுளை
யிதய குகையிற் காணலாம்.
இங்கு கண்ட பிறகுதா
னிருப்ப தெல்லா மவன்மயம்.

6. எண்ண மறியும் சாக்ஷியா
யிறைவ னுன்னு ளிருக்கிறார். ;
எண்ண மோய்ந்த விடத்திலே
யிறைவன் வந்து தோன்றுவார்.

7. எண்ண மோய வழியைக்கேள் ;
இறைவன் **ரமணன் மொழி**யைக் கேள். ;
எண்ண மெழும்பும் தருணமே
யாருக் கெழுவ தென்றுபார்.

8. எண்ணந் தனக்கே யெழுவதா
லிந்த **"நானு"** ரென்றுபார்;
எண்ணுந் தன்னை நோக்கவே
யெழுந்த வெண்ண மோய்ந்துபோம்.

9. பார்க்கப் பார்க்க வுன்னுளே
பரம ஞானம் பூக்குமே
பார்க்கு மறிவைப் பார்க்கவே
பழகிப் பழகி வெற்றிக்கொள்.

10. கற்குங் கல்வி பலவிலுங்
கடவுட் கல்வி முதலிடம்.
நற்சி றப்பு யாவிலும்
ஞான நிஷ்டை முதலிடம்

11. உட லெடுத்த நோக்கமே
யுண்மை யின்பந் துய்க்கவே.
கடவு ளாகி நின்றுடல்
கழற்றி வீசிப் போகலாம்.

12. **தெய்வ** மென்ப **தருண்மயம்**
ஜெகமெல் லாமு மிருண்மயம்.
மெய்யெ தென்று நாடவே,
விளங்கு மிந்த வுண்மையே.

13. வாழ்க **ரமண சற்குரு!**
வாழ்க **ஞான மார்க்கமே!**
வாழ்க வான்ம சாந்தியில்,
வாழும் வாழ்வு வாழ்கவே !

# 49. ஆன்ம விசாரப் பதிகம்

1. நினைப்பது விருத்தி யாகும் ;
 இருப்பது விருத்தி யல்ல !
நினைப்பது யாரென் றுய
 நினைப்பது நின்று போகும் ;
நினைப்பிலாப் போது(ம்) நீதா
 னிருப்பதி லைய முண்டோ !
நினைப்பெழு மூல மீதி
 னிலைப்பதே நிலையா(ம்)! நில்லே

2. நினைப்பவன் ஜீவ னாகும்;
 இருப்பவ னிறைவ னாகும்!
நினைப்பவன் விரும்பிச் சும்மா
 விருப்பதை நினைப்பா னாகில்
நினைப்பிது நினைப்பைக் கொல்லும்
 நிவிருத்தி நினைப்பாய் மாறி
நினைப்பவன் நினைப்போ டோய
 நிற்பதே சிவசா யுஜ்யம்.

3. நானென்று நினைப்போ னந்த
 நினைப்பினுள் ளொரு நினைப்பே;
நானென்று நினைப்ப தேதோ
 னினைப்பினுள் ளாதி யாகும்;
நானென்று நினைக்குஞ் ஜீவ
 னம்முடைப் பிரதி பிம்பம்;
நானென்று நினைப்ப தில்லை
 நாமதாய் விளங்குங் காலே.

4. நானெனு மொரு நினைப்பு
நல்லதூக் கத்தி லில்லை;
நானெனு மொரு நினைப்பு
ஞானமெய்ந் நிலையி லில்லை;
நானிதென் றிடையிற் றோன்றி
நழுவிடுங் கார ணத்தா
ஞனிது சத்ய மல்ல ;
நானென்ப தொரு நினைப்பே.

5. இந்தநான் விருத்தி யாத
லின்னலின் விருத்தி யேதான்!
இந்தநா னகங்கா ரப்பே
ரேற்றதாம்; அவிசா ரத்தா
லிந்தநான் வந்து வாழும் !
இதனையா சரித்தி டாம
லிந்தநான் யாரென் றுய்ந்தா
லிருப்பின்றி மறைந்து போகும்.

6. முன்னிலை படர்க்கை வாழ்தன்
மூலமாந் தன்மை யாலே,
தன்மையை நோக்கி யந்தச்
சலமனந் திரும்பு மாகி
லின்மையாய்த் தன்மை நீங்க
விருப்பது விளங்க, வீயாத்
தன்மையா யோங்கு முண்மைத்
தானது ஞான மாமே.

7. முன்னிலை படர்க்கை பற்றி
முன்னுதன் மூட மாகும்;
முன்னிலை படர்க்கை நாடின்
மூண்டெழு(ம்) மனோ விருத்தி;
தன்மையை நாடுஞ் செய்கை
தற்கொலை சமான மாகும்;
தன்மையாய்(வு) ஒன்றி ஞற்றான்
சாய்ந்திடு மகந்தை தானே.

8. நானென்ற விதைத் திரும்பி
நாடாமன் முன்ப டர்க்கை
யாநின்ற வதனை நாடு(ம்)
நாட்டமஞ் ஞான நாட்டம்;
''நானென்ற வகந்தை நாட்ட
மஞ்ஞான நாட்ட மன்றோ?
நானென்றே ஞட வேண்டும்?
என்றிடி னவிலக் கேளாய்.

9. நானெதென் ருயவஃது
நலிவதற் கே(து)ஏ தென்றால்,
நானெனு மக விருத்தி
ஞானத்தின் கிரண மாகும்.
நானெனுங் கிரணத் தோடே
நாட்டமுட் செல்லச் செல்ல
நானெனுங் கிரண நீள(ம்)
நசித்துநான் ஞான மாமே.

10. ''என்னாலே நடக்க வேண்டும்''
என்றெண்ணி யெதுவுஞ் செய்யேல் ;
நின்னாலொன் றுவ தில்லை!
நீயொரு பொருளு மில்லை!
முன்னாலே யிதனை யோர்ந்து
முனைப்பெலாந் தவிர்வா யாகிற்
தன்னாலே யாவும் ஆகும்!
சாந்தியுங் குறைவு றாதே!

11. சத்தியம் யாதென் றுய்ந்தாற்
சகத்தினி லியாது மில்லை;
சத்தியந் தானே யாக,
சருவமு(ம்) நீத்து, மிஞ்சுஞ்
சத்ததாய் நிலைத்தென் றென்றுஞ்
சலியாது நிற்போ(ம்) நம்பா
னித்திய **ரமண தேவ**
னிகழ்த்திய **பணியீ தொன்றே.**

# 50. மதங்கடந்த ஸ்ரீ ரமணர்

1. இப்படி, யப்படி யென்றவனை* - மக்க
ளெண்ணிய வாறெலாம் பேசிடுவார்
எப்படி யென்றவன் தன்னியல்பை - ஓ
ரெட்டுணை யேனு மிவரறியார்!

2. வைஷ்ணவஞ் சைவம் பௌத்தமிஸ்லாம் - இன்னும்
மாவீர ஜைனம், கிறிஸ்துமதம்
தெய்வமி ஃதென்று குறித்திடினும் - பலர்
தீய மதவெறி சிக்கிவிட்டார்

3. நீற்றுப் பூச்சினை நீசமென்றே - பட்டை
நெற்றி நாமமோர் குற்றஞ் சொலும்;
''தோற்றது வைஷ்ணவம் கீ''ழெனவே - ஒரு
சுத்த சிவப்பழம் சொல்லிவிடும்.

4. ''வேதங் கெட்டவர் இந்து'' வென்றே - கிறிஸ்து
வேதப் பித்தமோர் வீறுசொலும்;
பேதங் கொண்டார் கிறிஸ்துவத்தே - உள்ள
பெற்றிகா ணுமற் பிழைகுறிப்பார்!

5. ''என்னதே மே''லென பௌத்த மதம் - சற்
றேளனஞ் செய்யும் பிறமதத்தை;
''உன்னத மிஸ்லாம்; இதைப்பிடிப்பாய்'' - என்
றுத்தர வாதமு மொன்றுரைக்கும் !

6. ''இத்தனை பன்மதங் கண்டுவிட்டோம்; - இவை
யாவும் பொய்'' யென்றென்று கொக்கரிக்கும் ;
சத்திய மற்றபா ழற்பசுகந் - தனைச்
சத்திய மென்றது* சாதித்திடும்.

---

* அது - நாத்திகம் * அவனை - கடவுளை

7. ''எம்மதந் தன்னிலு மோர்பொருள்தான் - எனில்
என்மத மேயதன் மெய்வழி; மற் (று)
எம்மத மும்பய னில்லை''யென்றே - யெல்லா
மிப்படி யேபேசித் தர்க்கமிடும்!

8. யாரை நம்புவ துண்மையெது ? மதம்
யாவிலும் நல்லது யாதெனவே
நேரே யோர்வழி நாடிடுவோர்க் - குள்ள
நிஜத்தைச் சொல்வது நேர்மையன்றோ

9. ''அம்மத மிம்மத மென்றுபல - வித
மாய்ந்திடு(ம்) நீயுனை யாரெனவே
செம்மையா யாய்ந்து தெளிந்துவிடு - பின்
தெய்வம், சமயம் தெரிந்துவிடும்!''

10. ''உள்ளது நீயன்றி யொன்றுமில்லை - மற்ற
வுபாதி யெலாமற, வுன்னிடமே
யுள்ளது நீ; அது நீ; யதனால் - இதை
யுள்ளத்தில் உள்ளவா றுன்னிடுவாய்.

11. பன்மதங் காட்டுங் கடவுளரை - யெல்லாம்
பார்த்திட நீயொன்று வேண்டுமன்றோ?
சொல்லது யாரென? மற்றதுவே - தான்
சுத்தமெய்த் தெய்வம்; சுயமுணர்வாய்''

12. ''பார்ப்பவன் யார் ? அந்தப் பார்ப்பவனே - தன்னுற்
பார்க்கப் படுபொருள் தன்னிலுமேல்;
தீர்ப்பிது! தேர்விது!'' வென்றருளி - நம்மைத்
தேற்றுகி றார்குரு ஸ்ரீரமணர்.

13. ''உன்னுள் ளிருப்பது தெய்வமினி - நீ
யோடிடத் தேடிட வொன்றுமில்லை!!
தன்னுளே யாழ்ந்து நீ தானுமதைத் - தன்னிற்
ருனு யடை''கெனச் சாற்றுகின்ருர் !

14. மதவெறி, சாதி, வகுப்புவெறி - யின்னும்
மண்வெறி, பொன்வெறி விட்டுவிட்டே
முதலெது? சுகமெது? மோனமதைப்பற்றி
முக்தி சுகம்பெற முந்திடுவோம்.

15. எப்பொரு ளுடுமிவ் வுலகமெல்லா - மந்த
**மெய்ப்பொருள்** மானிட வேடத்திலே
இப்படி யின்னதென் றவ்வணமே - வந்
திருந்தருள் காட்டிற் றதே **ரமணம்.**

16. நம்முள் ளிருப்பது ரமணபதம் - என்றும்
நம்முள் ளினிப்பது ரமண சுவை;
நம்முடி வென்றும் ரமணியமே - யுள்ள
நம்மதெ ல்லாம்ரம ணூர்ப்பணமே !

---

# 51.அறிவுத் துறை

1. கல்விக் கடலைக் கடைந்தெடுத்தாய்,
கவலை போச்சோ ? வுண்மையைச் சொல்.
செல்வஞ் சேர்த்துத் திரட்டிவிட்டாய்,
திருப்தி யாச்சோ? வுண்மையைச் சொல்.

2. நெஞ்சுக் குள்ளே நிறைந்திருக்கும்
நிறைபொரு ளோடு கவியூற்று
கொஞ்சந் தியானங் கூடி நின்ருல்
குமுறிப் பாயுந் தமிழ்க்கவியே.

3. காலைப் போதில் சுறுசுறுப்பாய்க்
கண்ணை மூடி யமர்ந்திருந்தால்
நூலிற் காணு நூதனங்கள்
நுட்ப மதியி லொளி வீசும்

4. கண்டுங் கேட்டு மவ்விடத்தே
களித்துக் கனிந்த கருத்தெல்லாம்
விண்டு விளக்க லரிதெனினும்
விரும்பிற் கொஞ்சம் வெளியிடலாம்.

5. அன்றன் றருணு சலரமணன்
அகத்தில் விளக்கு மறிவொளியி
லொன்றென் ருங்கே யுளறிடலாம்
ஒழியா தெல்லா முணர்த்துதற்கே

6. கணத்தி லிறைவன் காட்டுகின்ற
கருத்துத் திரளாங் கடனீரை
யெணத்தாற் சொல்லா லெழுத்தாலே
யெத்தனை யுகமோ விறைத்திடலாம்.

7. உலகி லுலவு(ம்) நூலெல்லா
முள்ளத் தறிவி ஞெரு திவலை,
அலகில் லருணு சலரமண
னறிவுக் கடலுக் களவேது ?

8. புத்தக மெல்லா(ம்) மூடிவிடு,
புலன்களை யெல்லா(ம்) மூடிவிடு ;
எத்தனை யெண்ண மிவையெழுப்பும் ?
எங்கே சாந்தி யிவையளிக்கும் ?

9. அமைதிக் கடலி னுழத்திலே,
யகந்தை யொழிந்த காலத்திலே,
இமையைத் திறக்குஞ் சிறுபொழுதி
லெல்லா மறித லெளிதாகும்.

10. பண்ணுந் தவங்கள் கோடியிலும்
பயனிற் சிறந்த தவத்தினைக் கேள்.
எண்ணம் விழிப்பி லொழிந்துவிட்டா
லின்பக் கடலா யிருந்திடுவாய்.

11. எண்ண மறிவின் கறையாகும் ;
இயல்பை மறைக்குந் திரையாகும் ;
திண்ண மூன்றித் திரை நீங்கிற்
றிகழும் பொருளே சிவமாகும்.

12. உன்னை விடவுன் மேற்கவலை
யுள்ள பெருமான் ரமணனன்றோ
முன்ன ரிதனை யுணர்ந்து விட்டால்
முடிந்த தெல்லாச் சாதனையும்

13. கனவி லிருந்து விழித்துக் கொண்டால்
கனவுத் துயராற் கவலையில்லை
நனவி லிருந்து விழித்துவிட்டால்
ஞானம் அது ! வே றேதுமில்லை.

14. இருப்ப திறைவ னிதுவரையி
லிருந்த நீயு மெவ்விதத்தும்
விருப்ப மவனுக் கீந்துவிட்டால்
வினையு மோயும் வீடுபெறும்.

15. எல்லா மழிந்த பிரளயத்தி
லிருப்பாய் மிஞ்சு மியல்பெதுவோ
எல்லாம் வல்ல வது நீயே !
இதுவே ஞானம் ! இது நீயே !

# 52. கொஞ்சம் பொறு

இராகம் : கர்நாடக தேவகாந்தாரி　　　　　　　　　　தாளம் : ஆதி

1. கேட்டாய், கிடைக்குந் தருணமிதே! - உன்
கேள்வன் அணுகுந் தருணமிதே - நீ
மாட்டே னென்று மறுக்காதே - உன்
மணாள னருளை வெறுக்காதே.

2. முன்பின் னறியா யதனாலே - உயிர்
முடிந்தாற் போல்துயர் மூள்கின்றாய் -அருள்
அன்பின் முடிவில் அனுபவிக்கும் - பே
ரானந் தம்பெறப் போகின்றாய்.

3. உயிரே யழியும் பேரச்சம் - இன்
றுணர்கின் றாய்நீ யென்றாலும் - உள்
ளயரேல், சற்றே சகித்திருப்பாய் - எனில்
அதன்பின் விளைவைக் காண்பாயே.

4. மான மழிந்து மதியிழந்து - தன்
வாயு மிழந்து வலியிழந்து - மிகத்
தீன மடைந்து செயலழிந்து - நீ
செத்தோன் போலத் தெரிகின்றாய்!

5. தேடி யடைந்த சிறப்பிழந்தாய் - உன்
ஜீவ முயற்சித் திறமிழந்தாய் - முன்
பாடிப் படித்த பவிசிழந்தாய் - நற்
பதத்திற் குதவும் பரிசிழந்தாய்.

6. நன்மை தீமை யறிந்திதுநாள் - நீ
நடந்த ஞான நலமிழந்தாய் - வரும்
இன்மை பலவுந் திரண்டாற் போன் - றிங்
கிருக்கு மிடத்தை யின்றடைந்தாய்.

7. சகிக்க வொண்ணுப் பெருநஷ்டந் - தனைச்
சார்ந்தாற் போலத் தவிக்கின்ருய் - ஓர்
தகிக்கு மெரியில் தள்ளுண்டே - மிகத்
தவிப்போ ஞய்நீ தளர்கின்ருய்.

8. இன்ரே டழிந்தோம்! இனிமிச்சம் - பட
வில்லை யெதுவும்! அடியோடே - நமைக்
**கொன்றே விட்டான் குருரமணன்** - எனக்
குறுகி யோய்ந்து குனிகின்ருய் !

9. முறையீ டெல்லாம் முழுவுண்மை! - உன்
மொழியி லடங்காப் பெருநஷ்டம் - தனை
யறுவோ ஞய்நீ யுணர்கின்ருய் - இஃ
துண்மை யெனினும் ஒன்றினிகேள்;

10. காலப் போக்கில் நீயழிந்த - இக்
கடைசி நிலையிற் ருனுன்றன் - ஓர்
சாலப் பெரிய நிஜமகிமை - அது
தானே யொளிர்வ தறிவாயே. (கேட்)

# 53. ரமண அடிமை (தாஸ) லக்ஷணம்

இராகம் ః இந்துஸ்தான் பியாக் தாளம் ః ஆதி

அருட்கண் ணுளன் ரமண குருவுக் கடிமை யென்றுலே
அதற்குண் டான அடை யாளம் அமைவ தைக்கேளே (அ)

1. கலப்பில் லாத வுள்ளி ருப்பிற் கலந்து கொண்டாயா?
கனவு நனவு துயிலில் லாமை கண்டு கொண்டாயா?
புலப்ப டாத விழிப்பு வாழ்விற் புலரக் கண்டாயா? - அகஸ்
புரண ரமண சிவனை மணமும் புரிந்து கொண்டாயா? (அ)

2. கணக்கில் லாமுன் னிலைப டர்க்கை கரைந்து போனதா?
கவனம் தன்னி லூன்றி திடமா யுறைந்து போனதா?
மணக்க வேர மணப்பி ரானை வரிப்பும் ஆனதா?
மலைப்பில் லாத முயற்சி யியல்பு வடிவ மானதா? (அ)

3. முனைப்பில் லாத நினைப்பில் லாத விழிப்பு வந்ததா?
முளைக்கில் லாமல் வறுத்து வாச னைகள் கரிந்ததா?
தனிப் படாத வினைத் தொடாத சகஜம் வந்ததா?
தவிர்க்கொண் ணுத சுகத்தி லாழ்ந்து தனைத்தெ ரிந்ததா?
(அ)

4. மறக்கொண் ணுத விலக்கொண் ணுத வாய்மை யிலங்கிற்ரு?
வழுக்கில் லாமல் அழுக்கில் லாமல் வாழ்வு துலங்கிற்ரு?
புறக்கண் ணுகும் முனைப்ப கந்தை பொடிந்து கலங்கிற்ரு?
புகைக்கொள் ளாது ஜொலிக்கும் ஞான போதம்
விளங்கிற்ரு? (அ)

5. பிறப்பில் லாமல் இறக்கும் வழியைப் பிடித்துக் கொண்டாயா?
பிணிப்பு ருத அகத்த னுன்னைப் பிரித்துக் கண்டாயா?
மறப்பில் லாத இருப்பி னின்பம் வடித்துக் கொண்டாயா?
மனித்த தேக மெடுத்த வேலை முடித்துக் கொண்டாயா? (அ)

# 54. உன்னருளால் ஆகட்டும்

இராகம் ஃ மோகனம் தாளம் ஃ திசிர ஏகம்

1. அகந்தையின் குறுக்கீடே யழியட்டும் - உன்றன்
அருளிச்சைச் செங்கோலே யாளட்டும்
ஜெகங்கன வாகவே தீரட்டும் - எல்லாம்
சிற்சுக சிவமய மாகட்டும்; (அகந்)

2. உன்னுமெண் ணமெல்லாம் ஓயட்டும் -மனம்
உன்னரு ளின்வச மாகட்டும்
என்னது நானெனல் மாயட்டும் - பே
ரின்பர சத்தினில் தோயட்டும்; (அகந்)

3. நானினி யில்லாமற் போகட்டும் - சிவ
**ஞான ரமணனே வாழட்டும்**
ஊனினை நானென்ப தொழியட்டும் - பர
வுண்மையெஃ துண்டோவஃ தோங்கட்டும்; (அகந்)

4. அன்னிய நாட்டமஃ தகலட்டும் - காணும்
அனைத்துமுன் னருள்வடி வாகட்டும்
தன்னியல் நீங்காத டங்கட்டும் - **'நான்'**
சர்வசு தந்தர ஞகட்டும்; (அகந்)

5. ஜீவந திப்பிர வாகமும் - இனி
சின்மய வாழியிற் சேரட்டும்
போவதும் மீள்வது மின்றியே - பரி
பூரண மாகிப் பொலிகவே. (அகந்)

# 55. தேஹோஹம் கெட

(''ப்ருந்தா வனமும் நந்தகு மாரனும்'' ... என்ற மெட்டு)

1. தேஹோ ஹம்கெட நீயரு ளாயோ
தேசிக நாயக ஸ்ரீரமணா?
ஏகா னேக மெலாவித மாம்பர
மேஸ்வர நீயு மிரங்காயோ? (தே)

2. எத்தனை சக்தி யுளாரெனு முன்னருள்
இன்றி யகந்தை இறந்திடுமோ?
சத்திய மாம்பர பக்தி யெனக்குற
தந்தையுன் அன்புளம் வந்திடுமோ? (தே)

3. எப்பொழு தாயினும் உன்துணை யின்றி
இருந்திட லாகுமோ என்னாலே?
இப்பொழு தேயழி யும்மன நீயதை
'ஏ'கென ஓர்மொழி சொன்னாலே (தே)

4. கருணா சாகரா என்னை யழித்து
கரைத்திட வல்லவ னானையே
அருணா சலரம ணாய நமோஎன
தன்பே தாரக மானையே (தே)

5. என்னது நானென இத்தனை ஜென்மமாய்
எண்ணிய தின்னமும் போதாதா?
உன்னது நீயெனும் உண்மை யுணர்ந்துளம்
ஓய்ந்து சுகம்பெற லாகாதா? (தே)

6. எண்ண விதித்தனே, என்ன விளித்தனே
ஏத்த வினித்தனே எந்தாயே
கண்ணு மினித்தநின் காத லளித்தனே
காரண மென்ன நினேந்தாயே (தே)

7. கண்ணு லறிபடுங் காட்சி யலால்அருட்
காட்சி யகத்தினுள் காட்டாயோ?
அண்ணு மலேயரு ளான்ம சொரூபமுன்
ஆசை யளித்திட மாட்டாயோ? (தே)

8. இட்டவர் பாதி யிடாவிடில் இவ்வுல
கின்றுனே ஏளனம் பண்ணுதோ?
விட்டக லாமல் விரித்தநின் கைவலே
வேண்டி விரைந்தெனே உண்ணுதோ? (தே)

9. அன்னேயு மப்பனு மாங்குரு தெய்வமும்
ஆருயிர் நீயீ தறிந்தேனே
பின்னேயு மேனெரு பேயென ஓடி
பிதற்றிடு மிந்த மனந்தானே? (தே)

10. ஊரறியா திரவும் பகலும் மனம்
உத்தம மந்திரம் ஓதாதோ?
ஸ்ரீரம ணயநமோ வெனும் ஆன்மசஞ்
சீவியி தொன்றுதான் போதாதோ? (தே)

## 56. அருணசலா நமோ நாயக ரமண

("முரளிதரா - ஹரே - மோஹன கிருஷ்ண" என்ற மெட்டு)

அருண சலாநமோ நாயக ரமண - அதி
கருண நிதே - அருட் - காதல ரமண

1. ஒருநாளு முனையன்றி உயிர்வாழ் வனே?
உலகாசை விலகாத உளனு வனே?
உருவோடும் அருவோடும் உனைச்சேர் வனே?
ஓயாதென் னுள்ளன்பு நேயா வா ராயோ?
(அரு)

2. பிறவாத இறவாத நிலைவேணு மே
பிரியாத உறவுன்னைப் பெறவேணு மே
அறியாமை கெடநீமுன் வர வேணுமே
வாராயென் றல்என்றுந் தீரா தென்னசை
(அரு)

3. உடலோடென் னுறவென்றே ஒழிவாகுமோ?
ஒழியாத பேரின்பம் உணர்வாகுமோ?
திடமோடுன் அருள்ஒன்றிச் சிவமாவனே?
✱ உன்னலன் றேஞானம்? என்ன லென்னமோ?
(அரு)

4. அரிவேதற் கரிதான திருவாளனே
அருளானிங் குருவான குருநாதனே
அடியார்கட் கெளிதான ரமணேசனே
ஆகாத தோமாய மோகாதி தீராய் (அரு)

5. அலையான மனவேகம் அழிவாகவே
நிலையான கலையான்ம நிதிசேரவே
நிஜஞான முடியேறி நிலைகொள்ளவே
நீயேகதி - லோக - மாயாவதீதா (அரு)

---

✱ "தேஹோஹந் தீராயுன் தாஸோஹம் தாராய்" எனவும் பாடம்.

## 57. ஒன்றே ஞாபகம்

(''வந்தே மாதரம்'' என்ற மெட்டு)

ஒன்றே ஞாபகம் - நமக்கொன்றே ஞாபகம்
ரமணு ரமணு உயிர்க்குயிர் நாயகம்
உன்றன் நாமமே தாரகம். (ஒன்)

குன்றரு ணேசன் கிரிவல சேவனம்
குருரம ணேசன் றிருவடி ஜீவனம்
அவாங்மனம் அஹமவன் நிவேதனம்
அருணு சலமே ஞாபகம் - அஃ்
தொன்றே ஞாபகம்.

## 58. வாழி ரமணன்

இராகம் ஃ மோஹனம் தாளம் ஃ ஜம்பை

1. ஆதியரு ணுசலன பேதகுரு வாழ்க
ஆத்மவடி வானபர மாத்மனவன் வாழ்க
ஜோதியருட் ஜோதிசிவ ஜோதிகுரு வாழ்க
ஜோதிரம **ணேசகுரு** ஜோதிசிவன் வாழ்க. (ஆ)

2. பாமரரும் பார்த்திடவே பாரிலுரு பாதன்
நாம**ரம ணேச**னரு ணுசலகு மாரன்
மாமனம ழித்துவச மாக்குமஹா வீரன்
மாயைவலே மீட்டருள வந்தவதி காரன். (ஆ)

3. சகடமென இடமகலும் விடவுலக ஆர்த்தி
தனதடியிற் படுமடியர் விடவருளுங் கீர்த்தி
கபடமட அடமனதைத் திடமுடன முத்தி
தகிடதக நடனமிடும் **ரமணகுரு மூர்த்தி.** (ஆ)

4. சதம்தனது பதம்எனவே தவம்புரியும் தாபம்
மிதந்தனேயும் மிகுந்திடவே விரைந்தருளும் தீபம்
பதம்பரவி நிதம்பணிவோ ரிடம்முன்னுள பாபம்
அதம்படவே வதம்புரியும் விதம்**ரமண தீபம்.** (ஆ)

5. தீனஜன மானிடரும் க்ஷேமமுறக் காவாய்
மோனவழி யானவரு ளீயுங்குரு வாவாய்
தானகரு ணாகரனே ஞானமய தேவா
சற்குருப ரா**ரமண தேவ**ஜெய தேவா. (ஆ)

# III. சந்தப் பாக்கள்

## 1. மத்தகமுக குருரமணன்

தத்தன தனதன தத்தன தனதன
தத்தன தனதன - தனதான

இராகம் : நாட்டை தாளம் : ஆதி

சத்திய லொடுபர சித்துரு கனசுக
தத்துவம் வடிவுட - நனேமேவி
சத்திய நிலையறி வித்துல குழன்மனி
தர்க்குயர் சுகநிலை - தருவானு
யித்தரை மிசையரு ணப்பரு வதமுள
ரிப்பத முறைகுரு - பகவானே
எத்தனை மலமலி பித்தம னமும்வச
முற்றிட வருள்புரி - யிறையோனே
முத்தியர் பரவுஜ கத்குரு ரமணனே
முக்கர ணமொடடி - தொழுதேநம்
முற்பிற வியினசை முற்றிலு மழிவுற
முத்தியி னுயர்சுக - முணர்வாக
**மத்தக முக**னுரு வத்தொடு **குருரம**
**ண**ப்பனெ னையருள - வரவேணும்
''மற்றொரு வருமிறை யெற்கய லிலை''யெனு
மத்துவி த**ரமண - பகவானே.**

# 2. ஸ்ரீ ரமண கொலுவகுப்பு

1. தவமிகு சிவசம யகுரவ ரருண்மொழி
தரங்க மெனவோ தரங்க மொருபால்
தடையறு மருணகி ரிமுனிவ ரருளிய
சசந்த புகழே யிசைந்த தொருபால்
சிவசிவ முரஹரி யெனபக வணிவிளி
திரண்ட வொலியோ ரிரண்டு மொருபால்
திகழ்வட மொழிகவி திருவருண் மொழிதமிழ்
சிறந்த புலவோர் நிறைந்த தொருபால்
மவுனம திலுதியு **மருணம ணரமண**
**வலங்க** லொலியே துலங்க வொருபால்
வரகவி கணபதி முனிவட மொழியினில்
வழங்கு துதியே முழங்க வொருபால்
அவைநடு நிரைநிரை புரிவட மொடுமறை
யகண்ட வொலியோ துகண்ட ரொருபால்
அலைகட லெனவிசை யருளொலி யிவைகளி
லகங்கு ளிருவோர் முகங்க ளொருபால்

2. சுயநல மறவெகு விதபர நலபணி
தொடங்கு முறையோ ரடங்க வொருபால்
தொழுதுரு வினில்வழி படுபவர் மலர்வகை
சுமந்த கரமோ டமர்ந்த தொருபால்
வியனுறு பலநிற வளிதுதி ஸ்ருதியுடன்
விரிந்த மலர்வாய் திரிந்த தொருபால்
விதவித வுறவுட னுளமிக நினைபவர்
விரும்பி விழிநீ ரரும்ப வொருபால்
வயமுற நடுவினி லொருதனி மகளென
வணங்கு பசுவா * மணங்கு மொருபால்
வனம்ருக வினமயின் மனிதரி னுயர்வுள
வரங்கொ ளணிலுய் குரங்கு மொருபால்

* பசுவா மணங்கு - பசு லக்ஷ்மி

அயர்வற வழிபடு மமரர்க ளிவையென
வடர்ந்த விலைபூ படர்ந்த தொருபால
அனைவரு மிறைவனி னுருவென நினைவுறு
மருங்கு ணமுளார் நெருங்க வொருபால்

3. முளையினி லறிபடு விளைபயி ரெனவிள
முகங்கள் பயில்சா தகங்க ளொருபால்
முழுமுத லனுபவ மிளவய தினர்பெற
முதிர்ந்த நரையோர் விதிர்ந்த தொருபால்
தளையறு தவவினை யிளமையின் முயல்வுறு
தகுந்த மடவார் புகுந்த தொருபால்
தகுமனை யறமக ளிருமிவ ணுறமய
றணந்த வறிவே மணந்த தொருபால்
நெளிதரு முடையினர் பலவித நெறியினர்
நினைந்த தடைவான் முனைந்த தொருபால்
நெடுதொலை குணகுட திசைமொழி மதபல
நிறங்க ளுடையோர் பிறங்க வொருபால்
திளைவுறு மடியவர் திருவறை புகமிக
திரண்ட வதனு லிருண்ட தொருபால்
சிறுகுழ விகடிரு வடிதொட விரைவொடு
சிவந்த வடியே தவழ்ந்த தொருபால்

4. கருணைவ டிவதரி சனமுறு பவர்தலை
கசிந்த விழியோ டசைந்த தொருபால்
கனகவொ ளிநயன மெதிர்முக(ம்) நிமிர்கிலர்
கனிந்த வடியார் குனிந்த தொருபால்
வருணவ ருடமென வருண்மழை நனைபவர்
மலிந்து டலமே சிலிர்ந்த தொருபால்
மனமுடல் வளியசை வறவுயர் மவுனிகள்
வரைந்த வுருபோ னிரைந்த தொருபால்
பொருளுணர் வெழவக முருகிய வர்கள்விழி
பொழிந்த ருவியாய் வழிந்த தொருபால்
**புரணர மணவக வனுபவம்** விழைபவர்
புகுந்த வுடனே யுகந்த தொருபால்

திருவரு ளபிமுக மிழுபடு பவரிமை
திறந்த விழியே மறந்த தொருபால்
திரமுறு மகமனு பவசுக முணர்பவர்
தெளிந்த முகமே மிளிர்ந்த தொருபால்

5. பகலுறு மதியென மனமுமி தயவொளி
பதுங்கு மியல்போ ரொதுங்க வொருபால்
பணிவுட னகமழி வதுதவி ரவுமொரு
பலங்க ருதிலா ரிலங்க வொருபால்
**மகியணு முதலிய சுயநல வலி**வுற
**மறந்து(ம்) நினையார்** சிறந்த வொருபால்
வரன்வரி யவரிட வரிசைத னதடிய
வரும்பெ ருகவே நிரம்ப வொருபால்
அகமறு தவசிக ளிதுகுரு விடமென
வடங்கி யிருகான் முடங்க வொருபால்
அயனரி யரனிறை யொருவடி விதுவென
வறிந்த பெரியோர் செறிந்த தொருபால்
அகலவி தய(ம்) நினை வறுமுயர் வினருள
மழிந்த சலமா வமைந்த தொருபால்
**அருணகி ரிரமண மகரிஷி குருவுரு**
**வமைந்த பகவா னமர்ந்த கொலுவே.**

---

## 3. ஸ்ரீ ரமண அருள் நோக்க வகுப்பு

அநித்தவுல குதித்துமல மிகுத்தவுட லெடுத்தவுயி
ரனைத்துமத னெதிர்ப்பகைமை யறத்தன்வய - மாக்கும்

அலைத்தமன முறுத்தகுணம் வெறித்தனமு மிகுத்தசுர
மனித்தவுறு படைத்தவரு மழுக்ககல - நோக்கும்

அறத்ததெது மறத்ததெது வெனத்தெரியு மதிச்சிறிது
மிலர்க்குமுயர் வறத்திலொரு பிடிப்படைய - வூக்கும்

அசுத்தமன மிழுத்தவழி திரித்துழலு பசுத்தனம
னிதர்க்கவரை நடத்துபதி யெனக்கவலை - போக்கும்

தனித்தனையை யெமற்குரிமை கொடுத்தமுது தவிக்குமொரு
சிசுக்குநிக ருளத்தடியர் தமக்கபய - மூட்டும்
தணிக்கரிய மிகப்பெரிய தனப்பிரிவு மகப்பிரிவு
தனிற்றுயர மிகுத்துவரு பவர்க்கமைதி - கூட்டும்
தனத்தருற வினத்தர்மனை விபுத்திரரு நகைக்குமிடி
தனைக்களைய நினைத்துவரு பவர்க்குதவி -காட்டும்
தரித்தவுட லிடர்ப்பிணிக டவிர்ப்பதோடு மநித்யவுடல்
விதிக்கமைய விடுத்தமைதி யுறற்குநினை -வூட்டும்

இனித்தகுண நலத்துடனு மிறைக்குவெகு பிறப்புவழி
படப்பழகி யவர்க்கிறைவ டிவத்திலரு -ளூட்டும்
இசைப்புலவர் மொழிப்புலவர் கலைப்புலவ ரகத்தினவ
நவப்புலமை மிகுத்தொளிர வெழிற்பிரபை -யூட்டும்
இகத்திலொரு சுகத்திலெனு மினிப்புறுவ தறப்பழக
விருப்பமுறு பவர்க்கரிய விசித்ரவழி -காட்டும்
இறப்பிலெழு பயத்தையுத வியப்பொழுது மரிப்பதெது
விருப்பதெது வெனத்தெளிய மிகுத்தவொளி - கூட்டும்

செனித்தமன முனைப்பகல செபப்பணியி லிணைத்தொருமை
செயச்செபவ டிவிற்றிகழு மகப்பொருள - தாக்கும்
செனித்தமன முதிக்குமிட மொடுக்கவொரு திருப்பமுடை
யவர்ககமு ளிமுத்தசல வியற்கைவடி - வாக்குந்
திரட்டியுள வபக்குவமு மொருப்படிவ மெனத்தகுதி
திளைத்தவடி யனுக்குமொரு கடைக்கணுற - வாக்குந்
திறத்தருண மலைக்கெழுர **மணத்**திருவ தனத்திலிரு
ரவிக்குமுய ரொளிப்பரவு **திருக்கணரு** **-ணைக்கே**

---

# 4. கொம்புகா லற்ற குருபதாஷ்டகம்

(சுகத்தின் சிகரம் சொரூப ரமணமே ; அதுவே சற்குருவின் பாதமுமாகும்)

1. சிவம்பரம கம்புரண மங்களந டம்புரிசு
   கம்பகவ னங்கடவுளன்
   பவங்கடித லம்புவியி டங்கழலி ரண்டருளு
   டம்பிலுல வுங்குருபரன்
   சிவந்தழலு யர்ந்திடமு குந்தபிர மன்றனடு
   நின்றவறி வின்கதிரவன்
   உவந்தடியர் தம்பவம றுந்திடசு ரந்தருள
   கண்டரம **ணங்குருபதம்.**

2. இகம்பரசு கந்தருவி தங்கரும மன்றதிலி
   ருந்துமன முந்திபகிர்வந்
   துகந்துடல பந்தமுற லின்றியது வந்துதியி
   டம்புகவ டங்குகருமஞ்
   சுகந்தரமு யன்றிடுத குந்தவழி யின்றதுது
   வங்குபவர் துங்கவருளுண்
   டகங்கரம கம்பதிய வங்குறுசு கம்பரம
   னந்தரம **ணங்குருபதம்.**

3. மலந்தருமு டம்புறும னந்தவுயி ருந்துயரு
   ழன்றுமடி கின்றனசுகங்
   கலந்தவுல கங்களினு மங்குளன விங்குளன
   கண்டுறமு யன்றன கரிந்
   துலர்ந்தவுகிர் தம்பலிடு கின்றமதி மங்கியசு
   ணங்கமுடி வன்றியலபன்
   னலங்களும கங்கரம ழிந்தசுக மிங்கதுள
   தந்தரம **ணங்குருபதம்.**

4. மகம்பலபு ரிந்துசுர ரிந்திரன ரும்பதவி
வந்திடினு மந்தமுளதம்
மகம்பலபு ரிந்துஜய முண்டிடுமு னம்படும
னந்ததுய ரம்பலவிதம்
மகம்பலபு ரிந்திடகி ளம்புமதி யுந்துதல(ம்)
முங்கிசக ளந்துயிலிரண்
டிகந்தகம கம்புரண விஞ்சநுப வம்பரம
னந்தரம **ணங்குருபதம்.**

5. உருண்டுலவு மண்டசத மின்றரசு வந்திடினு
முண்டிமுத லஞ்சுபுலனுந்
திரண்டநுப வம்புகம லிந்தவிட யங்களுமி
ருந்துமது சந்த்ரகதிரிங்
கிருண்டுளம ரந்தனிழல் வந்தவள வின்ப(ம்)மன
மந்தர்முக நின்றகமிறந்
திரண்டறவி ருந்ததிலி ருந்தபடி நின்றிடும
கண்ட**ரம ணங்குருபதம்.**

6. பங்கயமி ருந்தபிர மன்புவிசி வந்தவர
விந்தநய னங்களுடனுஞ்
சங்குதிகி ரங்கரமு றும்புயனி றந்திகழ
னந்தசய னன்றனுலகுந்
திங்கணதி தங்குசிர மும்பருவ தன்குமரி
பங்குளவ ரன்றனுலகுந்
தங்குசுக மன்றகம ழிந்திதய மன்றுணர்வ
னந்**தரம ணங்குருபதம்.**

7. பலம்பிடிம லம்படவு ளங்கிளர்த லம்புகலி
டங்கருத பந்தமகலுந்
தலஞ்சிவனி லிங்கவடி விங்கருண வங்கிகிரி
யும்பருட னிம்பர்தினமும்
வலம்படவ ரும்பருவ தங்கவரி ளம்பருவ
சம்புமலர் வந்தநுபவம்
மலர்ந்தருள்சு ரந்தமிர்த சிந்துவழி கின்றமக
ரந்**தரம ணங்குருபதம்.**

8. எந்தவித சிந்தனமு முந்திதனு புந்தியுணர்
வின்றிவரு கின்றிலதுறங்
குந்தருண மந்தர்பகி ரின்பமிகு துன்பதுவி
தங்களில தங்கமகமின்
றந்தமுறு தந்த்ரமவு னங்குருவின் மந்த்ரமிது
தந்தசர ணம்புகழவுந்
✱தந்தபத மின்றிவரு சந்ததமி ழன்புதுதி
தந்தரம **ணங்குருபதம்.**

## 5. அருணசலத்து ரமணேசா

('மருவே செறித்த...' என்ற திருப்புகழ்ச் சந்தம்)

தனஞ தனத்த தனஞ தனத்த
தனஞ தனத்த – தனதான

1. அருண சலத்தை யொருகால் நினைக்கி
னதுவே விமுத்தி - தருமாமிவ்
வொருமா வுரைக்கொ ருபமா னமுற்ற
வுயர்வாழ் வுபெற்ற - பெருமானே
அருவா யகத்து ளக(ம்)நீ புரிப்ப
தறியா திளைத்த - வடியேனை
யருளா லுதித்து குருவா யுணர்த்தும்
**அருண சலத்து - ரமணேசா.**

2. நிலையே துமற்ற வுடல்நா னெனக்கொள்
நினைவே யழித்து - நெடுநாளாய்
அலையா வலைத்த பவசா கரத்தி
லழிவே தடுத்தும் - அறிவாமோர்
கலையே பயிற்றி நழுவா திருத்தி
கதியே புகுத்தி - யருள்வாயே
அலையா சமுத்ர வறிவா கு(ம்)நித்ய
**வருண சலத்து - ரமணேசா.**

✱ தந்தபதம் = தந்தம் + பதம் ; கொம்பு காலின்றி வரும் தமிழ்ச் சந்தம்

3. தவமா மியற்கை யருளா னமுத்தி
தரவே யுதித்த - குருவான
சிவமே கடைக்க ணுறநீ மறுக்கி
லடியே னிஷித்த - செகமீதே
நவமா முளைத்து மதியே மயக்கு
நவையே சுவைத்து - மடிவேனே
அவமே யகற்றி யருளா லணைக்க
**வருணா சலத்து - ரமணேசா.**

4. துடிநா விழிச்சொ லிகமோ கமற்ப
சுவையூண் விருப்பம் - முனிவோடே
மிடிசேர் நெகிழ்ச்சி வெறிகா மமச்சம்
மிகுவா தனைக்கு - முதலான
படியா வகத்தி னுறைவா மரக்க
ரிட(ம்)நா னகப்ப - டலுமாமோ
அடியா ரிடத்து னருளே ஜயிக்க
**வருணா சலத்து - ரமணேசா.**

5. ஒருகா லுதித்து ளொருகா லொடுக்க
முறுபா ழகத்தை - யொருநாளு
மருவா மலத்த✱ முதியா திருக்கும்
அறிவா யிருக்க - வறிமாறே
ஒருகா லுனக்கி வெளியே னிடத்தி
லொழியா விரக்க - முதியாதோ
அருகா மையுற்று னடியே ணவைத்த
**வருணா சலத்து - ரமணேசா.**

---

✱ அத்தம் உதியாது - உதயாஸ்தமனமற்ற

6. இறைவா வெனக்கு ளிமையா விழிப்பொ
டெழநீ யிகத்தி - லுடல்வாணுள்
முறையோ டுசத்வ குணமே யமைக்க
முழுவா ரம்வைத்த - வுனேநாயேன்
மறவா திருக்கின் மனமே தெனக்கிவ்
வர(ம்)நீ யளிக்க - வரவேணும்
அறவே யகத்தை யழிமா றணைக்கும்
**அருணு சலத்து - ரமணேசா.**

7. விதியே யிழுக்க வினேயே துளிர்த்து
விடுமோ விலக்க - வியலாதோ
கதியே கிடைப்ப தரிதோ வெனக்கண்
அழுநீர் பெருக்கு - மடியேனே
''பதிநா னிருப்ப தறிவா யுனக்கொர்
பயமே'' னெனச்சொல் - அருள்வாயேல்
அதிவா தையுற்ற மனமே யிறக்கும்
**அருணு சலத்து - ரமணேசா.**

8. பொறியே புகுத்து சுகமே யிழுக்க
பொருளே சுகத்தி - னிடமாக
வெறிநா யெலுப்பை மிகவே கடித்த
விதமா வுழைத்த - விடனேனேக்
குறியா கவைத்து னருளா ழிவிட்ட
கொடையே துதிக்க - வெளிதோவென்
னறிவோ டிணைத்த வறியா மையற்ற
**வருணு சலத்து - ரமணேசா.**

9. தனையே விடுத்தி வுலகோர் தனித்த
பொருளா நினைத்த - தவருலே
வினையே குவித்து விளைவே புசித்து
விதிபோம் வழிக்கு - விரையாதே
இனியே னுமுக்ய வெழுவா யகத்தின்
இழியா திருக்க - வருள்வாயே
அனையா யிரத்த ரிணையா தலற்ற
**வருண சலத்து - ரமணேசா.**

10. ரமண வணக்கம் ரமண வணக்கம்
ரமண வணக்கம் - அடிநாயேன்
சமண ருமற்ற விருபா தபத்ம
சரண கிவிட்ட - தவமீவாய்
எமனே விலக்கி எழுபூ மிமுற்றும்
இறையா யிருக்கு - முயர்வான
அமலா திபர்க்கு ளரசா கிநிற்கும்
**அருண சலத்து - ரமணேசா.**

# 6. ஜோதியங்கிரி வாசா

தான தந்தன தானு தனுதனு
தான தந்தன தானு தனுதனு
தான தந்தன தானு தனுதனு – தனதானு

இராகம் : குறிஞ்சி தாளம் : ஆதி

**ஜோதி யங்கிரி வாசா** நமோ நமோ
தூய வின்பவி காசா நமோ நமோ
சோக பந்தவி நாசா நமோ நமோ – நரர்போலே
தூலம் வந்தசு ரேசா நமோ நமோ
சோம சுந்தர தேசா நமோ நமோ
சூழு மந்தக நாசா நமோ நமோ – அடியோடே

கோத கன்றசு சீலா நமோ நமோ
கோப சங்கர காலா நமோ நமோ
கோக தந்திர வேலா நமோ நமோ – குமரோனுய்
கூட லம்பதி லீலா நமோ நமோ
கோல சுந்தர பாலா நமோ நமோ
கோடி மந்திர மூலா நமோ நமோ – குருதேவா

ஆதி யம்பல நாதா நமோ நமோ
ஆர ணந்தொழு பாதா நமோ நமோ
ஆத ரந்தரு மாதா நமோ நமோ – புகழ்பாட
ஆசி தந்தசு போதா நமோ நமோ
ஆகம் விஞ்சும தீதா நமோ நமோ
ஆதி யந்தமி லாதாய் நமோ நமோ – எவராலும்
ஓத ருஞ்ஜித மாயா நமோ நமோ
பாத பங்கய தூயா நமோ நமோ
சாது சங்கச காயா நமோ நமோ – ரமணேசா
யோக குண்டலி நேயா நமோ நமோ
ஏக வம்பர காயா நமோ நமோ
ஓது மோம்**ரம ணாய** நமோ நமோ – **பகவானே**

## 7. பகவான் காண்

தனதன தனன தனதன தனன தனதன தனன - தனதான

இராகம் : அடாணா தாளம் : ஆதி

அருவுரு விலாத வறிவுரு வனாதி யதுநர சொரூப-பகவான்காண்
அருணகி ரிஞான வருளுரு வமாகி யவனியி லுலாவு-பகவான்காண்
குருவென நராதி சுரர்களு மிலாது குருபர னுமான-பகவான்காண்
குககண பதீச ரவியுமை முராரி யறுசம யதேவ-பகவான்காண்
ஒருமுறை யிலேனு நினையிலு யர்ஞான முறவரு ளுநாம-பகவான்காண்
உயர்வி னவதார மொருபதின் மனாகி யுலகிலு ருமேவு-பகவான்காண்
ஒருகண நிலாம லுழன்மன துமோய வுயர்வழி யையோது-பகவான்காண்
ஒளிரும **ருணாச ல**மதில ருள்ஞான முதவுர **மணேச-பகவானே.**

## 8. ரமண மேனி வண்ணம்

தந்ததன தந்தனந் தந்ததன தந்தனந்
தந்ததன தந்தனந் - தந்ததான

இராகம் : ஹிந்துஸ்தான் காபி தாளம் : கண்டகதி

கங்கையொடு சந்திரன் றங்குமுடி யுங்கருங்
கண்டமுமு கந்தவொன் -றும்பரான
கஞ்சனரி தஞ்சமென் றுய்ஞ்சகிரி யென் றெழுங்
கம்பநெடு வங்கிவந் - தங்கமேவி
தங்கமுரு கும்பதங் கொண்டபொமு தங்குவெண்
சங்கநிற முங்கலந் - தங்கையூடே
தண்டொடுக மண்டலந் துண்டுகொவ ணஞ்சிரங்
கொண்டதிரு முண்டனந் - தந்தவேழஞ்
சிங்கநடை யும்பெரும் பங்கமுறு கம்பிரந்
தென்படந டந்துவந் -திங்குநீயே
தென்புறமு கந்தரும் பண்டுறுசு யம்புநின்
செங்கமலம் வந்தடைந் - ''தங்கணாள

எங்கடவு ளுஞ்சரண் டந்தகுரு வும்பொருந்
தெந்தையனை யுந்திரண் -டொன்றதான
வெங்களுயி'' ரென்றுமுன் கெஞ்சுமென கம்புணர்ந்
தின்பரம **ணம்பொருந்** **-தெம்பிரானே**

## 9. சற்குரு பொற்பதம்

தத்தன தத்த தத்த தனதான

அற்பனெ னக்கு முத்தி - யனுபூதி
யத்துவி தச்சு கத்தை - யருள்வானுய்
வெற்பரு ணைக்கி ழுத்த **- ரமணேசா**
விட்டிடு தற்பெருத்த - பழியாமே
இப்படி வைத்திருப்ப - தருளாமோ
எப்பொழு தெற்பு சிக்க - விசைவாயோ
**சற்குரு பொற்ப த**த்தை - மடநானே
தப்பிநி னைக்க வைத்த - **பகவானே.**

## 10. அருணகிரி ரமணகுரு

தனதனன தனதனன தானதன தான

இராகம் : உஸ்ஸைனி தாளம் : கண்ட சதுச்ர லகு

வினையின்முடி யவிழபொரு - வீரமிலதாலே
விவிதவுட லுலகிலடை - வேதனையுமாற
அனையின்மிக வரியதயை - யாதரவுதேடி
**அருணகிரி ரமணகுரு** - நாதனுனை நாடி
மனையினுறு முறவுபண - மாதியகமான
மனிதர்முத லிதரபல - வானதுணைநாடா
வெனையுமுன தடிமையென - வேலவருவாயே
யிறைவகுரு பரமசிவ - மான**பகவானே**

# 11. ரமண விளக்கு

தந்ததனத் தானதானத் தனதான

இராகம் : உஸ்ஸைனி — தாளம் : ஆதி

தஞ்சமெனத் தாளணையத் - தெரியாது
சஞ்சலமுற் றேபுவியிற் - றடுமாறி
யஞ்சிபவத் தாரழிவிற் - கழுவேனுள்
ளஞ்சலித் தாதரவைத் - தரவேணும்
கஞ்சமலர்க் கோனரவிற் - றுயின்மான்முன்
கண்டறியத் தேடுமழற் - பொருளேயென்
வஞ்சமனப் பாழ்கெடசற்-குருவாகி
வந்த**விளக் கேரமண**ப் - பெருமானே.

# 12. குருநாம மந்திர மகிமை

தனதான தந்ததன தனதான தந்ததன
தனதான தந்ததன - தனதான

இராகம் : காம்போதி — தாளம் : ஜம்பை

கனமாமி குந்தனமொ டுலகாள வுங்கனக
மகுடாதி கொண்டுசிவி -கையிலேறி
கவிவாண ரும்பரவ விபமாவி னந்தொடர
வலமேவி கந்தருவ -வெழிலோடும்
அனமேநி கர்த்தமனை யவளோடி ளஞ்சொலிசை
யமுதீயு மங்குழவி -யவையோடும்
அதிநாளி ருந்துலகி லதிகார மும்பெருகி
யரசாளு மிந்த்ரசுக -நுகர்வோனும்
இனமாயு றுந்தரும வெமனுரை ழுந்தருள
விமியேனு மிங்குதவி -யிலனுகி
யிவையாவு மந்தமுற வினையேதொ டர்ந்துவர
விழிவாகி நொந்தயரு -மிக வாழ்வின்

மனமாயை வெந்தழிய **குருநாம மந்த்ரநம**
**ரமணாய** வென்றுசொலி -யருளாலிம்
மரணாதி தொந்தமற வுயர்வாழ்வு தந்தெனையுன்
மகனாய ணைந்தருள்க -பகவானே

## 13. குரு ரமண சிங்கம்

தனதனத னந்தனந் தந்தனந் தந்தனந்
தனதனத னந்தனந் தந்தனந் தந்தனந்
தனதனத னந்தனந் தந்தனந் தந்தனத் - தனதான

இராகம் : பந்துவராளி தாளம் : திசிரசாபு

தினமெழும கங்கரங் கொண்டுடம் புந்திடம்
படசுவையி னுண்டியும் பண்டமுந் தின்றுமிஞ்
சிடவழகு சந்தனங் கொங்குதங் கும்பலப் -பலவான

திகழுடைய லங்கரம் பொங்கவங் கங்கணமண்
டியபணிக ளுங்கொளுந் தங்களின் பங்களந்
திருவனைய பெண்டிருங் கொஞ்சிளங் செஞ்சொலிற்
- புதல்வோரும்

அனமலைவி ளங்கிலங் கண்சிறந் துஞ்சுமந்
ததிவிசைசெ லுங்கலங் கண்படிந் தும்பறந்
தளகபுரி நம்பனின் செம்பொனும் பின்படத் -தனவானாய்

அடைபடுசு கங்களுங் கங்குலின் றுஞ்சிநெஞ்
சலைபலவி தஞ்செயுஞ் சஞ்சலங் கொண்டெழுந்
தகலுகன வென்றிகழ்ந் தங்கைதங் குங்கனிக் -கிணையாக

தனதருட ரும்பரந் தஞ்சமுன் செம்பதந்
தவிரவொரு தந்த்ரமந்த் ரங்களுந் துன்புறுந்
தமியனறி கின்றிலன் றன்பதங் கெஞ்சிநிற் -பவனானேன்

தருமமென விங்கெனஞ் சங்கொணெஞ் சுங்கரைந்
துருகவரு ளும்பெயுங் கொண்டலுன் கண்கடந்
தடிமையெ னகங்குளிர்ந் துன்பதங் கும்பிடத் -தரவேணும்

கனகதிபெ றுங்கணங் கங்கணந் தங்கரங்
கொளுமுயர்த வங்கிடந் தங்கமங் கும்பெருங்
கடவுணிலை பொங்ககங் கொண்டசம் பந்தசற்-குருதேவா

கதியிதய பங்கயந் தங்கிடங் கொண்டநங்
**குருரமண சிங்க**னென் றன்பர்கண் டிங்குவந்
தருணகிரி தென்புறங் கொண்டுகண் கண்டமெய்ப்
**-பகவானே.**

## 14. அடிப்புகல் அருள்வாய்

தத்தத்தன தத்தத் தனதன தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன - தனதான

இராகம் ஃ ஷண்முகப்ரியா தாளம் ஃ மிசிர சாபு

சித்தத்தலை வற்றுப் பருவுல
கத்துச்சுவை சப்பிட் டகவழி
தித்திப்பெழ லூற்றுத் தனுநிலை - தெரியாதே
திக்கெட்டொடு செப்புத் தினமிர
வைச்சுட்டுமி ரட்டைப் பிரிவொடு
சிக்கிட்டுழல் வர்க்கத் ரிபுடிகள் - அழிவாகி

சத்தத்தொடு மிக்கத் தெரியொளி
யெத்தெத்தனை யக்கட் செவியிடை
தட்டுப்படு மற்றப் பகிர்முக - மலையாதே
தத்வபொரு ளத்திற் றிரமுட
னிற்கச்சுவை யுற்றுக் களிமிகு
சச்சித்தென கைக்குட் கனியென - மிளிர்வோனே

வித்தைக்கர சித்தைத் தவிரவொர்
வெற்றித்தவ மற்றெத் திலுமிலை
விட்டுத்தளு டற்பற் றெனவெகு - விதமாக
மெத்தத்தெளி சொற்கட் டமிழினின்
முத்துப்பதி ரத்னச் செயுளினின்
வித்தப்பர பத்தர்க் கருளிய - குருதேவா

பத்திச்சுவை முற்றத் திருவரு
ளிட்டிப்புலே யற்பப் பொதியுதி
பற்றற்றுன டிக்குட் புகலுற - வருள்வாயே
பக்ஷிக்கிரு பக்ஷத் வயநிகர்
பத்திச்சுவி ரத்திப் பெறவொரு
பக்கத்தெனே வைத்திட் டரமண - பகவானே.

## 15. அருட்புகல் தரவேணும்

தனத்தன தனத்தந் தனத்தன தனத்தந் தனத்தன தனத்தந் - தனதான

இராகம் ៖ இந்துஸ்தான் காபி தாளம் ៖ ஆதி

திருப்பணி யிழைத்துஞ் சிவப்பதி துதித்துஞ்
செபப்பணி திளேத்துஞ் சினமாசை
ஜெயித்திட வுழைத்துந் திரிப்புல னிழுத்துந்
திடத்தவ மிருக்குந் - திருவாளர்
விருப்புள மழைக்குங் கணத்தவ ருவக்கும்
பரத்துரு வெடுக்கும் - பெருமானே
விஃனச்சுமை மிகுத்துஞ் செகத்திஃன நிஃனத்தும்
பலப்பொழு தொழித்தென் -புவிவாணுள்
ஒருக்கண முனேக்கும் பிடப்பகை மனச்சஞ்
சலத்திஃன யொழிக்குந் -தவஞேகேன்
உளத்துயர் வெதற்கும் பொருத்தமி லெனக்கண்
**டருட்புக லெனக்குந் -தர வேணும்**
நெருப்புரு மலேச்செம் பதத்தெனே யழைத்துன்
பணிக்கென வளர்க்குங் - குருதேவா
நினக்கல தெவர்க்கென் பவப்பிணி யொழிக்கும்
பொறுப்புள முதிக்கும் - பகவானே

## 16. சோதி சிவ தந்தை

தான தனதந்த தான தனதந்த தான தனதந்த - தனதான

இராகம் : புன்னுகவராளி — தாளம் : ஆதி

வேத னுமுகுந்த னேது பதமிந்த மேதி னிபடுந்தொல் -வினைதீர
மேவ ழகுசுந்த ராரி யருகந்த வேள்வி யதுதந்த -விளைவாகி
சோதி யுடல்கொண்டு சூல புரம்வந்து சோண மலையென்ற - சுவையூறி
சோட சநிறைந்த போத கமெதென்ற சோத னைதெளிந்து -சுயமாக
ஆதி யெழுலிங்க சோதி சிவதந்தை யாணை யுமிதென்ற - ருணைமேவி
ஆக முமறந்து யோக நிலைகொண்ட தீத மௌநின்ற -**ரமணேசா**
நேதி யகமுந்து பாதி யெனுமந்த்ர நேமி கொடுவென்று - நிசநானய்
நேரி லதுணர்ந்தீ நேர முளமுந்த நீய ருள்கவெந்தை - **பகவானே**

## 17. சம்பு அருணேசன்

தந்ததன தானந் தானத்தானத்
தந்ததன தானந் தானத்தானத்
தந்ததன தானந் தானத்தானத் - தனதான

இராகம் : சிந்துபைரவி — தாளம் : ஆதி

கங்குலொடு நாளுங் காலக் கோடிக்
கஞ்சனெடு மாலுந் தேடித் தேடிக்
கண்டறிகி லோமென் றூடிக் கூடிக் -கனைமீறிக்

கம்பமழ லீதுங் காணக் காணக்
கண்கண்மன மார்வம் பூணப் பூணக்
கந்தசிவ பாதந் தோணத் தோணக் - கனிவாகி

''எங்களிறை யாகுங் கோனிச் சோதிச்
செந்தழல தாவந் தாய்தற் போதெற்
கிங்குதியு மாகங் காரப் பாவப் - பழி தீராய்

எந்தை'' யென நாடும் போதத் தேவர்க்
கின்பசிவ ரூபங் காணத் தாணுச்
**சம்புவரு ணேசன்** பேர்பெற் றுயிக் -கலிநாளில்
பொங்குலக மாயம் பேரற் காகச்
சிந்தையறு ஞானந் தேரற்காகப்
புந்திதடு மாறுஞ் சேய்கட் காகக் - குருவாகிப்

பொன்றிருவி காசந் தோயத் தூயத்
**துங்கரம ணுகந்** தானுற் ''றுயப்
பொன்றுமக மே'' யென் றேழைக் கோர்சொற்
-புகல்வோனே

சங்கையலே வாலும் பூர்வத் தாசைக்
குந்துவலி வாலும் போகத் தாகச்
சஞ்சலசு பாவஞ் சாதற் காகச் - சரணுகித்

தங்குமடி யேனின் றேடுற் பாவச்
சங்கடமெ ழாதுன் பாலுற் றேயத்
தந்தருள வேணும் பூமத் தேவப் - **பகவானே.**

## 18. பராகாயப் பகவான்

தன்னதன தானத் தனதான

இராகம் : ஹம்ஸானந்தி தாளம் : கண்டஜம்பை

பன்முகமா மாசைப் - புயலாலே
பன்னெடுநா ளோடிப் - பதறுதே
என்னுடையோ ஞநிற்-பதமேவி
யின்னருளே பாடிப்-பழகேனே
முன்னிலையா நாடக் - குருவாநீ
முன்னினையே நானத் - தகவாலே
யுன்னிடமே யோயத் - தருவாயே
யுள்ள**பரா காயப் - பகவானே.**

(துரிதநடை)
உனதருளெது தருவது வதுசுகமா
யுளமகிழ்வதை யலதினு மொருபொருளே
யெனததிநசை யெனமன மினிநினேவே
யிமியெனுமசை வுறலற வருள்புரிவாய்
வனதவமுனி வருமிறை யருணசிவன்
மனிதனினுரு வதனெடு நிலமிசையே
தினமிதிலுள னெனவுன தடிமலரே
செயதுதிநிறை சிவகுரு **ரமணபதே.** (பன்)

## 19. இதய ரமண தேவன்

தனன தான தானன தனன தான தானன தனன தானதானன-தனதான

இராகம் : அமீர்கல்யாணி தாளம் : திசிர ஏகம்

உலக மாய மாமாரி வசமதாகி யேமாளு
முடல மாதி நாளுகை - வுணர்வூறி
ஒழிவி லாத நாளாக வுதய மோடு சாவாகு
முததி மூழ்கி வீணுகி - யொருபோதும்
விலகி லாத பேயாடு வினேயி னுட லேநாடி
விவித நாம ரூபாதி - விழைவாகி
விடத டாக நீராட மிகுமி ராக மேகூடி
விரைவி னுச மேயாகு -மெளியேனும்
அலேக ளேது மோதாத விதய வாழி யேநாடி
யகமு கார்வ மீதூர - வருடாராய்
அமைதி வாழ்வி னுதார வகவி சார மேதேறி
யனன்ய வாழ்வை நாயேனு - மடைமாறே
இலகு ஞான மாமேரிவ் வருண சைல னுவாழு
மெனது நாய காகூவி -யருள்வாயே
இடைவி டாத நாளுகி **யிதய** மீதி லேயாடு
**ரமண தேவ** தேவேச -**பகவானே**

# 20. அசலப்பதம் அருள்வாய்

தனதத்தன தத்தன தனதத்தன தத்தன தனதத்தன தத்தன - தனதான

இராகம் : பூபாளம் தாளம் : ஜம்பை

நிலைவிட்டித யத்தொரு புயலுக்கிணை யற்புத
நினைவுற்றெழு சக்தியி -னசைவாலே
நிழலொத்துல கப்பட நிரையுற்றுட லுட்பட
நிகழ்வித்திடு பொய்ப்புல - னதனாலே

மலமிக்குள விச்சட மகமெற்குல கப்பொருள்
மகிழ்தற்குறு மிப்படி - மனமாகி
வளர்மித்தையு யிர்ப்புள வடிமைக்கினி சிற்சுக
வரையற்றவி ருப்பநு -பவமாகி

அலைபுற்புத மொத்தெழு மவனித்திர ளெற்கய
லலவத்துவி தப்பொரு - ளகமாகும்
அறிவுற்றமர் வுற்றினி யழிவற்றள வற்றுய
**ரசலப்பத** முற்றிட - **வருள்வாயே**

மலையிற்சிவ னுக்குரு வருணக்கிரி சற்குரு
வடிவுற்றுட லித்தரை -மிசையேகி
மனிதர்க்கெனன் மட்டல வுயிர்பற்பல வுக்குமவ்
வளமுத்திய ளித்திடும் **-ரமணேசா**

# 21. துரிய பதம் அருள்வாய்

தனனதன தான தத் தனதனதன தானதத்த
தனனதன தானதத்த - தனதான

இராகம் : செஞ்சுருட்டி
தாளம் : ஜம்பை

அலைகளென வேயுதித்துள் ளமைதியற வேயொழித்தென்
னறிவைவினை யாலுழற்று - மகமாயம்
அதுவசம தாயுழைத்திவ் வவனியுட லாசைமிக்குன்
னருமையறி யாதழித்தென் - னதிகாலம்

தொலையவினு மேல்விடுத்த லணுவுமுத வாதகத்தி
றுயிலகல வேவிழித்துன் - னருளாலே
சுகவடிவ மாமகத்துண் முழுகிடவு ளேகுதித்தோர்
**துரியபத மேநிலைக்க - வருள்வாயே**

கலைகள்பதி னறுமுற்றி யலைகடல்வ சீகரித்த
கவின்மதிய மாயிரெட்டின் - மலர்மேலோன்
கரியவனு மேமலைத்த கடவுளக மாபுரித்த
கடிமணநன் மாலையிட்டு - வதுவாகி

பலவிதவி நோதமுற்ற பருவதம ணமலைத்தென்
முகபசுமை சாரலுற்ற - **ரமணேசா**
பணிபவர்க ளானபத்தர் பரமசுக ஞான வித்தை
பயிலகுரு பார்வைவைத்த - **பகவானே.**

## 22. அருளுதவி யீக

('கருவினுரு வாகி வந்து...' என்ற திருப்புகழ் சந்தம்)

தனனதன தான தந்த தனனதன தான தந்த
தனனதன தான தந்த - தனதான

நமரமண தேவ வென்று நனவுகன வேபு கன்று
நமனையடி யோடு வென்று - நழுவாத
ரமணசுக மேயி ணைந்து ரவிசசியு லாம றந்து
நவிலவிய லாது ணர்ந்த - நவஞானம்

தமதியல்ப தாய றிந்து சகஜநிலை யேநி றைந்து
தழையவரு ணீபு ரிந்து - தரவேணும்
தகவுதக வாமை யென்ற சலுகைவிதி யேயி கந்து
சகலவுயிர் வாழ்க வென்ற - தயையாலே

சமயமொடு ஜாதி யென்றும் சரவசர ஜீவ ரென்றும்
சகலவித பேதங் கொண்டு - தடுமாறும்
ஜகமயல னேகம் வந்த தவையகல வாசி தந்து
தனிலனிய ராரு மின்றித் - தவயோக

அமலசுக மேம லிந்திங் கருளுமரு ணைச லந்தன்
அருளிடம தாயெ ழுந்த - **ரமணேசா**
அணுவுமலை யாம லுன்றன் அடிமையென வேபொ ருந்த
**அருளுதவியீக** வென்றன் - **பகவானே**

---

# 23. ரமணப்ப அருள்வாய்

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன - தனதான

இராகம் : நாதநாமக்ரியா                                        தாளம் : ஆதி

மிக்கெழும கத்துமம தைக்குருவ கத்தஞெரு
தக்கனைய ழித்ததிற -னருள்வாயே
விட்டிடும லர்க்கணைய னட்டிடதி றக்குமறி
வுக்கணழ லெற்குதவி -யருள்வாயே

அக்கரமோர் மெய்ப்பொருளி னர்த்தமென தெற்குமுக
மிட்டமரு முற்றநிலை -யருள்வாயே
அப்பொழுத டிக்கணைவர் பக்குவவி ருத்தர்பெறு
மத்துவித நிட்டைதனை -யருள்வாயே

தக்கிடதி மித்திமென நர்த்தனம யிற்பவனி
குக்குடமு யர்த்திவரு -குமரோனும்
சத்திபர மச்சிவையு முற்றிடவ ளித்தசிவ
✱தத்துவமெ னக்குமினி -யருள்வாயே

இக்கலியி னற்சுழிகை பெற்றருண வெற்பில்வர
விட்டரம ணப்பநினை -யிசையோடு
மெத்தடையு மற்றகவி சித்ரதமி ழிற்பரவி
யிச்சையற வெற்கருள்க **-பகவானே**

குறிப்பு : ✱ குமரனுக்கும் சிவைக்குமளித்த சிவதத்துவம் - ஆத்மசாக்ஷத்காரப் பிரகரணமும், தேவிகாலோத்திர ஞானசாரப் படலமும்.

## 24. பகவானே அருளாயோ?

தனதன தான தனதன தான தனதன தான-தனதானு

இராகம் : காம்போதி                                                    தாளம் : ஆதி

இகபர மேவு சுகமெனு மோக மெனையினி யேனு - மகலாதோ
இழிநடை மாறி யுடன்மன நானு மெனதெனு மாய - மொழியாதோ
செகநிலை வாதி யெழுமக மான சிறுமையு பாதி - யழியாதோ
சிவரம ணய நமவென நாவும் ருசிமிக வாகி - மகிழாதோ
நகசிகை யூடு சிவவடி வான **ரமண**தி யான - நிகழாதோ
நமனணு காத விதயமு லாவி நடமிடு ஞான - முதியாதோ
அகமுக மாகி யமலச மாதி யனுபவ மாக - **வருளாயோ**
அருணகி ரீசா வடியனை யாள வருளுரு வான - **பகவானே.**

## 25. அகஸ்புரணம் அருளுக

தனத்த னந்தன தனதன தனதன தனத்த னந்தன தனதன தனதன
தனத்த னந்தன தனதன தனதன - தனதானு

இராகம் : ஹரிகாம்போதி                                                    தாளம் : ஆதி

உழைக்கு மன்பர்க ளுனதரு ணெறிவழி
யுறக்க மும்பசி யுடலுணர் வறநிதம்
உலைப்ப றும்பர மசுகிர்த சிவசுக - வெறியேறி
உதிக்கு மம்புவி நிரைசெயு மயனரி
யொழித்தி டுஞ்சிவ னிறையவ ரிவர்களி
லொருத்த ருஞ்சம னிலரென நிமிர்தர
-வருள்வோனே
விழைப்பு லன்களை யடுமுள வறிகிலன்
வினைப்ப யன்களு மறநினை நினைகிலன்
விடச்சி னஞ்சுவை முயல்வழி முயல்கிலன் -மனமார
வெறுக்கி லன்பழி வினைகளை விடுகிலன்
விடத்தெ ரிந்தவர் தமதடி பணிகிலன்
விழிக்கிலன்கன வெனுநன வதிதுயில் -வெகுகாலம்

மழைக்க மும்பயி ரெனமன வலிவினை
வளர்க்கு முன்றுணை பெறவுள முருகிலன்
மலப்பெரு ங்குழி யுடலினை யகமெனு - மயறீர
மறக்கி லன்கரு மறலிசெய் கொடுமைகள்
வரப்பெ றும்பய வுணர்வொடு முனையகம்
வரிக்கி லன்றவ சியர்களை யருள்பெற -வருமாறே
அழைக்கு முன்கிரி யருணம லையிலுல
கனைத்து முன்றிரு வருளுரு தரிசன
மதைப்பெ றும்படி யெழுசிவ குருபர - **ரமணேசா**
அடிக்க டைந்தவ ரகமப ஹரணமு
மகத்தொ ளிர்ந்திடு மக**மக (ஸ்)புரண**மு
மளிக்கு முன்பத வடிமையை **யருளுக** - **பகவானே.**

## 26. ஸோஹம் அநுபூதி யருளுக

தான தனதன தான தனதன தான தனதன - தனதான

இராகம் : ஹரிகாம்போதி தாளம் : ஆதி

தேஹ மிதுபதி யாகி லிதிலுறை தேஹி யெவனென - வறியேனே
தீன மிகவிழி வான மொழிமன வீன னெனவுழ -றருவேனே
நாஹ முடன்மன மேக சிவவடி வாக வுள்ளே - யறிவாயே
ஞான மிதுவென மோன முடனருள் ஞான குருபர -**ரமணேசா**
கோஹ மெனநிலை யாக வினவிடு தாக மினுமெனு - ளுதியாதோ
கோர வகவப சாரமயலது தீர வுனதருள் - புரிவாயேல்
**ஸோஹ மனு**பவ மாக சுகசிவ போக நிதிபெற - வியல்வேனுன்
சோதி யருணையி லாதி குரு**வநு பூதி யருளுக** - **பகவானே.**

# 27. அகநாசமுறச் செயவேணும்

தனதான தனத்தன தான தனதான தனத்தன தான
தனதான தனத்தன தான - தனதான

இராகம் : பூபாளம் தாளம் : ஆதி

ஒருநாளு முனைப்பிரி யாத வுளமோடு முடற்பொரு ளாவி
யுனதாக வளித்திடு பாய -முணராமல்
உலகாய தமுக்கிய மாயிவ் வுடலாதி கணித்திய மாகி
உலகேயுழ லக்கட வேனை -யினியேனும்

விருதாபி றவிக்கழி யாமல் வினையேவு வழித்திரி யாமல்
வெகுகால மழுத்திய மாயம் -விடுமாறே
வினையாவு மறத்தின நானெவ் விடமேவி யுதிப்பனெ னுடி
விரைவாய கமுற்றிட நீயே -யருள்வாயே

குருநாத னெனப்பல பூமி குணசீல தவப்பெரி யோர்கள்
குனிவான சிரத்தொடு சூழ -வருளாளர்
குருயாரு நரத்திலி லாது குலையாது நிலைத்துச மாதி
குறிநாம மனைத்தும னுத - பதமேறி

அருணுசல மிக்கலி நாளி லவதார மெடுத்தவ னுகி
யருளாலு லகத்திலு லாவும் **-ரமணேசா**
அடியேனு முனக்குண வாகி **யகநாச முறச்செய வேணு**
மறிவாகி சற்குரு தேவ **-பகவானே**

# 28. அருணமகா லிங்கம்

தனதன தானந்தத் தனதன தானந்தத்
தனதன தானந்தத் - தனதான

இராகம் : பூபாளம் — தாளம் : திரிபுடை

உருமலி காணுங்கட் புலனுணர் வாலிங்கற்
புதவுல கேதங்கட் -குயிரான
உவகைய தாகும்பற் பலவித போகங்கட்
குறைவிட மாகுங்கற் -பகமாகத்

திரிதரு பேரெந்தப் பொழுதெனு மேவந்தெற்
செறிவதி லாதிந்தச் -செகவாழ்விற்
றெருளுரு ஞானம்பெற் றிடவரு ளுடுஞ்சற்
சனருறை மாசங்கத் -திடையேநான்

அரஹர நாமஞ்செப் பிடவக நாசம்பெற்
றருளுணர் வேபொங்கத் -தரவேணும்
அயனரி தேடுஞ்சித் தழலுரு வாகுஞ்சத்
தகபர மானந்தத் -தனிவாழ்வே

**அருணம காலிங்கத்** திருவரு ளாலிங்குற்
றடிதொழ வேதந்திப் -பொழுதேநா
லருமறை யோதும்பொற் ✱பிடைமரு தூர்நின்றெற்
கருள்ரம **ணனந்தப்** -பெருமானே

---

✱ திருவிடைமருதூர் சிவசந்நிதியிற் பாடியது.

# 29. உச்சிட்டம்

தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன
தத்தத்தத் தத்தத் தத்தன - தனதான

இராகம் : செஞ்சுருட்டி தாளம் : ஆதி

**உச்சிட்டத்** துக்குப் பறபலர் நத்திக்கைக் கெட்டிப் பெற்றிட
உச்சிச்சுட் டுப்பட் டப்பகல் - வெயிலூடே
ஒப்பித்தற் பொற்பெத் தப்பொதி வைத்தத்திற் பெற்றுக்
கொட்புக
முக்குக்குற் றப்பட்டப் பொழு - தினுமேலாய்

மெச்சித்தொட் டுப்பெற் றுக்கணி லொத்திப்பொத்
தித்தித் திப்புற
விச்சித்தத் திற்குச் சுத்தியு-மடைநாளில்
மிக்கத்தட் புற்றக் கட்கதி ரிட்டறப்பப் புத்திக் குற்றவென்
மித்தைப்பைத் யச்சித் தத்திலும் - வலைவீசி

சச்சித்திற் புப்பெற் றிக்கினி சற்றெற்கிச் சைப்பற் றிக்கொள
சட்சுத்திட் சைக்குட் பற்றிய - வருளாலே
தர்க்கத்துட் சிக்கக் கற்றுளம் வெட்கப்பற் றிக்கொட் புற்கலே
தப்பித்துச் சற்புத் திப்பெறு - மடியேனை

இச்சித்தற் கெற்கெத் தெத்தனை யற்பத்துர்ப் பற்றெத்தெத்திலு
மெட்கொப்புப் பெற்றச் சிற்றிட - மிலதாக
எற்றிச்செற் றுறபத் தித்தனு வற்றிச்செத் துக்கெட் டற்குளுண்
ணிட்டத்திற் குட்பட்டுய்த்தருள் - **பகவானே.**

---

# IV. கீர்த்தனங்கள்

## 1. ஸ்ரீ ரமண சரித சங்கிரகம்

இராகமாலிகா ('பாவயாமி என்ற மெட்டு) தாளம் : ரூபகம்

**பல்லவி**

**சாவேரி :** தேவதேவன் ரமணேசன் திவ்யசரி தம்கேளாய் (தேவ)

**அநுபல்லவி**

ஜீவபந்த மகன்றிடவே ஜீவன்முக்தி யடையவே (தேவ)

**சிட்டா**

ஸ ரி க ஸ ரீ , ம ப த ப தா ,
ரி ஸ் நி த நி த ப ம க ரி ஸ த
ஸரி மா கரி மப தா பம பத ஸ்ா நித நித பம பத
க்ரி ஸ்தா '' ரிஸ் தா, ,ஸ் தா, ,க் ரிநி தம கரி ஸத
(தேவ)

சரணம்

**(பால காண்டம்)**

நாட்டைக் குறிஞ்சி :-

சிவபெருமான் திருச்சுழியன் செல்வனுஞ்சுந் தரவழகன்
பவமறுகூ டலம்பதியின் பயின்ருடுஞ் சிவபாலன்
புவியிதய வருணேசன் புரணமிளம் பொழுதிருந்தே
தவவிசார தத்வதரி சனம்பதிஞ ருண்டுற்ரேன்.

**சிட்டா**

ம க ஸா , நி த நி ஸா , ரி க ம
நி த மா , க ரி க ம ப க ரி ஸ
நித நிஸ ரிக மநி தநி பத நிஸ் ரித நிஸ் ரிக் ம்க் ஸ்நி
க்ரி ஸ்தா '' ரிஸ் தா, ,ஸ் தா, ,க் ரிநி தம கரி ஸத
(தேவ)

**(துறவுக் காண்டம்)**

தன்யாசி :-

அருணேசன் அன்புடனே யகம்புகுந்த ணைத்திழுக்கத்
திருவருணை வந்தருள்வோன் சிற்சுகசாம் ராஜ்யத்தை
அருணகிரி யான்றரவே ஆளுஞ்சிவச் செங்கோலான்
குருதக்ஷிணை மூர்த்தியெனக் குவலயமே தொழும்பாலன்

**சிட்டா**

நி ஸ கா , ம ப க ம பா , நி ஸ்
ரி ஸ் ரீ , த ப த ப கா , ரி ஸ
நீ ஸக மப கா மப நிஸ் பா நிஸ் க்ரி ஸ்நி தப நிஸ்
க்ரி ஸ்தா '' ரிஸ் தா, ,ஸ் தா, ,க் ரிநி தம கரி ஸத
(தேவ)

**(தவ காண்டம்)**

மோஹனம் :-

உடல்மனங்க டந்தோங்கும் உள்ளமெனும் சிற்சொருபக்
கடலெழுந்த வருளமுதன் கடுந்தவமி யல்பாஞேன்
மடலவிழ்ந்து தெய்வீக மணங்கமழு மவுனமலர்
கடவுளிந்த பூவுலகில் உடலிலுல விடும்வடிவம்

**சிட்டா**

கா , , ப க ரி க ரி ஸ த ஸ ரி
கா , , ப த ஸ் த ப க ரி ஸ ரி
கப கக ரிஸ ரிக ரிரி ஸத ஸரி கரி கப கப தப தஸ்
க்ரி ஸ்தா ,, ரிஸ் தா, ,ஸ், தா, ,க் ரிநி தம கரி ஸத
(தேவ)

**(ஆசிரமக் காண்டம்)**

முகாரி ஃ-

குருமூர்த்தம் செம்பவளக் குன்றிலுமா மரக்குகைபின்
விருபாக்ஷி யருட்குகையும் விளங்குயர்கந் தாசிரமம்
அருளான்ம ஜோதிவீசி அன்னைக்கும் முக்திதந்தோன்
குருவாயெம் மதத்தாருங் கும்பிடுஞ்சீர் கோமானே

**சிட்டா**

பா , , ம க ரி ஸா , நி த ஸ ரி
மா , , க ரி ஸ ரி ம ப ம நி த
ஸா ஸ்நி தப பா மக ரிஸ நித ஸரி மப நித மப தப
க்ரி ஸ்தா ,, ரிஸ் தா ,ஸ் தா, ,க் ரிநி தம கரி ஸத
(தேவ)

**(உபதேசக் காண்டம்)**

பூர்விகல்யாணிஃ-

ஞானமயத் தனையறிய ஞாலமுண்மை நலம்பெறவே
மோனவருள் தீக்ஷையுடன் மோகனக டாக்ஷமுந்தன்
ஞானமொழி வாயாலும் நல்குமண்ணு மலைநாதன்
வானவரோ டுலகர்போற்றி வணங்குமிவ் வருள்ரமணன்

கா , ம க ரி ஸ த ஸா , ரி க ம
பா , , த ப ஸ் நி த ப ம க ரி
கம பமா ,ப கா, மரீ க ஸாரி கா ,ம பத பஸா நி
க்ரி ஸ்தா ,,ரிஸ் தா, ,ஸ் தா, ,க் ரிநி தம கரிஸ த
(தேவ)

## (விதேக கைவல்ய காண்டம்)

மத்யமாவதி ஃ-

அடியவருக் கெளிவந்தே அதீதாசி ரமியாகி
கொடியரென்று மகற்ருத வருட்கோமான் தவசீமான்
முடிவிலுடற் றிருவுருவம் முடித்துமென்று மெம்போன்ற
அடியருளத் தான்மாவா யமர்ந்தொளிரும் சிவரமணன்

**சிட்டா**

ரீ , ம ரி ம ப நீ , ப ம ப நி
ஸ்ா , , ரி ஸ் நி ப ப ம ம ரி ஸ
மத்ய ரீ பம நிஸ ரிஸ ரிம பா
பூர்வி தப ஸ்ா நித நித பம கரி
முகாரி ஸா நித ஸரி மகா, ,ரி ஸரி
மோஹ கா தப கரி ஸரி கப தஸ்
தன்யா ரீஸ்தா ,ப தப கா ரிஸ
நாட்-கு நிஸ மக மநி தநி பத நிஸ்
சாவேரி க்ரி ஸ்தா ,, ரிஸ் தா ,ஸ் தா, ,க் ரிநி தம கரி ஸத
(தேவ)

# 2. அன்பே வடிவமாஞய்

இராகம் ஃ பிருந்தாவனசாரங்கா தாளம் ஃ ரூபகம்

(ஸ்ரீ ரங்க புர விஹாரா .... என்ற மெட்டு)

அன்பே வடிவ மாஞய் - அருஞசல
நாமாம்ரு தானுபவ ஞானமெய் (அ)

**அநுபல்லவி**

என்புநெக் குருகிசிந்தை எண்ஞு துயர்பே
ரின்பா ழிமுழுகி யிணைந் திருந்த
ஊன பந்தம் மறந்த பரந்த
ஒளியாய் சாந்த நிர்த்வந்த (அ)

**சரணம்**

தன்ப தங்கள்புக லடைகின்ற வெம்மை - சிவ
நன்ப தமுறச் செய்யும் ரமஞு - அருள்
சுந்தர முகதே வாகுரு தேவா
என்போ லியரைப் பொன்போல் மிளிர்
வெய்தகண் ணேக்க முதவியிஷ்ட தெய்வமாய்
முன்போ லமல இதயமு ளரிவிரிந் தசல
மோன சங்கமமு டிந்தவி டிந்த - நிலே
ஈந்தருள் கரமஞனந்த வேந்தசற் குருபர நின்றன்
பூந்தாள் புகலா யடைந்து போற்றுமென் னுளங்கவர்கின்ற
(அ)

# 3. கிரிவலம்

இராகம் : தோடி | தாளம் : ஆதி

**பல்லவி**

வலம் வர வேண்டு மையே - என்
மனதைக் கவர்ந்த அண்ணு மலையைத் தினந்தினமும் (வ)

**அநுபல்லவி**

நலந்திகழ் ஞான ரமணபி ரான் ஓர்வி
நாடிவிலகாத ஞான மலையை நானும் (வ)

**சரணம்**

1. கலந்த சிவஞானக் காதற் பெருக்காலே
கடவுள் ரமணகுரு கழலடி தன்னுலே
மலர்ந்த விழிமலர்கள் மலைச்சிகரம் மேலே
வைத்து வலம்வந்தகார ணத்தை நினைந்ததனுலே (வ)

2. அமரர்இறை முனிவோர் அரியயன் தேவியர்கள்
அறுமுகன் ஐங்கரனும் அடியவர் புடைசூழ
இமயமலைமகளே இம்மலையை வலம் வந்தே
இடதுபா கமடைந்தால் என்போன்ற அடிமைகள் (வ)

# 4. இறைவன் திருநாமம்

**பல்லவி**

இறைவன் றிருநாமம் - ஒன்ருற் - இயலாததுமுண்டோ உலகிலே (இறை)

**அநுபல்லவி**

மறையும் அஞ்ஞானம் - உள்ளே
மலரும் சிவஞானம் - எங்கும்
நிறையும் அருளன்பும் - வாழ்வில்
நிலவும் பேரின்பம் - எனவே (இறை)

**சரணம்**

1. பிறவா திறவாதே - வாழும்
பெருவாழ் வடைவாகும் - ஏதும்
பிறவா யறியாதே - யெல்லாம்
பிறங்கும் நிலையீதே - அதனல் (இறை)

2. உணர்வா யிதுபோதே - மறுத்தே
யுளறித் திரியாதே - என்றும்
எனவே அருணேசா - ரமண
இனிநீ மறவாதே - சொல்வாய் (இறை)

# 5. குரு ரமணய நம

பல்லவி

குரு ரமணய நம வென்று
குழைந்து சொல்வாயா - மனமே
- ஓம் நமோ பகவதே ஸ்ரீ (குரு)

அநுபல்லவி

அருணகிரியே ரமண வடிவாய்
அவதரித்துள்ள சிவனை நினைந்து (குரு)

சரணம்

1. ஒருமுகமாக உள்ளங் குவிந்து
யுருகி யுருகி
அருணாசல ரமண சிவா
அடிமைநானென் றழுது தொழுது (குரு)

## 6. ஓம் நமோ பகவதே

பல்லவி

ஓம் நமோ பகவதே ஸ்ரீ
அருணாசலர மணாய (ஓம்)

அநுபல்லவி

ஞான மஹா குருபராய
நமோ நமோ கிரிவராய
தீன பக்த சுககராய
தேவ தேவ ரமணாய (ஓம்)

சரணம்

ஈனதேக லோகாபி மானமே நானெனதாகி
ஏதுமுண்மை யறியாதே எண்ணிலாப் பிறவியாகி
ஞானதேசிகா முடிவிலுன் பாதமே என் கதியாகி
நானடைந்தேன் மாம்பாஹி ரமணஞான சிவயோகி
(ஓம்)

# 7. தேவாதி தேவ ரமணு

**பல்லவி**

தே வாதி தேவ ரமண
தேவனே நமோ நமோஸ்ரீ (தே)

**அநுபல்லவி**

அருண கிரிநேச வாசா
ஆத்ம சைதன்யப் ரகாசா
கருணு ப்ரவாஹ தேசிகா
குகேசனே மஹேசா
பந்த மறுந்து மனந்தெளி
வந்த வருந்தவ ரின்புற
சிந்தை புகுந்து சுகந்தரும்
சுந்தர நந்தன ஸ்ரீகுரு (தே)

**சரணம்**

ஜனன மரண தீநரகிருள் தீர்க்கும்
ஞான தேஜோ மயனே
நனவில் கண்ட ஞான ரமணனே
மனமணி மணவாடா மலருன்

மலரடிக் கல்லும் பகலுமளிக்கும்
அனன்னிய சரணு கதியருள்வாய்
அருணுசல வருள்வாய் - ஜீவன்
முக்தி யொளிக்கதி ரன்பருள்
மூட்ட வெழுந்த வாதித்தனே
பக்தர்கள் கர்ம விநாசனே
பாஹி பாஹி பரமாத்மனே (தே)

## 8. சாபல்யமே நின் தரிசனம்

இராகம் ஃ குறிஞ்சி தாளம் ஃ ஆதி

('வைஷ்ணவ ஜனதோ' என்ற மெட்டு)

**பல்லவி**

சாபல்யமே நின் தரிசனம் ஐயா
சற்குரு ரமண தேவா - ஜென்ம (சா)

**அநுபல்லவி**

தீபமே நீயிருள் நீக்கிடும் ஞான
தேவ தேவ ரமணேசா - ஜென்ம (சா)

**சரணம்**

நின்னருள் நாமம்எந் நேரமும் நெஞ்சம்
நிறைந்தவர்க் கேதுயர் ஏதென்ன பஞ்சம்
அன்னை யப்பா அருட்குரு நாதா
அருணேசா ரமணா ரமணா - ஜென்ம (சா)

## 9. உன்னையின்றி இல்லை

**பல்லவி**

இல்லை உலகினிலே - உனை
இன்றி யொருபொருளே (இல்லை)

**அநுபல்லவி**

கல்லும் ஜடமயமோ - அதைக்
காண்பவன் கண்டுவிட்டால் (இல்லை)

**சரணங்கள்**

1. எல்லாப் படைப்பினிலும் - நல்ல
தெவை எவை எங்குளதோ - அவை
எல்லாம் உனதணுவே - அதற்
கீஸ்வரன் நீ ரமணா (இல்லை)

2. நாடும் திசையிலெல்லாம் - அருணை
ரமணன் திருமுகமே - என்றால்
காடும் காவியுமேன்? - எங்கள்
கடவுளைக் கண்டிடவே (இல்லை)

# 10. அவரே குருபகவான்!

இராகம் : பியாக் தாளம் : ஆதி

**பல்லவி**

அவரே குருபகவான்-வே
ரூராலும் பயன் ஆவதொன் றில்லை

**அநுபல்லவி**

அவரே குருபரன் அவரே கடவுளர்
அவரே பரம்பொருள் ஆன்மநிலை (அ)

**சரணங்கள்**

1. எவரே யுன்னுன்ம வியற்கையைக் காட்டுவார்
எவருன் றேகான்ம பாவத்தை யோட்டுவார்,
எவர்நீ கீழிறங் காநிலை நாட்டுவார்,
அவரே குரு ! பிறர் எவரருள் கூட்டுவார் ? (அ)

2. சித்தி, புகழ், பொருளோ, தேவ சுகங்களோ,
சேர வரந்தருவர் சித்தர் கணங்களோ !
அத்தனை யும்பெறினு மழியாவின் பங்களோ ?
ஆன்ம வுணர்வளிப்ப(து) யாரருட் கண்களோ (அ)

3. கேட்பதைத் தான்றரும் சுரதரு கற்பகம் ;
கேளா தளிப்பது வோகுரு கற்பகம் !
ஆட்படு வோரகத் தாசை யழித்''தஹம்
அஹ''மெனு மனுபவம் அருள்வது தான்சுகம்! (அ)

4. ஆலயம் தலமென்றே ரயலிட மோடாதே !
ஆதர வவரிவர் யாரையுந் தேடாதே !
பாலையும் பட்டினியும் பழகிநீ வாடாதே !
பரநிலை தருங்குரு பதமன்றிப் பாடாதே ! (அ)

5. எவர்அரி மலரவற் கிடையொளி யானவர்,
எவரொரு நால்வருக் கிருநிழல் மோனவர்,
எவருனை †''இயலறி வின்'' பெனும் வானவர்,
**அவரிதோ! ரமணமெய் யழகுரு வானவர்** (அ)

† இயல் அறிவு இன்பு = சத் சித் ஆனந்தம்

# 11. அவ்வியாஜ கருணை அருணமலை

இராகம் : செஞ்சுருட்டி  தாளம் : ஆதி

**பல்லவி**

காரணம் வேண்டாமற் கருணை மழைபெய்யும்
ஆரண முடிவான அருணமலை-ஏதும் (கா)

**அநுபல்லவி**

நாரணன் ஆரணன் நடுவினிலே - ஆன்ம
சூரிய னுய்வந்து தோன்றுமலை - ஏதும் (கா)

**சரணம்**

1. தாரணை தியானுதி தான்செய்வ தாய்க்கருதும்
தற்போத(ம்) நாணித் தலைகுனிந் தபின்னே
பூரண ஞானமாய்ப் பொங்குமலை-இந்தப்
பூமியின் இதயமாய்த் தங்குமலை - ஏதுங் (கா)

2. ஞானத் தபோதனரை வாவென் றழைத்திருத்தி
ஞாலமுய் விக்கச்செய்யும் ஞானமலை
வானப் பெருஞ்சுகமு மங்கவே பேரின்ப
வாரியா யிதயத்துள் ளூறுமலை - ஏதும் (கா)

3. ஊனு ருடலிலபி மானுதி மோகங்கொண்ட
ஈன வகந்தைமன இராவணன்முன்
நானு ரெனுங்கோதண்ட **ரமணனாய்** ப்ரம்மாஸ்த்ர
நாத மெழுப்பும்சிவ ஞானமலை-ஏதுங் (கா)

# 12. அந்தப் பெருந்துணே

**பல்லவி**

அந்தப் பெருந்துணே இந்த வருணுசலம்

**அநுபல்லவி**

எந்தப் பரம்பொரு ளாலுயிர் மூச்சும்
இந்த வுடலி லியங்குவதோ ... (அ)

**சரணம்**

1. தந்தையர் தாயரி னன்பும் பின்படுஞ்
சொந்தமு டன்நமை வந்து புரந்திடும் (அ)

2. முந்தைப் பிறவிகள னந்தமு நம்மைத்தொ
டர்ந்து பரிந்தருள் தந்து வளர்த்திடும் (அ)

3. சிந்தை யெழுந்து முனேந்தலே யாதுளத்
தந்தர் முகப்பட தந்திர மாயருள் (அ)

4. அந்த மிகுந்துல கந்தரு மாசையாற்
பந்த மழுந்திடா தெந்தமைக் காத்திடும் (அ)

---

# 13. அஞ்ஞாதி சுகார்ணவம்

இராகம் ஃ கீர்வாணி                                                    தாளம் ஃ ஆதி

**பல்லவி**

அஞ்ஞாதி சுகார்ணவமே ரமஞ்ஞா
ஆரணன் மால்முன்னஞ் ஞாமலேயான (அ)

**அநுபல்லவி**

தஞ்ஞாதியல்பே ரருளால் அருஞ்ஞா
சலாலயமே வியமா னிடனே (அ)

**சரணம்**

1. மஞ்ஞாதியில்லா வழியே வகுத்தாய்
மதவா தியர்வாய் களைமூ டவைத்தாய்
கஞ்ஞாநன வுண்மையைக் காண வைத்தாய்
கருஞ்ஞா நிதிநீ குருவா யுதித்தாய் (அ)

2. அருஞ்ஞா சலமே யகலா தவனே
அடியார்க் ககலா புகலா னவனே
அருளா லெனையா ளுடையாண் டவனே
அகநா யகஸா ஹஸநா டகனே (அ)

# 14. ஞான சுதந்திரன்

**பல்லவி**

ஞான சுதந்திரனே - ரமண - ஞானசுதந்திரனே

**அநுபல்லவி**

நக சிகையளவும் பரசிவமெனவே
விகசித குருபர அகசுக நடண (ஞா)

**சரணம்**

1. புவியகங் கொண்ட சிவகுருபரனே
பவமறு வோரகக் கமலபாஸ் கரனே
விளங்கும் கௌபீன அலங்க்ருத தரனே
களங்கமில் அடியவர் உளங்கவர் வரனே (ஞா)

2. நினைப்பவர் முன்பவ வினைச்சுடும் ஹரனே
எனைத்தரும் எந்தைஎன் அனைக்குரு பரனே
மதிலய மாக்கும் இதயசூ ரியனே
அதிதய யாலென திதயசஞ் சரனே (ஞா)

3. தத்பத போதக அத்புத பலனே
சத்குருவே அருள் சித்தஅம் பலனே
பாபவி மோசன சோபன பதனே
தாபமி லாவுளத் தீபசுந் தரனே (ஞா)

4. தன்னி லடங்கிடும் பன்னகா பரண
சன்னிதி யாற்சுகம் தருமருட் சரண
மன்னரு ணசல பொன்னிற பவண
என்னருட் குருவுரு மன்னவ ரமண (ஞா)

5. கூவிடு மன்பர்தம் ஆவியி ணர்த்தி
ஸ்ரீ அருணசலக் கோவிலின் மூர்த்தி
ஆதிச தாசிவ நாதஸ்ரீ ரமண
மாதவன் அயன்உளப் போதக ரமண (ஞா)

# 15. ஸ்ரீ ரமண சாந்தி சக்தி

இராகம் : நாட்டை                                                          தாளம் : ஆதி

**பல்லவி**

ஆற்றலின் சின்னம் பேரமைதி - பேர்
அமைதியின் விளைவே பேராற்றல் பே-ராற்றலின்

**அநுபல்லவி**

காற்றினும் வலிமையன் கதிரினும் ஒளிர்மையன்
வேற்றுமை போய்அகம் நோற்ற **ரமணனிடம்** (ஆ)

**சரணம்**

1. கூற்றனை மாற்றிய கூத்தனும், அரக்கர்
குலஹர சியாமளக் கோதண் டனும்ஞானத்
தேற்ற மளித்தகுரு தக்ஷிணா மூர்த்தியும்
சேர்ந்து திரண்டபரி பூன்ற **ரமணனிடம்** (ஆ)

2. **சாந்திய தேயுண் மைக்கிற் சக்தி புறநோக்கில்**
**ஆய்ந்தறிந் தா**லுண்மையில் **அவை**யிரண் டும்**ஒன்**
(றெனத்
தீர்ந்த முடிவுரைத்த **தெய்வ ரமணனிடம்**
சிவபராக் ரமமாய்த் திகழ்ந்த ப்ரம்மானுபவ (ஆ)

# 16. எது பெரியது ?

இராகம் : காபி　　　　　　　　　　　　　　　　　　　　தாளம் : ஆதி

**பல்லவி**

கொடுத்தவன் பெரிதா? அல்லதிந்தக்
கொடைப் பொருள் பெரிதா?

**அநுபல்லவி**

கொடுத்த வன்றனை விடுத் துடலுல
கடுத்த திற்சுகம் பிடித்த லைகிறாய் !　　　　　(கொ)

**சரணம்**

1. கொடுத்த தெத்தனை நாள்? - அதிலேயுன்
　　கொட்டமு மெத்தனை நாள்?
கொடுத்த தென்னத்தி னால்? - அதைக்கண்டு
　　கொள்ளாத தென்னத்தி னால்?
கொடுத்த வன்றனை யடுத்தி டிற்பின்னுங்
　　கொடுப்பன் முன்னிலும் சிறப்பை யாதலால்　　　(கொ)

2. மண்ணினால் ஓர்பதுமை - உனக் கன்னை
　　வாங்கிக் கொடுத்திருந் தாள்
கண்ணுக் கினியததை - விடவன்னைக்
　　காதல் பெரிதல்லவோ?
உண்ண வழைக்கிறாள்! -ஓடி வராமலிம்
　　மண்ணைக்கொண் டாற்பசி வந்தத டங்குமோ?　　(கொ)

3. கொடுத்த வன்றனையே - விடாது நீ
　　கூவித் தொழுதிருந் தால்
கொடைப் பொருளெனவே - தன்னையே
　　கொடுத்து நின்றருள் வான்!
கொடுத்த ரமணன் அடுத்து லகுடல்
　　விடுத்தி டாதென்ன மடத்த னம்மிது?　　　(கொ)

---

# 17. நினைவு ஏனோ?

இராகம் : நாராயணி தாளம் : ஆதி

**பல்லவி**

எந்த நினைவும் இனியேனோ ?
ஏற்றவ னினிக்கை விடுவானோ ? (எ)

**அநுபல்லவி**

தந்த வுடலுக் குடை யிடமோ
தாகம் பசியிற் குணவுகளோ
எந்த விதமு மீந்தருளல்
இறைவன் ரமணன் கடனன்றோ (எ)

**சரணம்**

1. பந்த மினிமேல் வாராமல் பதித ருறவே சேராமல்
எந்த விதமு முனைக்காக்க இறைவன் ரமண னறியானோ?
தந்தை மடிமேல் வாழ்சேய்நீ தளர்வுக் கிடமுந் தரலாமோ?
(எ)

2. இன்ன வுடல்நீ இதுநீயென் றெனது நானென் றினியேது?
என்ன விதமாய், எதுநாடி எண்ண முடியும், மனமேது?
உன்ன வுரிமை யுனக்கேது ? ஒருவன் **ரமணன்** உளபோது?
(எ)

# 18.எப்போது நீ அறிவாயோ

இராகம் ⁝ சாவேரி　　　　　　　　　　　　　　தாளம் ⁝ ரூபகம்

**பல்லவி**

எப்போது நீயறி வாயோ மனமே
அப்போதே சாந்தி யடைவாய்-இதை　　　(எப்)

**அநுபல்லவி**

இப்பாரி லெப்போதும் எல்லா மிறையருளால்
தப்பா தணுவளவுஞ் சரியாய் நடப்பதாக　　　(எப்)

**சரணம்**

1. முற்போது தர்மமென்றும் தற்போ ததர்மமென்றும்
முயன்றேசீர் திருத்திட முடியுமுன் ஞலேயென்றும்
அற்பாகந் தைச்செருக்கால் அலேயாம லேயடங்கி
ஆண்டவன் ஆட்சியில் அதர்மமே யில்லேயென்றே　(எப்)

2. ஜீவர் மனதேகத்தால் தெரிந்துந் தெரியாமலும்
செய்யுங் கர்மங்கள்நன்ருே தீதோ தீர்மானஞ்செய்தே
பாவ புண்ணியங்களின் படியே யவரவர்க்கும்
பலன்தருங் காலதேசம் பகவா னறிவாரென்றே　　(எப்)

3. எழுந்தவுன் னெழுச்சியா லெண்ணம் செயல்சொல்லாக
இயற்றிய கர்மமெல்லாம் இறைவனே நீங்குவதே
அழுந்தி யகமூலத்தி லகந்தை யழிவதொன்றே
அரிய க்ருதக்ருத்திய ஆன்மானு பவமென்றே　　(எப்)

---

# 19. ஞானத் துயில்

இராகம் : பியாக் தாளம் : ஆதி

**பல்லவி**

தூங்கி யிருந்திடுவாய் ! - சிறிதும்
தோஷமில்லை ! துணிவாகத் - தூங்காமல் (தூ)

**அநுபல்லவி**

தோன்றி மறையுலகம் சுத்தமித் தையிதனை
யூன்றிக் கவனியா துள்ள டங்கிநீ (தூ)

**சரணம்**

1. தீங்கும் புரளியும் திளைத்த விவகாரம்
ஓங்கு முலகிலுனக் கொன்றும் வேலையில்லை !
ஏங்கிநீ யிதனி லிச்சைவை யாமலே
ஆங்குன் னிதயகுகை யண்டி யனவரதம் (தூ)

2. சீர்தி ருத்தமெனச் செப்பிப் பலர்கூடி
ஊர்பெ ருத்தவொலி யோங்கக் கூச்சலிட
வேர் பறித்தமர மேலி ருப்பரிவர் !
ஓர் பதற்றமுமில் லாமல் நீயுன்னுள்ளே (தூ)

3. கானல் நீருக்கணை கட்டுவா ரிவர்கள் !
ஆன முயற்கொம்புக் கழகு பூசிடுவார் !!
வான மலடிமகன் வாழ்க வாழ்கவென்பார் !!
ஞானம் வேண்டில்புவி நாட்ட மறவோய்ந்து (தூ)

4. தன்னை மறந்தவர்கள் தரணி நினைந்துருகி
மன்னும் பெருமுயற்சி ! வானைத் தாங்குவார்போல்
உன்னை யறியாதிந்த வுலகை யறிவையோநீ
என்ன செய்யினும்பய னில்லை யிதைமறந்து (தூ)

5. உள்ளமல் லாமலிந்த வுலகம் வெளியிலில்லை !
கள்ள மனமயக்குங் காட்சி யுலகமயம்!!
தெள்ளத் தெளியவுன்னைச் சிந்தைய டக்கிக்கண்டு
**உள்ளத் தமர்வதொன்றே யுண்மைக் கடனதனால்** (தூ)

6. ''பெரிய மனித'' ரென்ற பெயரு ''மவர்போல்சேவை
புரிவ ரில'' ரெனும்வீண் புகழும் இவைகளெல்லாம்
அரிய தில்லையதனு லமைதி யுடன்விழித்தத்
துரிய நிலையில்ஜாக்ர சொப்ன சுழுப்தியற்றுத் (தூ)

7. உன்னைப் படைத்தவனே யுலகைப் படைத்தவனும் !
உன்னை ரக்ஷிப்பவனே யுலகை ரக்ஷித்திடுவான்!!
**உன்னை முதலிலறிந் துள்ளவன் மயமானால்**
**உன்னால் உன்னிலுலகம் உபகார மாம்!**அதனால் (தூ)

8. கண்ணை யிழந்தோன்பிறர் கையைப் பிடித்தழைத்துத்
திண்ண முடனேவழி காட்டத் தெரிந்தவன்போல்
மண்ணி லிருக்குங்குழி வாயிடை வீழ்ந்திறந்த
வண்ண மழியாமலுன் வாய்மை நிலையறிந்து (தூ)

9. தன்னை யறியாமுன்னம் தரணி பெரிதாய்த்தோன்றும்!
தன்னை யறிந்தபோது தரணிதன் மயமாகும்!!
தன்னை யுய்வித்தலொன்றே தரணிக் குபகாரம்!!!
தன்னை யறிந்தான்ம சத்ய நித்யநிலையில் (தூ)

10. போனது புகுவதிற் புத்திசெல் லவிடாமல்
மோனமு டனமர்ந்து முக்தி யருளவந்த
**ஞான குருரமண நாதனி னருளினால்**
**நானென தென்பதின்றி ஞான சமாதியில்** (தூ)

# 20. குருசொற் புரியாக் கூட்டம் !

இராகம் ៖ தன்யாசி

தாளம் ៖ ஆதி

### பல்லவி

குருசொற் புரிந்து கொள்ளாக்
கூட்ட மிந்த வையகத்தில்
அருளை யடைந்தோர் நாவை
யசைப்பதே யில்லையடீ ! (குரு)

### அநுபல்லவி

'ஒருசற் பொருள்நீ' யென்றும்
'உண்மையொன்றே யுள்ள'தென்றும்
'இருஅப் படிக்கே!' என்றால்
என்னென்னவோ கேட்பாரடீ! (குரு)

### சரணங்கள்

1. 'மலடி மகன்றனக்கு மணவினை என்றைக்கென்று
சொலடி குறத்தி'யென்றால் ஜோசியம்தான்
என்ன சொல்வாள் ?
'உலகைத் திருத்தும்வழி ஓதும்'என் றேகேட்பார் !
'உன்னை யறிக'வென்றால், 'ஒவ்வாத விடை'யென்பார்!!
(குரு)

2. 'வருங்காலச் செய்திகளை வாய்திறந்து சொல்லு'மென்பார்
'மரணத் திரைக்குப்பின்னே மனிதன்எப் படி?'என்பார்!
'ஒருங்கே நிகழ்காலத்தின் உண்மையினைக் காண்க'வென்றால்
உள்ளம் பொருந்தார். 'இவர் ஒன்று மறியார்'என்பார் !!
(குரு)

3. தன்னை யறிந்துகொள்ளச் சக்தி யில்லாதபோது
ஜகத்தையும் ஈசனையுந் தானறிய வேண்டுமென்பார்!
'உன்னை யறிந்தாலன்றி யுண்மை விளங்காதென்றால்
'என்ன பதிலி'தென்றே ஏளனம் செய்தகல்வார்!! (குரு)

4. ''நீயுமில்லை; நானுமில்லை நீளுலகக் கூட்டமில்லை !
தூயபர ஞானமொன்றே சும்மா விருக்கின்றது !
ஓயமனம் உள்ளத்திலே உள்ளேதிரும்'' பென்றாலோ
'ஆயும் விசாரம்மிக ஆயாச மென்றகல்வார்!! (குரு)

5. ''மனமடங் கமுயலோம்; வந்தனைகள் செய்யோம் ; சும்மா
கனவின் விழிப்பதுபோற் கைவல்யம் வேண்டும்'' என்பார்
'முனமொன்றும் செய்தறியோம் மூண்டதருள் தானேயென்(று)
அநேகர் மொழிந்தார்'என்றால் ஐயமறச் சம்மதியார்!!
(குரு)

## 21. யாரோ பாராய்!

இராகம் : காபி தாளம் : ஆதி

**பல்லவி**

யாரோ பாராய் அனுதின முன்னுள்ளே
அகமக மெனநடமே - இடும் பொருள் (யா)

**ஸ்வரங்கள்**

ஆடுபவன் - யாரோ பாராய்
அறிவுருவன் - யாரோ பாராய்
அருணகி ரிரமணன் - யாரோ பாராய்
ஏக ஞக ஆடு பவனவன் - யாரோ பாராய்
ஏக ஞகு மேல றிவுருவன் - யாரோ பாராய்

**அநுபல்லவி**

நேராய் நனவிலும் நித்திரை கனவிலும்
பேரா தத்யந்தப் பிரியமா யிருப்பவன் (யா)

**ஸ்வரங்கள்**

மறையா வுதியா மகிழ்வா யிருப்பவன் (யா)
மறந்தும் நினைந்தும் அசைந்தி டாதவன் (யா)
இரவும் பகலு மிமையு மகலா திருப்பவன் (யா)
தத்துதிரை யொத்தமனச் சித்திரம்வி ரித்திடுபவன் (யா)
தத்துதிரை யொத்தமனச் சித்திரம்வி ரித்திவ்வுல
கத்துருநி லைத்துலவும் அத்திரையெ னத்திகழ்வோன் (யா)
ஜனனமு மரணமு மெனுமிரு நிலையிலும்
மனமுதி லயவினை மருவிடா திருப்பவன் (யா)
விடுபட் டடுமுட் டடைகெட் டுடலுள்
நடமிட் டிடுமக் கடவுட் டிருவுரு (யா)

**சரணங்கள்**

1. நேரமெல் லாமும்சம் சாரவு லகவிவ
காரம முந்திற்பிழை யாருடை யது?நமன்
சேரவ ருமுன்குரு ஸ்ரீரம ணன்தந் த**நான்**
**யாரெனு** மான்மவி சாரந யனங்கொண்டு (யா)

2. மாலய னிடையழற் கோலமு டனெழுந்தான்
ஆலஹா லமுண்டோர் ஆலடி வீற்றிருந்தான்
சூலபு ரத்திற்குரு தூலமு டனெழுந்தான்
மேலவன் உனக்குளெக் காலமு மிருப்பவன் (யா)

# 22. நானெனும் பொருள் நீ!

("வைஷ்ணவ ஜனதோ" - என்ற மெட்டு)

**பல்லவி**

நானெனும் பொருள்நீ நாதா ரமண - மெய்ஞ்
ஞானமெய்தி மனம் போ ண லே (நா)

**அநுபல்லவி**

நாணரோவென நாடிடும் போதே
நாடுவோன் மய(ம்)நீ ஞா னே சா (நா)

**சரணங்கள்**

1. கருணையா லென்னைக் காக்குங் குருநீ
கதிவே றென்றுங் கா ணே னே
அருணா ஜோ திரம ணே சா நின் பேர்
அருளினு லடிமை யா னே னே (நா)

2. மனமி றந்தநிலை யெய்திட வென்றால்
வல்லதோ சிறிது மா கா தே
தின மி றைஞ்சுமெனைத் திருவருள் நினைந்தால்
சிறிதுமே சிரம மா கா தே (நா)

## 23. நானே அதிகாரி !

இராகம் ꞉ ஜோன்புரி தாளம் ꞉ ஆதி

**பல்லவி**

நானே வதிகாரி - ரமண - நாத னிருக்கையில், ஏதிலுமே (நா)

**அநுபல்லவி**

சாதனை புரியவும் தலைவனை யறியவும்
ஏதொரு சுதந்திரமே ! - அதாலே (நா)

**சரணம்**

1. தீதிது நலமிது வெனத்தெளி யேனே
சிற்றறி வினனே - ஆசானே
சேதனு! அசேதனு! சிறுதுரும் பசைவதுன்
திருவருட் செயலல்லவோ? - அதாலே (நா)

2. இத்தனை ஜன்மமாய் நானெனச் செய்தவை
யெல்லா மழிவாக - ரமணு
சத்திய குருநீ தாங்கிட வந்தபின்
சகலமு முன்பொறுப்பே! - அதாலே (நா)

3. தந்தைதா யிருக்கையில் தனக்கென்ன பயமோ?
சற்குரு வுருவோடே - தயாளுவாய்
வந்தஸ்ரீ ரமணதாய் தந்தைநீ யிருக்கையில்
மனமுடல் வாக்கிவையே - வசம்செய்ய (நா)

4. யார்கரஞ் சேர்கயிற் றுற்பரி யோடுமோ,
தேர்செலுத் துவனுரோ - நானுரோ
நீயவ னல்லவோ நிறுத்திட வெணிநீ
நினைந்திடி லசைவேனே ! - போவேனே ! (நா)

5. குருவரு ளலதெனக் கொருவலி விலையெனக்
குருவுமைச் சரணுனேன் - இந்நானே
திருவருட் கருணையாற் சிறியவனெ னக்கினி
சென்மமே யொழிந்தாலும் - வந்தாலும் (நா)

## 24. ரமண பகவானருள்

இராகம் : கல்யாணி தாளம் : ஆதி

**பல்லவி**

ரமண பகவான் அருளே நம்பினேன்

**அநுபல்லவி**

கமலநயனு கருணைரமணு-காமக்ரோதமோ காதிநீங்கவே
(ரமண)

**சரணங்கள்**

1. அகமகமெனும் சுகஸ்புரணமே
அநுபவமெதோ அதையருள்கவே
பகலிரவிலாப் பரமவெளியே
பானுகோடிகோடி தானுமிணையிலா (ரமண)

2. வினைமுதலெனும் மனமழியவே
விலகிமயலே விமலமுறவே
தனையறியுமோர் தவநிலையிலே
சாந்திசாந்திசாந்தி சகஜமுறவே (ரமண)

3. எவருமயலார் இலையெனும்விதம்
இருமையறவே இதயமுறவே
சிவமயமிதே அநுபவமதாய்
தீனனுமெய்தி திரமடையவே (ரமண)

4. கடுகளவெனும் சுடுமொழியிலாக்
கனியமொழியும் வினயமுறவே
நடுநிலைவிடாத் திடமடையவே
நானெனதிலாத ஞானமடையவே (ரமண)

5. அருணமலையை யகலவியலாப்
பிரியமுறவே பிறவியறவே
திருவருளினற் றிகழறிவினல்
தேஹம்நாஹம்கோஹம் ஸோஹமாகவே (ரமண)

---

## 25. எந்நாளும் உன்னருள்

இராகம் : சகாண தாளம் : ரூபகம்

### பல்லவி

எந்நாளு முன்னருள் எனைக்கை விடாதென்றே
இருக்கின்றேன் அருள்வாய் அருணசலா (எ)

### அநுபல்லவி

அந்நாள் உனைக்காண அருள்செய்த ரமணனே
பின்னள் நீகைவிட்டாற் பெருங்கரு ணைக்கழகோ (எ)

### சரணம்

முன்னளிற் செய்கர்ம மூவா சனைகளை
மூலமோ டழித்திட முறைசெய்தேன்
அன்னையென் னுருயிர் அப்பாவென் றழைக்கின்றேன்
இந்நாள்நீ இரங்காயேல் என்செய்வே னென்
செய்வேன் (எ)

---

# 26. நின் பேரருள் வேண்டும்

**பல்லவி**

நின்பே ரருள் வேண்டும் - இறைவா
நிஷ்டையிலே நழு வாது நிலைத்திட (நின்)

**அநுபல்லவி**

நீசமனம் - அக - நாசமடைந்திட
நீசமனம் - பரி - பாகமடைந்திட (நின்)

அன்பே அருணேசா - அகலாத
இன்பே ரமணேசா - இடைவிடாமல் (நின்)

**சரணம்**

1. என்போல் தெரியுமொரு நிழலுடலை மீண்டும்
ஏனன் எனத்தொழுவேன் - இறைவா
முன்போல் இயலறிவாய் - உபாதியால்
மூடாப் பரசுகமாய் - உலாவிட
- விளங்கிட (நின்)

2. கோடி சாதனைகள் தராத தோர்
கூடம் அறிந்து கொண்டேன் - அகத்தினுள்ளே
நாடி யுனதருளால் அலாதெவர்
ஞான சுக முணர்ந்தார் - குருபரா
- அதனாலே (நின்)

# 27. ஸஹஜ சமாதி

இராகம் ‡ நாட்டை  தாளம் ‡ ஆதி

**பல்லவி**

ஸஹஜ ஸமாதியருள் - புரிவாய்
தன்னையல் லாதொன்றும் அன்னியங் காணுத (ஸ)

**அநுபல்லவி**

அகமுக மேயாகி ஆனந்த நிறைவாய்
ஆன்ம வடிவான மோன முடிவான (ஸ)

**சரணம்**

1. இகபர லௌகீக இன்பமெனுந் துன்ப
ஈஷணத்ரய விசேஷ நாசமுற
பகிர்முக மாகாத பரமசுகிர்த சிவ
பக்தியின் வடிவான முக்தியனு பவமான (ஸ)

2. குருவழியே சென்றோர் திருமொழியே நின்று
கோஹ மந்த்ரசிவ போக மருந்துண்டு
அருவுருவாய் சச்சித் தானுப வங்கண்டு
ஆத்ம சுதந்த்ரசாம் ராஜ்யப தங் கொண்ட (ஸ)

# 28. ஆன்மக் கல்வி

இராகம் : மோஹனம் தாளம் : ஆதி

**பல்லவி**

அதைக் கற்றுக் கொடுங்க ளப்பா ரமணப்பா
அதைக் கற்றுக் கொடுங்க ளப்பா !

**அநுபல்லவி**

விதிக்கும் வலிய, வருட் கதிக்கு முரியதாக
எதைக்கற்றுக் கொண்டாலெனக் கினிப்பிற விவராதோ (அ)

**சரணங்கள்**

1. உதிக்கும் உடலுடனே யுலகிற் பிறந்துபிறந்(து)
ஒவ்வொரு பிறவியும் உதவா திறந்திறந்தே,
மதிக்கெட்ட வனுயென்றன் வாழ்வை யிழந்திழந்தே,
எதைக்கற்றுக் கொள்ளாததா லிப்பிற விவந்ததோ (அ)

2. ''விடுத்துல கைத்துறந்து வேட்கையெல் லாமழிக்க
வேண்டு''மென் றேபலவாய் வேதாந்த நூல்களிலே
படித்துப் படித்தும்வெறும் பரோக்ஷஞா னமே;அநு
பவநிலை யிலேகற்றுப் பயனடை யும்படிக்கே (அ)

3. எதைக்கற்றுக் கொண்டாலினி யின்பதுன் பமில்லையோ,
எதைக்கற்றுக் கொண்டால்வாழ்வில் என்றும்ப யமில்லையோ,
எதைக்கற்றுக் கொண்டாலன்றி யென்றுஞ்சாந் தியில்லையோ
எதைக்கற்றுத் தரகுரு வுருவெடுத் துவந்தீரோ (அ)

4. படிப்பறி வறியாத பரமஹம் சருமென்றன்
பகவான் ரமணுஇளம் பருவம திலுந்தாங்கள்
**குடிக்குங்கஞ் சிப்படிப்பைக் குப்பை எனவே தள்ளிக்**
குறையாஞா னமாய்க்கற்றுக் கொண்டகல் வியெதுவோ (அ)

5. உருக்கும் உலைநெருப்பாம் உலகவெ றிக்கிடையில்
ஒருக்கண மும்விடாத உண்மைச் சுகத்துடனே
இருக்கும் படிக்கேகுரு இறைவன் அருணுசலன்
**எந்தை ரமணுவுமக் கெதைக்கற்றுக் கொடுத்தாரோ** (அ)

---

# 29. என்ன எண்ணமோ

('மநு விநால கிம்...' என்ற மெட்டு)

**பல்லவி**

என்ன எண்ணமோ - ஈசா - என்பால்
எண்ணி யுள்ளனே - எந்தையே ரமணு (என்ன)

**அநுபல்லவி**

உன்னை யன்றி என் உள்ளம் ஓங்குமோ?
பின்னை என்ன வன்மம் பிள்ளை யென்றன் மீதே (என்ன)

**சரணம்**

1. முன்னைக் கன்ம மெல்லாம் மூண்டெழவும் சாக்ஷி
மோனம் கொண்டு நின்றால் மூள்வதென்னவோ
என்னை யானிடர எந்தைகாண் பையோ
அன்னை தந்தையான அனாத ரக்ஷகா (என்ன)

2. தேவ நின்னிடம் என் தேட்ட மென்னவோ
தீனனென் னிடம்அத் தேட்டமுள்ள முள்ளதோ
மாவறிஞ னிடம் வைரமுண்டோ வென்றே
வந்து வழக்காடல் வள்ளல் நெஞ்சமோ (என்ன)

3. உன்னருள் உண்டென்ற உணர்விலாதா னன்றி
உண்மை யானதீனன் உலகில் எவன்தானோ
என்னை நின் னடிமை என்றுணர நீயே
இன்னருள் ஈயாமல் லின்னும் மௌன மேனோ ? (என்ன)

---

## 30. அழகாகுமா?

இராகம் ஃ கானடா தாளம் ஃ ஆதி

**பல்லவி**

அழகாகுமா அருணா சலா வுனக் கழகாகுமா - கொடி
யாரெனக் கேயிடை யூறுசெய் தாலுனக் (கழகா)

**அநுபல்லவி**

தொழுமடியார் வாழ்வில் துன்ப மிழைப்போர்களின்
சூதுவன்மையடி யோடழித்தருளாற் பாதுகாத்தநீயிப்
போதெனைக்கைவிடல் (அ)

**சரணம்**

கழுமரம் எரியவும் கடலிற்கல் மிதக்கவும்
கனலும் நீற் றறைதென்றல் காற்றெனக் குளிரவும்
முழுக மதுரை வைகை முழுவெள்ளம் பரவவும்
முன்னம் பெருங்கருணை மூண்டெழுந் தடியவர்
நினைத்த கணத்தி லரக்கர் பலத்தை
நெறித்த பயத்தைக் கொடுத்தவா - உனை
நினைத்து லகத்தொ ருடற்குள் வசிக்கும்
எனக்கினி ரக்ஷையளிக்கவா

பழவினை யிடர்தர பகிர்முக முறுவதைப்
பரமக ருணையினால் நிறுத்துவாய்
பகலிர வறவக மேநிறுத்துவாய்
பரமசொ ருபமதிலே யிருத்துவாய்
குருரமணா கிரிரமணா அருணா சலரமணா - கரு
ணாகரா சந்த்ர சேகரா அருள்சி வாகரா
அரஹ ரோஹரா இதுவுனக் (அழகாகுமா)

---

# V. மெல்லிசைப் பாக்கள்

## 1, இதுபோல் குரு வாய்ப்புறுமோ?

(''ஆலய மணியின் ஓசை'' என்ற மெட்டு)

ஆலடி யானும் மால்வடி வோனும்அவனே
வேலுடை யானும் வேத வனும்அவனே

இதுபோல் குரு வாய்ப்புறுமோ? - தவம்
ஏது புரிந்தாலும்
இதுபோல் இனி வாய்ப்புறுமோ? - உல
கேழி லலைந்தாலும்

1. மதஜா திகளோ பேதமில்லை
மானிடர் விலங்கோ பேதமில்லை
எதிலும் ஆண்பெண் பேதமில்லை
எடுத்தவ ஞட்கொள்வ தையமில்லை (இது)

2. கிருஷ்ணன் ராமன் ஸ்ரீரமணன்
கிறிஸ்துவும் நபியும் ஸ்ரீ ரமணன்
புத்தன் சங்கரன் ஸ்ரீரமணன்
புவனி யெலாந்தொழும் ஸ்ரீரமணன்
புவன மெலாந்தொழும் ஸ்ரீரமணன்
புவன மஹாகுரு ஸ்ரீ ரமணன் (இது)

3. உலகெலா மொன்ருய்ப் பிணைத்துவிட்டான்
உயிர்களைத் தாமா யணைத்துவிட்டான்
அலகிலா வருளால் நனைத்துவிட்டான்
அருணு சலத்தோ டிணைத்துவிட்டான் (இது)

## 2. பாடுந் திறனை பகவான் தந்ததேன்?✸

(''காதல் சிறகை காற்றினில் விரித்து'' என்ற மெட்டு)

பாடுந் திறனை பகவான் தந்தது
பாதம் பரவித் துதிக்கவா ?
பணமும் காதல் பரிசும் பாடி
பாழில் வாழ்வைக் கழிக்கவா ? (பா)

1. நாடும் மனத்தால் தன்னுள் நாடி
ஞான விழிப்பில் விழிக்கவா ?
நரவுடல் வாழ்வை நிலையென நம்பி
நவநவ சுவைதரும் இழிசுக வழிகளில்
பயனிலா தழுந்திடில் ஏமன் வருநாள்
செயலறி யாமல் விழிக்கவா ? (பா)

2. கல்வியு மறிவும் பல்விதம் பயின்றது
கடவுளை மறந்து களிக்கவா ?
புல்லிய போகம் பொருள்புகழ் தேடி
பொழுதெலாங் கழித்திட நரைதிரை வருகையில்
பொறிபுலன் வலிவறப் போம்வழி யறியா
தழுதழு தேங்கி விழிக்கவா ? (பா)

3. இன்னிசை கவிசங் கீத மெழுந்தது
இழிசுக வெறியைப் புகழவா?
பொன்னொடு வயிரப் பொருளினை விற்றும்
பொரிசிறு கடலைதின் றிடுவது மழகோ?
இறையவ னொடுபெறு சுகரஸ வருட்புகழ்
ஏத்தி மகிழ்வதற் கல்லவா ? (பா)

4. இசையுடன் ராகம் இணேவதும் அடியார்
இறையவர் இவர்களேப் பழிக்கவா ?
அசைதளே சீரும் அணிகளும் நாவில்
அமைவதை இறைவன் அடியவர் துதிகளில்
அழகுறப் புனேவதை மறந்திடில் விரைவினில்
அடைந்ததை மீண்டும் இழக்கவா ? (பா)

5. வாவா புலவா பரசுகம் பெறவே
மஹரிஷி யழைத்தார் வாழவா
வாவா ஞானக் கதிரவன் அண்ணு
மலேமேல் உதித்தார் காணவா
இதைவிடு, இறைதொழு, எழு,விழி, துறநிலே
எதுநிஜ நினதுரு இயலறி வருள்பே
ரின்ப வாழ்வில் வாழவா (பா)

---

✱ திரு. கண்ணதாசனின் கவிப் புலமை உலகியற் பாடல்களில் வீணே கழியாதிருக்கும் பொருட்டு, ஓர் அன்பரின் வேண்டுகோளிற்கு இணங்கி, (அதே சினிமா மெட்டில்) சுவாமியால் பாடப்பட்டு, அவ்வன்பரால் திரு. கண்ணதாசனிடம் ஒரு கூட்டத்தில் தரப்பட்டது. அதன் பிறகு, அவர் நாத்திகே வழிவிட்டு ஆத்திக வழிக்கு மாறி, பல உயரிய பாடல்களேப் பாடத் தொடங்கினுர்.

## 3. அருணாசலத்தின் எண்ணம்

(''பொருளே இல்லார்க்கு'' .... என்ற மெட்டு)

அருணா சலத்தின் எண்ணமே
அதுவாகும் வண்ணமே - அருள் (அருணா)
ஆனந்தம்தந் துந்துமே
அறிவாகும் திண்ணமே (அருணா)

1. ரமண தேவன் அருண சைலத்
தாசைச் செல்வமே - அரு-ணேசச் செல்வமே
சமத மாதி ஏனோ? ஸ்ரீரமண
ஸ்மரணை போதுமே (அருணா)

2. தென்றல் வீசும் பொழுது விசிறி
தேவை யுள்ளதோ? - குரு - சேவைய ல்லதோ ?
இன்று ரமண நாமம் அல்லாதே
இன்னொன் றுள்ளதோ? (அருணா)

3. இம்மை, மறுமை சுகமும் வீடும்
எளிதில் ஆகுமே - பவம் - எல்லாம் போகுமே
அம்மை யப்பன் ரமண நாமம்
அதுவே யீகுமே (அருணா)

4. கருணை மாரிக் கடிமை யாகார்
ஆரும் அல்லவே - வினை - வேரும் கொல்லவே
அருணை நாதன் ரமண நாமம்
அன்பாய் சொல்லவே (அருணா)

5. கர்மம் பக்தி யோகம் ஞானக்
கதியும் முடிவிலே - நாம் - காணும் பொழுதிலே
மர்மம் நானார் என்றே விசாரம்
வாய்க்கும் எளிதிலே (அருணா)

## 4. நீதான் யாரோ ?

("ரோஜா மலரே ராஜகுமாரி" .... என்ற மெட்டு)

நீதான் யாரோ? நின்றிடு முடலோ ?
நீவே ருரோ? நினைத்திடு மனமோ ?
நிஜமெது அறிவாயோ ?
நிலையெது உணர்வாயோ ? (நீதான்)

1. யார்யார் உலகில் எதையறிந் தாலும்
அணிமா மகிமா பலபுரிந் தாலும்
தேரா தகநிலை சிறுமதி யதனுல்
தெரிவது நிஜமாமா?
சிதைவது நிலையாமா ? (நீதான்)

2. அணுவால் உலகழித் திடவியன் ருலும்
அம்புலிக் கேகிநீ திரும்பிவந் தாலும்
கணமதில் உலகினை வலம்சுழன் ருலும்
கவலைகள் ஒழிவாமா ? - சாந்தி
கடுகெனும் பெறலாமா ? (நீதான்)

3. உனையே யறியாய் உலகறி வாயோ ?
உடல்போய் வருமோர் உளவறி வாயோ ?
இனியா கிலும்நீ எதுவென நாடிட
இஷ்டமும் படுவாயோ ?
இகவெறி விடுவாயோ ? (நீதான்)

4. உடலும் மனமும் உடைமைகள் அன்ரே ?
உடைமையை நானுய் உளறுதல் நன்ரே ?
மடமை யிதைவிட மாயையும் உண்டோ ?
மயங்குவ தெதனுலே - உடல்
இயங்குவ தெதனுலே - மனம்
இயங்குவ தெதனுலே (நீதான்)

5. பார்பார் மனிதா பார்த்திடு மறிவை
பார்பார் உள்ளே பளிச்சிடும் உணர்வை
பார்பார் அகமக மெனநட மிடுமப்
பரம்பொருள் நீயன்றோ ? - இனி
பஹிர்முகம் வீணன்றோ ? (நீதான்)

## 5. திட்டமிட்டுச் சிந்தை நைவ தெதற்கு?

("தொட்டுவிடத் தொட்டுவிடத் தொடரும்" என்ற மெட்டு)

1. திட்டமிட்டுச் சிந்தைநைவ தெதற்கே? - பின்பு
திண்டாடித் திகைத்துநிற் பதற்கே? - நம்
இஷ்டமுற்றும் ஈசற்கீவ தெதற்கே ? - துன்பம்
ஏதுமில்லா இன்பமடை வதற்கே (திட்ட)

2. எத்தனைபேர் சீர்சிறப்பாய் வாழ்ந்தார் - மேலும்
எத்தனைபேர் செல்வமின்றித் தாழ்ந்தார்
எத்தனையெண் ணங்களெண்ணி ஆய்ந்தார் - அந்தோ
எங்கேயவர்? யாருமின்றி மாய்ந்தார் (திட்ட)

3. கண்டதெல்லாம் கானல்நீரே யாச்சு - நம்
கையிலில்லை நாளைக்கென்ற பேச்சு - நம்
பண்டைநிலை எங்கேயோடிப் போச்சு ? - அந்தப்
படியே யிருந்தால் சுகமாச்சு (திட்ட)

4. வந்ததெல்லாம் போகவேண்டி வருமே - அப்போ
மாருத துன்பந்தனை தருமே
சொந்த இத யந்தனது சுகமே - அது
தோன்றிமறை யாதிருக்கும் அகமே (திட்ட)

5. மற்றஎல்லா எண்ணங்களும் மறப்போம் - நம்பால்
வந்துபோகு மாயமெல்லாந் துறப்போம்
உற்றிதய வுட்கதவைத் திறப்போம் - அங்கே
ஓம்சச்சி தானந்தமா யிருப்போம். (திட்ட)

---

## 6. இதை நினைத்தால் சிந்தை எழுந்திடுமோ?

(''மலர்களைப் போல் தங்கை'' .... என்ற மெட்டு)

**பல்லவி**

இதை நினைத்தால் சிந்தை எழுந்திடுமோ ? - அந்தோ
இச்சைகளின் பின்னே அலைந்திடுமோ ? (இதை)

**அநுபல்லவி**

எதுபொழு திலும்நமக் கெமன் வருவான் - உடல்
இறந்திடும் உலகமும் மறந்து விடுமென்று (இதை)

**சரணம்**

1. முதுமையும் பிணியும் தவிர வொண்ணுதே
முயற்சியால் இதனைத் தடுக்க எண்ணுதே
எதுநிலை யோஅதை எய்திடிப் போதே
இன்றெனில் வாழ்ந்தது ஒன்றுமில் லாதே (இதை)

2. அருளினு லன்றியோர் அணுவசை யாது
ஆண்டவ னுட்சியில் அமையுமோ தீது ?
ஒருமுறை நீயிதை உணர்ந்திடும் போது
உனக்கென எண்ணங்கள் எழஇட மேது? (இதை)

3. உலகமு முடலும் உறக்கத்தி லுண்டோ ?
உதிப்பதும் ஓய்வதும் மனமன்றி உண்டோ ?
சலன மனத்திற்கும் சாட்சிநீ யன்றோ ?
ஜனித்ததிவ் வனைத்திலும் தனித்திருந் தகத்துள்நீ (இதை)

4. முன்னிலை படர்க்கையை எண்ணுதல் பந்தம்
முதலெழு தன்மையின் மூலமே சொந்தம்
இந்நிலை உணர்வுக்கே தாதியோ டந்தம்
இருப்பதில் இருப்பதே இறைவனு னந்தம் .... (இதை)

# 7. நெஞ்சம் ஓயாதோ?

(''வாராய் என் தோழி வாராயோ'' .... என்ற மெட்டு)

1. ஓடோடும் நெஞ்சம் ஓயாதோ ?
உதியாமல் என்றும் மாயாதோ ?
பாடேதும் இன்றிப் பணிவாய் - ரமண
பகவான் வலைக்குள் பதியாதோ ? (ஓ)

2. உடலூ டெழுந்து விரியும் - அதை
உடனே நானென்று பரியும்
உலகே நினைந்து திரியும்
உயர்வான இன்பம் அறியாதே (ஓ)

3. வருகல்வி செல்வ மதனால் - யௌ
வனதேக மோக மதனால்
வெறிகொண் டலைந்த வினையாலே
வெகுஜென்மம் நொந்து மறியாதே (ஓ)

4. தனையே மறந்த தவறை - உடல்
தானாய் நினைந்த தவறை
இனியேனு மெண்ணி எதுநானென்
றிதயா சனத்தி லமராதோ ? (ஓ)

5. அருணா சலத்தின் அருளால்- ஸ்ரீ
ரமணோப தேசப் பொருளால்
குருவாழு மான்ம குகைநாடி
குறுகாதோ ? நெஞ்சம் உருகாதோ ? (ஓ)

## 8. நினைக்கும் நெஞ்சம்

("மயக்கும் மாலைப் பொழுதே" என்ற மெட்டு)

நினைக்கும் நெஞ்சம் நில்லாத தேனோ ?
இனிக்கும் ரமணன் இரங்காமை தானோ ?
என்ன நான் செய்வனோ ?

1. உன்னை நினைத்தால் உளந்தேறுமே
உலக நினைவும் ஓய்வாகுமே
அன்னை மடிமேல் சிசுவும்துன்பம்
அடையும் மாயம் ஏதாகுமோ? (நினை)

2. எல்லாமுன் அருளால் புல்லாகுமே
இயக்கும் மாயை கல்லாகுமே
வெல்லும் அருணை ரமண நாமம்
விரும்பும் உள்ளம் வீணாகுமோ? (நினை)

3. வேங்கை பிடித்தால் விடப்போகுமோ ?
விலக நீகை விடலாகுமோ ?
ஓங்கும் அருணை ரமணநாமம்
ஓது மடியார் கெடலாகுமோ? (நினை)

4. கண்ணாரக் காண அண்ணாமலை
கருணைத் தாயென் உண்ணாமுலை
அண்ணல் ரமணன் ஆத்மநாதன்
ஆகி யிருந்தும் அடங்காமலே (நினை)

5. கொண்டா னிருக்கக் குறைநேருமோ ?
குருவி னருளும் குறைவாகுமோ ?
கண்ட வுடனே ரமண கடைக்கண்
கருத்தைக் கவராக் கண்ணாகுமோ (நினை)

6. அரிதான ஜன்மம் நரதேகமே
அதிலும் அருணா சலவாசமே
உரிய குருவோ ரமணதேவன்
உலகி லடைந்தும் ஓயாமலே (நினை)

---

## 9. மனம் பொல்லாததே

("உன்னைக் கண் தேடுதே" என்ற மெட்டு)

மனம் - பொல்லாததே - வெம் - புலிபோலவே
உள் - நில்லாததே

1. எல்லாம் செய்வல்லாய் ஈசா நின்னாலே
அல்லாம லென்றும் அழியாததே - நீ
ரமணேச நாதனே எனையாளும் பாதனே (மனம்)

2. குருசிம்மம் ஒன்றே மனவேங்கை கொன்றே
அருள்செய்யு மன்றோ ரமணேசனே - நல்
தவவீர நாதனே குருதேவ தேவனே (மனம்)

3. ரமணேச நீயே ரக்ஷிக் கிலாயேல்
எமனான சிந்தைக் கிரையாவனே - நான்
அநியாய மாகவே இனியானும் வாழ்வதோ? (மனம்)

4. நீகாவ லென்றே தேகாதி நின்றே
சாகாம லின்னும் தரிக்கின்றனே - மெய்
வருநாளி லேனுமோர் திருநாளு முள்ளதோ? (மனம்)

5. போராடி வெல்வாய் புகழ்மாலை கொள்வாய்
தாராள மாய்நீ தரவேண்டுமுன் - சீர்
சரணார விந்தமே அருணேச நந்தனா (மனம்)

## 10. ஆதியந்த மில்லான்

(''நீல வண்ணக் கண்ணு ... '' எ. மெட்டு)

ஆதி யந்த மில்லாயன்ரூே
ஆன்ம ரமண னன்ரூே
அருளாலென் றென்றுங் காண
வருவாயென் தந்தை யன்ரூே (ஆ)

1. நாவுமுன்றன் நாமம் சொல்ல
நாட்டமித யத்தில் செல்ல
தேவருல கின்ப மெல்லாம்
தேவையின்றி நெஞ்சம் தள்ள
ஆவலுளம் விம்மி விம்மி
அருவிப்போலக் கண்ணீர் துள்ள
அழைத்தால் வருவா யின்றே
அருணு சலத்தி னின்றே (ஆ)

2. சிந்தைபுகுந் துந்துஞ் செஞ்சொல்
செந்தமிழின் சந்தஞ் சிந்த
பந்தமுறுந் த்வந்தம் கொன்றே
பார்வையருட் போதந் தந்தே
வந்துபிறந் தந்தம் பொன்றும்
வல்வினைமாண் டின்பம் பொங்க
எந்தைஎந்தை என்ரு லின்றே
வந்தருள்க வன்ம மன்றே (ஆ)

3. கண்ணிலுனைக் கண்டுன் காதல்
காந்தவலைக் கப்பால் போதல்
ஒண்ணுவதோ வீணில் நெஞ்சம்
ஓடுவதோ நீயே தஞ்சம்
எண்ணியுனை எண்ணம் மாய
இன்பவெள்ளந் தன்னில் தோய
பண்ணவேண்டு மன்ரூே நீயே
பரிவினுே டருள்செய் வாயே (ஆ)

4. வேண்டுபவர் வேண்டும் வண்ணம்
பூண்டுவரும் ரூபம் திண்ணம்
ஆண்டரம ணங்கம் ஒன்றே
மீண்டும்விருப் பாகு தின்றே
நீண்டகாலம் தாழ்த்தல் நன்றோ
நீவராது வாழ்தல் நன்றோ
காண்டலின்றிச் செல்லுங் காலம்
கற்பகோடி தன்னில் நீளும் (ஆ)

5. தெய்வவுரு கோடி யேனும்
ஸ்ரீரமணன் தானே வேணும்
வெவ்வினையின் மூலந் தன்னை
வேருடனே நீக்கும் நின்னைக்
கைகுவியக் கண்ணீர் வாரக்
கண்டுருகிப் பாதம் சேரச்
செய்யவல்ல தீர ரேறே
ஸ்ரீகுருவே யல்லா ராரே. (ஆ)

---

## 11. இது தகுமோ ?

(''சிலர் சிரிப்பார்'' என்ற மெட்டு)

இது - தகுமோ? இது முறையோ ?
இது - திருவருள் சம்மத மாமோ ? (இது)

1. சரண முனைத்தொழும் நெஞ்சம் - தடு
மாறுமெனில் என்ன வஞ்சம் ?
மரண மெனில்பின் வாங்குவதோ? - உடல்
வாழ்வினி லின்னும் மயங்குவதோ ? (இது)

2. உடலினை நானெனும் மாயம் - அடி
யோடறல் தெய்வ சகாயம்
கடவுளுன் னையன்றி யார்வருவார்? - உனைக்
காட்டிலும் இவ்வரம் யார்தருவார் ? (இது)

3. அருணு சலசிவ நாதா - அடி
யேனையும் ஆட்கொண்ட பாதா
குருவே கதியென்னும் என்னைப்பிரிந்திடக்
கூடுவ தோ? மனம் வாடுவதோ ? (இது)

4. தேகமல்லா அகம் காணும் - சற்
சித்சுக மெய்ந்நிலை தோணும்
ஆகியும் மீண்டொரு பாஹியமோ? - அறி
வாகிய நீமறை வாகுவையோ ? (இது)

5. உன்னை யல்லால் பிறர்பாலே - ஒரு
நாளுஞ் செல்லே னதனுலே
என்னுடை யாய்எனை யேயுடையாய்-நீ
யெழுந்தருள் வாய்நீ யிருந்தருள்வாய் (இது)

## 12. ரமணு எழுந்தருள்வாயே

(''பாலும் பழமும் ..... '' என்ற மெட்டு)

1. தேகம் மனமும் செய்கையி லாதே
ஜீவ மடமைச் சிறிதுமி லாதே
ஏக வுணர்வாய் என்னுளம் நீயே
இன்ப ரமணு எழுந்தருள் வாயே (தேக)

2. தாக மோக வகங்கரத் தாலே
ஜென்ம கன்ம மெழுந்ததென் பாலே
மேக மற்ற திவாகரன் போலே
விளங்க வேயெ ழுவாய்அரு ளாலே (தேக)

3. நின்றெ னுள்ளம் எழுந்தருள் பாதா
நீயெ னும்பொருள் நானெனும் போதா
அன்று மென்றும் விளங்கும தீதா
அப் பனேஅரு ணசல நாதா (தேக)

---

4. வாழ்வுக் கனவில் நான்மயங் காமல்
மனித ருரை களிலேகலங் காமல்
ஊழை நினைத்துள் ளுறுதிவி டாமல்
உன்னைப் பெறவே உளமிரங் காயே (தேக)

5. உலகின் துயரை நீயறி வாயே
உயிர்கள் மகிழ உளவுரைப் பாயே
கலக மனதைக் களைந்தெறி வாயே
கருணைக் கடலே கண்திற வாயே (தேக)

## 13. நாளெந்த நாள் அருணாசலா

(''காலங்களில் அவள் வசந்தம்'' என்ற மெட்டு)

நாளெந்த நாளரு ணாசலா
நானற நீயெழுந் தோங்கிடும் - திரு
ஆளும் பிரான்ரம ணேசனாய்
அவதரித் தாட்கொண்ட நாதனே - திரு (நா)

1. ஆனந்த மாம் வழி காட்டினாய்
அருளடி யாரொடும் கூட்டினாய்
ஞானந் தருங் கொடி நாட்டினாய்
நானற நீயெழுந் தோங்கிடும் - திரு (நா)

2. வையக வாழ்முறை தேர்ந்திலேன்
மனிதர்கள் யாரையும் சார்ந்திலேன்
ஐயநின் னலன்றி வாழ்ந்திலேன்
அகமற நீயெழுந் தோங்கிடும் - திரு (நா)

3. ஓம்ரம ணாயந மோநமோ
உலகம ஹாகுரு வேநமோ
ஸ்ரீரம ணாயந மோநமோ
ஜெகத்குரு வேரம ணாநமோ
தேகம னாதியு பாதியோ
சிறிதுமி லாதெனைச் சேர்ந்தணைந்திடும் (நா)

## 14. மனமே இரங்கி வருவாய்

("வாராயோ வெண்ணிலாவே" என்ற மெட்டு)

மனமே இரங்கி வருவாய்
ரமணே சனென்கண் மணியே (மனமே)

இனிநீ யலாமல் எவரே - எனையா தரிப்பர் இறைவா
தனியே இருத்தல் சரியோ - தவரா ஜஞன ரமணா (மனமே)

பிரியாத உண்மை உறவே - பிழைநீ திருத்தல் பெரிதோ
தரியே னகன்று ரமணா-தயைநீ யளித்தல் தவறோ (மனமே)

அருணா சலத்தி னரசே - அடியா ருளத்தி னமுதே
திருநா ளெதில்வந் தருள்வாய் ? - சிவஞா னதேவ ரமணா
(மனமே)

பலநாள் வருந்தி யழவே - பகவா னெனக்கை தொழவே
மலநோ யகற்றி ரமணா - வரமே யளிக்க மலேவோ?
(மனமே)

இனியிந்த ஜென்மம் வீணோ? - இறைவா வராத தேனோ?
பனிகண் டயர்ந்து பகலோன் - பயமுண் டொளிந்த பரிசோ?
(மனமே)

# VI. பஜனைப் பாக்கள்

## 1. ரமண்ய நம ஓம்

(''நடராஜ நடராஜ நடராஜ பதியே'' என்ற அருட்பா மெட்டு)

ரமண்ய ரமண்ய ரமண்ய நமஓம்
ரமண்ய ரமண்ய ரமண்ய நமஓம்

1. அகமாட(ம்) நடுநாடு மசலாய நமஓம்
பகவானற் புதமோன ரமண்ய நமஓம் (ரமண்ய)

2. அருணைச லமமர்ந்த வருளாள நமஓம்
அருணேச னுருவான குருதேவ நமஓம் (ரமண்ய)

3. அரிவேத னரஞன குருநாத நமஓம்
பிரியாத வுறவான பெருமானே நமஓம் (ரமண்ய)

4. அலையாத மறையாத வறிவான வெளியே
கலையாத சுகமான கதிர்வீசு மொளியே (ரமண்ய)

5. மனமாயை கெடவாடும் மதிகார பதியே
எனையாண்ட குருவான விதயாத்ம நிதியே (ரமண்ய)

6. திறமோன ரமணன்றந் திடும்ஞான நிலையே
பிறவாத விறவாத பிரமோத கலையே (ரமண்ய)

7. குவியாத மலராயெம் தலைமீதி னணியே
சிவதேவ ரமண்ய நமவென்ற மணியே (ரமண்ய)

8. குருதேவ குருதேவ குருதேவ ரமண
அருளாழி யமுதன்ன குருதேவ ரமண (ரமண்ய)

9. **''ரமண்ய நம''**வென்ற ஜெபநாம வொலியே
நமதென்ற மமகார மதையுண்ணும் பலியே (ரமண்ய)

10. **''ரமண்ய நம''**மந்த்ர சிவஞான குருவே
எமதாசை ஒழியுங்கற் பகமான தருவே (ரமண்ய)

---

# 2. சற்குரு மந்திரம்

ஓம் சற்குரு ரமணய சற்குரு ரமணய
சற்குரு ரமணய நமஃ
ஓம் சற்குரு ரமணய சற்குரு ரமணய
சற்குரு ரமணய நமஃ

1. பற்பலப் பிறவிகளிலே செய்து சேர்த்திட்ட
பவவினை வாசனை யழிக்கும்
தற்பர ஞானகுரு தேவனின் மந்திரம்
சற்குரு ரமணய நமஃ

2. காய்கின்ற வெய்யிலில் தன்மதலை வாடவே
காண்பது பொருக்கருணை யாலே
தாய்தந்தை வடிவாய்நம் கண்முனே வந்த
சற்குரு ரமணய நமஃ

3. பக்தியொடு பாடப் பணிந்துமலர் தூவி
பணிசெய்ய நம்முனே வந்த
சக்தியொடு சிவமான முக்திதரும் தெய்வமே
சற்குரு ரமணய நமஃ

4. அந்தியிருள் மாயையாம் அந்தகா ரத்திலே
அழுதஞ்சி நொந்தவர்க் கருள்சேர்
சந்திரனொடே ஞான சூரியன் தானான
சற்குரு ரமணய நமஃ

5. அங்கண் நெடுமாலையும் அரனையும் பக்தியால்
அன்புசெய் தோர்கண்கள் ஆற
சங்கரமும் சைவலிங்க வுருவுஞ் சேர்ந்த
சற்குரு ரமணய நமஃ

6. தத்துவம் விளக்கியருள் தந்துபவ ராஜஸத்
தாமஸக் குணமழித் தோட்டி
சத்துவ மளிப்பதும் சாந்தியை யளிப்பதும்
சற்குரு ரமணய நமஃ

7. மோஹவுல கப்பரம மூடவழி செல்லாமல்
முன்னெனைப் பிடித்தினிய பக்தித்
தாகமதையும் ஞான யோகமதையுந் தரும்
சற்குரு ரமணாய நமஃ

8. கானலுலகிற் கன்ம நாசமுற வேபக்திக்
கனிவினால் அமிர்த பேரின்ப
தானவரமும் ப்ரம்ம ஞானவரமுந் தரும்
சற்குரு ரமணாய நமஃ

9. நாமரச முண்டுண்டு ஞானவழி பயிலுவோர்
நாவினுக் கருளினிமை யூட்டும்
சாமரச மும்தெய்வ சோமரசமும் சேர்ந்து
சற்குரு ரமணாய நமஃ

10. கெஞ்சியுலகக் கொடிய வஞ்சரிடம் செல்லுமுன்
கேளா தளித்தடிமை கொண்டே
தஞ்சமடைந்த தனையர் தமைவிடா தாயேயென்
சற்குரு ரமணாய நமஃ

---

## 3. பகவான் ரமணா நம ஓம்

இராகம் : சாமா தாளம் : ஆதி

1. பகவான் ரமணா நமஓம் பரமேச் வராய நமஓம்
ஜெகமா குரவே நமஓம் சிவஸம் பவாய நமஓம்

2. அருணா சலாய நமஓம் அஹநா சகாய நமஓம்
கருணா கராய நமஓம் கலிநா சகாய நமஓம்

3. ரமணேச் வராய நமஓம் நமநா சகாய நமஓம்
அமலாதிபாய நமஓம் அபய ப்ரதாய நமஓம்

4. தேஹம் நாஹம் கோஹம் ஸோஹம் ஸோஹம் சிவோஹம்
யோகம் தத்வவி வேகம் ஓம்தத்ஸத்சித் தோஹம்
ஓம் தத்ஸத்சுத் தோஹம்
ஓம் தத்ஸத்புத் தோஹம்(ஓம்)

---

## 4. அகநாயகனே ரமணா

இராகம் ஃ சிவரஞ்சனி தாளம் ஃ ஆதி

ரமணாய ஓம் - ஸ்ரீ - ரமணாய ஓம்
ரமணாய ஓம் - நமோ - ரமணாய - ஓம்

1. குருநாயகா - சற் - குணதாயகா
அருள் நாயகா - என - தக நாயகா (ரம)

2. அருணேசனே - ஸ்ரீ - ரமணேசனே
குருதேவனே - ஹ்ருத்-குஹை வாசனே (ரம)

3. அண்ணாமலை - திரு - வண்ணாமலை
அருள் ஞானமே - திரு - வண்ணாமலை (ரம)

4. அண்ணாமலை - அருட் - கண்ணாமலை
ரமணேச னுருவான அண்ணாமலை (ரம)

5. அண்ணாமலை - தாய் - உண்ணாமுலை
அருட்பா லெனக்கூட்டும் உண்ணாமுலை (ரம)

6. அருணாசலம் - ஸ்ரீ - அருணாசலம்
ஸ்மரணத்தாற் பவநீக்கும் அருணாசலம் (ரம)

7. குருநாதனே - என் - குருநாதனே
அடியேனை யாட்கொண்ட அருட்பாதனே (ரம)

## 5. ரமணய ஓம்

ரமணய ஓம் ரமணய ஓம் அருணசல ரமண
ரமணய ஓம் ரமணய ஓம் கருணகர ரமண

1. அருணசல தவசீலா
   அழகம்மையார் மகிழ்பாலா (ரமணய)
2. அற்புதத் திருச்சுழி ரமண
   அண்ணமலை யொளிரமண (ரமணய)
3. அருணேதய எழில்வதன
   அருள்சிந்துமற் புதநயன (ரமணய)
4. கனகாம்புயத் திருப்பாதா
   கருணகர குருநாதா (ரமணய)
5. நாதாந்தப்பே ரொலிரமண
   நடமிட்ட நமோரமண (ரமணய)
6. அண்ணமலை யருளாளா
   அடியாருளத் திருவாளா (ரமணய)
7. இணையற்றபொன் னருட்தேஜா
   எனையாண்டஸ்ரீ அருணேசா (ரமணய)
8. அலையில்லாச் சுகவாரி
   அடியார்களுக் கருட்பாரி (ரமணய)
9. வழிதப்பிநின் மகனேடா
   வலைகட்டிய மலைவேடா (ரமணய)
10. அருணசல குருரமண
    அப்பாஅகத் தொளிரமண (ரமணய)

## 6. ரமணேச்வரா - அருணேச்வரா

(''நாராயணம் பஜே நாராயணம்'' என்ற மெட்டு)

ரமணு நமோநமோ அருணேச்வரா - ஸ்ரீ
அருணு சலா நமோ ரமணேச்வரா

1. அருணச லப்ரபூ ரமணேச்வரன் - அதி
கருணுக ரப்ரபூ ரமணேச்வரன் (ரம)

2. உதயாஸ்த மனமிலான் ரமணேச்வரன் - அன்பர்
இதயாஸ னத்துளான் ரமணேச்வரன் (ரம)

3. நாராய ணன்சிவன் ரமணேச்வரன் - ஆத்ம
பாராய ணப்பரன் ரமணேச்வரன் (ரம)

4. ப்ரஹ்மாதி தேவரும் ரமணேச்வரன் - ஞான
சிம்மாத னத்துறும் ரமணேச்வரன் (ரம)

5. தேவிலக்ஷ்மி வாணியும் ரமணேச்வரன் - என
தாவிமுக்தி யாவையும் ரமணேச்வரன் (ரம)

6. கணநாதன் ஸ்கந்தனே ரமணேச்வரன் - திவ்ய
குணயோகா னந்தனே ரமணேச்வரன் (ரம)

7. சகலநாம ரூபனே ரமணேச்வரன் - நமக்
கிகபாரதி ஈவனே ரமணேச்வரன் (ரம)

8. ஞானிகள் மனேஹரன் ரமணேச்வரன்-அருள்
மோனஞான பாஸ்கரன் ரமணேச்வரன் (ரம)

9. அகிலாத்ம நாதனே ரமணேச்வரன் - அஹம்
அஹமாத்ம போதனே ரமணேச்வரன் (ரம)

10. புவனமுண்ட ப்ரஹ்மமே ரமணேச்வரன் - ஜாக்ர
கனவிற் கண்ட சிம்மமே ரமணேச்வரன் (ரம)

## 7. ஜெய அருணாசல ஸ்ரீ ரமணா

இராகம் ஃ சிவரஞ்சனி  தாளம் ஃ ஆதி

ஜெய அருணாசல ஸ்ரீரமணா
ஜெயகுரு தேவ நமோ ரமணா

தீன பக்த பரிபாலக ஹ்ருத்ப்ரிய
ஸ்ரீஅருணாசல நாம ஜெபப்ரிய
ஞான சுகார்ணவ நமோ சிவாகர
மோன சுபானு ப்ரகாச ஹரோஹர (ஜெய அரு)

---

## 8. ஜெய குருதேவா

இராகம் ஃ தேஷ்  தாளம் ஃ ஆதி

ஜெயகுரு தேவா சற்குரு தேவா
ஜெய அருணாசல சிவகுரு தேவா

1. பயபவ ஸம்ஹர பாலன தேவா
பாபாந்தக ஹர பாஸ்கர தேவா (ஜெ)
2. பகவான் ரமண பராத்பர தேவா
பரமேச்வர ஹரி ஹர குருதேவா (ஜெ)

---

## 9. ஜெய ஜெய ரமணா

1. ஜெயஜெய ரமணா ஜெயஜெய ரமணா அருணா சலரமணா
ஜெயஜெய ரமணா ஜெயஜெய ரமணா அருணா சலரமணா
(ஜெ)
2. அருணா சலசிவ அருணா சலசிவ அருணா சலரமணா
அருணா சலசிவ அருணா சலசிவ அருணா சலரமணா (ஜெ)
3. ஸ்ரீகுரு ரமணா ஜெயகுரு ரமணா அருணா சலரமணா
மமகுரு ரமணா சிவகுரு ரமணா அருணா சல ரமணா (ஜெ)
4. ஹரஹர ரமணா ஹரஹர ரமணா அருணா சலரமணா
குருபர ரமணா அரஹர ரமணா அருணா சலரமணா (ஜெ)

5. சற்குரு ரமணா சற்குரு ரமணா அருணா சலரமணா
ஜெகத்குரு ரமணா சிவகுரு ரமணா அருணா சலரமணா (ஜெ)

6. பகவான் ரமணா பகவான் ரமணா பரமேச் வரரமணா
பகவான் ரமணா பகவான் ரமணா அருணா சலரமணா (ஜெ)

---

# 10. ஜெய அருணாசல ரமணன்

("ரகுபதி ராகவ ராஜாராம்" என்ற மெட்டு)

1. ஜெய ஜெய அருணா சலரமணா - ஜெயஜெய ஜெயசற் குருரமணா
ஜெயஜெய கருணா கரரமணா-ஜெயஜெய ஜெயஜெய ஜெய
ரமணா (ஜெ)

2. அருணா சலகங் காரமணா - அக்ஷய திருவரு ளேரமணா
அருணா சலசிவ வுருரமணா-அகநா யககுரு பரரமணா (ஜெ)

3. தவநிலை யருள்வாய் ஸ்ரீரமணா-சர்வ லோககுரு வேரமணா
பவவினை யொழித்தருள் வாய்ரமணா-பாஹி பாஹிகுரு
ஸ்ரீ ரமணா (ஜெ)

4. பயநா சககரு ணாரமணா - பலமீந் தருள்புரி வாய்ரமணா
ஜெயஅரு ணாசல சிவரமணா - ஜெயஜெய ஜெயஜெய ஜெய
ரமணா (ஜெ)

5. அருணா சலனே ஸ்ரீரமணா - அரஹர சிவசிவ ஸ்ரீரமணா
கருணா நிதியே ஸ்ரீரமணா-கரதலா மலகா ஸ்ரீரமணா (ஜெ)

6. நரசுர நாயக ஸ்ரீரமணா - ஞான தாயகா ஸ்ரீரமணா
பரசிவ வடிவா ஸ்ரீரமணா - **பகவான் மகரிஷி ஸ்ரீரமணா**

---

## 11. சரணம் ஸ்ரீ ரமணன்

(''ரகுபதி ராகவ ராஜாராம்'' என்ற மெட்டு)

1. சிவ சிவ சரணம் ஸ்ரீ ரமணா
திருவரு ணாசல குருரமணா
நவ தவ குருநா யகரமணா
நரசுர பரகுரு வேரமணா (சி)
2. அரிஅயன் நடுவுறும் ஸ்ரீரமணா
அரஹர சிவசிவ ஸ்ரீரமணா
திரிபுடி யறும்ஒளி ஸ்ரீரமணா
சிவசிவ அருணாசல ரமணா (சி)
3. கதியருள் தருகற் பகரமணா
கனக மயத்திரு வுரு ரமணா
அதிகரு ணாகர அருள்ரமணா
அருணா சலசிவ குருரமணா (சி)

---

## 12. ஞான சுந்தர ரமணன்

இராகம் : மேஷ கல்யாணி தாளம் : திசிரஏகம்

1. ஞான சுந்தர ரமண சற்குரு நா-தா-ஸ்ரீ ரமணா
தீன ரக்ஷக நாத சற்குரு-தே-வா-ஸ்ரீ ரமணா (ஞா)
2. கருணை யங்கடல் பெரும ழைபொழி-கண்-ணா-ஸ்ரீ ரமணா
அருணை யங்கிரி கடவு ளேரம-ணப்-பா-ஸ்ரீ ரமணா (ஞா)
3. ஆர ணத்துறுபரி பூர ணத்திருவடி யன்-பே-ஸ்ரீ ரமணா
நார ணத்திருவுரு வான சற்குருபர-நா-தா-ஸ்ரீ ரமணா (ஞா)
4. அரனே தவ பெருநிலை மன
வரனேயரு ளமுதளித்திடும் மா-தா-ஸ்ரீ ரமணா
நரநே ருரு தனையடைகுரு
பரனேயர ஹரபதிசிவ நா-தா-ஸ்ரீ ரமணா (ஞா)

---

## 13. ரமண நாமமே சொல்லுவாய்

1. ரமண நாமமே சொல்லுவாய்
ஜனன மரணம் வெல்லுவாய் - ஜெய (ரமண)
2. ரமண நாமமே சொல்லுவாய்
நாவினுல் பயன் கொள்ளுவாய் - ஜெய (ரமண)
3. ரமண நாமமே சொல்லுவாய் - நீ
நல்ல கதியே செல்லுவாய் - ஜெய (ரமண)
4. ரமண நாமமே சொல்லுவாய்
ஞான சுகமே கொள்ளுவாய் - ஜெய (ரமண)

## 14. குரு ரமணேசா

இராகம் : சிந்து பைரவி தாளம் : ஆதி

ரமணேசா குரு ரமணேசா
ஞானசற் குருவே ரமணேசா

1. அருணகிரீசா ரமணேசா அகந்தை விநாசா ரமணேசா
அருட்பரமேசா ரமணேசா ஆன்மபுரீசா ரமணேசா

2. ப்ரம்மசொரூபா ரமணேசா பீதிவிநாசா ரமணேசா
எம்முயிர் நேசா ரமணேசா இதயவிலாசா ரமணேசா

3. ஜகத்குரு நாதா ரமணேசா சிவகுருநாதா ரமணேசா
சுககதி போதா ரமணேசா சுமனவிநோதா ரமணேசா

4. மஹரிஷி பகவான் ரமணேசா மாதா தாதா ரமணேசா
அஹமஹஸ்புரண ரமணேசா அஹமபஹரண ரமணேசா
(ரமணேசா)

## 15. அருள்புரிவாய் ரமணேசா

இராகம் : அமீர்கல்யாணி　　　　　　　　　　தாளம் : ஆதி

அருள்புரிவாய் ரமணேசா - சர்வேசா

1. அருணா சலசிவ ஞானவிகாசா
சுரநா யகர் தொழும் ஜோதி விலாசா - சர்வேசா (அரு)

2. கோஹம் ஞான விசாரமெய் வேலா
குருவழி வாழ்சற் ஜனபரி பாலா - சர்வேசா (அரு)

3. கண்ணா லருள்செய்யும் காமவிநாசா
கருணா கரனே குருரம ணேசா - சர்வேசா (அரு)

4. அண்ணா மலைதிரு வருண்முக தேஜா
அஹமஹ மாத்ம வருள்நட ராஜா - சர்வேசா (அரு)

## 16. அருள்புரிவாய் அருணாசல நாதா

அருள்புரி வாய்அரு ணாசல நாதா
உருவுடன் வந்தவென் உத்தம போதா
அருணா சலசிவ நாமமந் திரமே
திருவாய் மலர்ந்துப தேசமீந் தவனே (அருள்)

---

## 17. பகவானே அருள்வாய்

(''ஜெகதோத்தாரண'' என்ற மெட்டு)

பகவானே அருள் ரமண குருதேவா

1. ஜெகமே மெய்யெனச் சிந்தை மயங்கியே
அகநாயகா வுன்னை அகன்றலையாமல் (பக)

2. நமோ பகவதே ரமணாஓம் என்னும்
நாமமே புகலென நம்பும் அடியேனை (பக)

3. குருதேவ னுயுனைக் கொண்டபின்னும் இன்னும்
கருவாய்ப் பிறந்துநான் கலக்க மடையாமல் (பக)

4. அஹோ குருபரா அருள்ஞான சாகரா
''அபயம் அபயம்'' என்றேன் அடைக்கலம் தாராயோ (பக)

5. அருணகி ரீசனே அகங்கார நாசனே
குருதந்தை தாயும்நீ குழந்தையடியேனின் (பக)

---

## 18. ப்ரஜ்ஞானம்

இராகம் : யமுனு கல்யாணி தாளம் : ஆதி

ப்ரஜ்ஞான முண்டாகச் செய்வாய் - (a) ஸ்தித (b) சிவ (ப்ர)
அருள் செய்வாய் - அருள் செய்வாய் - அருள் செய்வாய்

1. அஜ்ஞா னுந்தகா ரந்தனை நீக்குவாய்
அருணு சலரமணு-அத்வைத (ப்ர)

2. அன்னுதிமய மானவைங் கோசமும்
அஹமன வுணராத - அகண்ட (ப்ர)

3. அருணு சலசிவம் அஹமே யெனும்பர
வனுபவ சுகமருள்வாய் - ஆனந்த (ப்ர)

4. காமாதி ஷடூர்மி சங்காரனே
கனவு நனவு துயிலுங் -கடந்த (ப்ர)

5. எல்லாம் அஹமெனு மின்ப சமாதியே
இடைவிடா தருள்செய்வாய் - ஏகாத்ம (ப்ர)

6. அந்தாதி நண்ணுவரு ணுசலா
அண்ணு மலைரமணு-அனுதி (ப்ர)

7. ஜகஜீ வேசத்ருச் யங்க ளெழாமலே
சின்மய வடிவாகி - விளங்கும் (ப்ர)

## 19. பிரம்மாஸ்திரம்

இராகம் : பியாக் தாளம் : ஆதி

1. நான்யா ரென்னும் ஞானாஸ்திரம் ஸ்ரீ
ரமணேசன் தந்த ப்ரம்மாஸ்திரம்
ஓம் ஓம் ஓம் நமோ ரமணாய ஓம்
ஓம் ஓம் ஓம் நமோ ரமணாய ஓம் (நா)

2. ஆத்மா நாதா அருணாசலா - இவ்
வடியேனை யாண்ட அருட்காவலா
தீர்த்தம் மூர்த்தம் நீயே யல்லால் - நான்
தேடேன் வேறே யருணாசலா (நா)

## 20. கருணாம்ருதம் அருணாசலம்

இராகம் : மோஹனம் தாளம் : ஆதி

1. அருணாசல மருணாசலம் ஸ்மரணாம்ருத மருணாசலம்
கருணாம்ருதம் அருணாசலம் கருணார்ணவம் அருணாசலம்
(அரு)

2. ரமணானுத் பவ மருணாசலம் ஞானானுத்பவ மருணாசலம்
அமராத்மக மருணாசலம் அசலாதிப னருணாசலம் (அரு)

3. அருவுருவே யருணாசலம்-திரு-வருளுருவே யருணாசலம்
சற்-குருவுருவே யருணாசலம் - கற்பகத்-தருவுருவே அருணாசலம்
(அரு)

4. சத்சித்தின் பருணாசலம்-அஹ-ஸாக்ஷித்வம் அருணாசலம்
சிவ-முக்திக் குன்றருணாசலம்-குரு - மூர்த்தித்வம் அருணாசலம்
(அரு)

5. ப்ரம்-மானந்தம் அருணாசலம், அருள்-ஆர்வந்தான் அருணாசலம்
பர-மோனந்தான் அருணாசலம் பவ - மோக்ஷந்தான் அருணாசலம்
(அரு)

---

# 21. ஹர ஹரோ ஹரா

இராகம் : மேஷ கல்யாணி                                   தாளம் : ஆதி

ஆதி ஜோதிகிரி அண்ணு மலைக்கு - ஹர ஹரோ ஹரா
அருணு சலசிவ ரமணன டிக்கே - ஹர ஹரோ ஹரா

1. ஹரஹர அருணு சலசிவ ரமணு - ஹரஹரோஹரா-அஹம்
அஹமஹ ஸ்புரணு அஹமப ஹரணு -ஹரஹரோஹரா
நரசுர பலமத குருபர ரமணு - ஹரஹரோஹரா - அருள்
நவநவ சுகபரி ணவதவ சரணு - ஹரஹரோஹரா (ஆ)

2. சிந்தை கொன்றசிவ சிம்ம சொரூபா - ஹர ஹரோஹரா - ஜட
தேஹ மோஹமறும் யோகசொ ரூபா - ஹரஹரோஹரா
அந்த மாதிநடு வன்னிசொ ரூபா - ஹரஹரோஹரா - பஹிர்
அந்தர் ஜோதிபர மாத்மசொ ரூபா - ஹரஹரோஹரா (ஆ)

3. ஸ்ரீஅரு ணுசல தேசிக ரமணு - ஹரஹரோஹரா - சிவ
சிவசிவ அருணு சலகுரு ரமணு - ஹரஹரோஹரா
தீன தயாள ஜெகத்குரு ரமணு - ஹரஹரோஹரா - சத்
சித்சுக மேகுரு தக்ஷிணு மூர்த்தி - ஹரஹரோஹரா (ஆ)

4. **சுந்தர சுந்தரி நந்தன** ரமணு - ஹரஹரோஹரா அருட்
ஜோதி மாமலை தபோதன ரமணு - ஹரஹரோஹரா
அந்தியி லந்தர ஜோதி யெழுந்தோய் - ஹரஹரோஹரா- தன
தன்பரு ளத்தக லாதுறை பவனே - ஹரஹரோஹரா (ஆதி)

---

# 22. யாத்திரை கீதம்

1. ஆனந்த மாக ஆச்ரமம் செல்வோம்
அண்ணு மலையானை நாடி - நம்
அம்மை யப்பனைத் தேடி - திரு
அருணை ரமணனை நாடி
தீன தயாளா திருச்சுழி நாதா
ஸ்ரீரமணு ரமணு ரமணு
ஞான கதிர்விரி மோன தபோநிதி
யான மனோஹர நாதா - என்றே (ஆன)

2. எங்கும் நிறைந்த மங்கள வடிவன்
தங்கரு ணுசல மேவி
தற்பர னேயெனக் கூவி
தயாநிதி யேயெனக் கூவி
இன்பமோ டப்பனைக் கூவி
என்னைய னேயெனக் கூவி
பொங்கும் ப்ரதாபா பூரண ஜோதி
பொன்மய குஞ்சித பாதா
சங்கர சிவகங் காதர நாதா
எங்களை யாண்டவா வாவா - என்றே (ஆன)

3. சுந்தர நந்தன ஸ்ரீரம ணேசா
ஜோதிஅண் ணுமலை வாசா
சுயஞ்சுட ரேயருட் தேஜா
சோபன ஞானவி லாசா
தந்தாய் உனதடி வந்தோம் எமக்கருள்
தந்தா யெனப்பணி வோமே
மந்திர தந்திரம் ஒன்றுமிலா தெமை
பந்தனை கொண்டசெம் பாதா - என்றே (ஆன)

# 23. நாமாவளி

(1)

அருணாசல சிவரமணா அருணாசல குருரமணா
அருணாசல சிவரமணா அருணாசலனே
அருணாசல சிவரமணா அருணாசல குருரமணா
அருணாசல சிவரமணா அருணாசலனே

(2)

ஜெய ஜெய ரமணா - சிவசிவ ரமணா
ஹர ஹர ரமணா - குருபர ரமணா
சற்குரு ரமணா - ஜகத்குரு ரமணா
ஸ்ரீகுரு ரமணா - ஜெயகுரு ரமணா
பகவான் ரமணா - பாஹிமாம் ரமணா
அஹமஹ ரமணா - ஆத்மா ரமணா

(3)

ரமண நாம தேவதேவ - ரமண ஞான தேவதேவ
அருண சைல னேம ஹேச - வா வா வா
அருண மாம லையெழுந்த - அரஹ ராகு காமுகுந்த
ரமண சகுண நாத னேநீ - வா வா வா

(4)

அருணா சலசிவ நாம ரஸிககுரு
பரரம ணேசா நமோ நமோ
ரமணார்ப் பணமனரம்ய சுகாசிவ
அருணா சலாய நமோ நமோ

(5)

அருணாசல ரமணாய நமோநம அருணாசல ரமணா
அருணாசல ரமணாய நமோநம அருணாசல ரமணா

(6)

இராகம் : அமீர் கல்யாணி தாளம் : ஆதி

அருணசலா ரமணநமஓம் ரமணநமோ அருணேச்வராய
கருணநிதே ரமணநமஓம் குருவேகதி ரமணநம ஓம்.

(7)

சிவசிவ ரமண அருண சலனே
அருண சலசிவ குருவே ரமண
பகவான் ரமண சற்குரு தேவா
ஓம்நமோ பகவதே ஸ்ரீரம ணய

(8)

நமோ பகவதே ஸ்ரீரம ணய
நாம ஜபப்ரிய பக்த ஸஹாய - ஓம்

(நமோ)

(9)

('ஜெய கணேச பாஹிமாம்'' என்ற மெட்டு)

ரமண தேவ ரமண தேவ ரமண தேவ பாஹிமாம்
ரமண தேவ ரமண தேவ ரமண தேவ ரக்ஷமாம்

(10)

('சரஸ்வதி பூர்ண கடாக்ஷ வீக்ஷணி வரப்ரஸாதிணி பாலயமாம்' என்ற மெட்டு)

அருண சலவக நாயக ஞேடும பேதசொ ரூபா பாலயமாம்
ரமணே சாவெனு மன்ப ரகந்தொறு நர்த்தன ரமண பாலயமாம்

(11)

('ஹரே ராம ஹரே க்ருஷ்ண' என்ற மெட்டு)

ரமணதேவ ரமணதேவ ரமணரமண ஹரே ஹரே
அருணசைல ரமணதேவ அருணசல ஹரேஹரே

(12)

அருணாசல அருணாசல அருணாசல ரமணா
ரமணேச்வர ரமணேச்வர வருணாசல ரமணா

(13)

இராகம் : கல்யாணி

அருணாசல அருணாசல அருணாசல ரமணா
அருணாசல அருணாசல அருணாசல ரமணா
(துரிதம்)
அருணாசல ரமணாகுரு - அருணாசல ரமணா
அருணாசல ரமணாசிவ - அருணாசல ரமணா

(14)

ரமண சற்குரு ரமண சற்குரு ரமண சற்குரு ரமணனே
ரமண சற்குரு ரமணசற்குரு ரமண சற்குரு நாதனே

(15)

ரமண ரமணகுரு ரமண ரமணகுரு ரமண ரமணகுருதேவ
ரமண ரமணகுரு ரமண ரமணகுரு ரமண ரமணகுருதேவ
அருண கிரிரமண அருண கிரிரமண அருணகிரிரமணதேவ
அருண கிரிரமண அருண கிரிரமண அருண கிரிரமணதேவ

(16)

அருணா சலசிவ ஸ்ரீரமணா அரஹர சிவசிவ குருரமணா
அதிகரு ணாகர சிவரமணா அஹநா யககுரு பரரமணா

(17)

அருணாசல ரமணா - சிவசிவ - அருணாசல ரமணா
அருணாசல ரமணா - ஹரஹர - அருணாசல ரமணா
-ரமணா (அரு)

(18)

ஸ்ரீ ரமணா ஓம் சிவரமணா அருணாசலசிவ குருரமணா

(19)

('ரகுபதி ராகவ ராஜாராம்' என்ற மெட்டு)

ஜெயஜெய அருணா சலரமணா
ஜெயஜெய சற்குரு ஸ்ரீரமணா

(20)

ஜெய அருணாசல ஜெய ரமணாசிவ
ஜெய அருணாசல ஸ்ரீரமணா

(21)

ஜெய ரமணாகுரு ஸ்ரீரமணா - திரு
அருணாசலசிவ னே ரமணா

(22)

ரமண மஹாகுரு நாதா - ஞான மஹாநிதி தாதா
அருணா சலசிவ ப்ரேம - ஹரஹர - அற்புத சத்திநி பாதா

(23)

ரமண ஞான தீபமே க்ருபாகரா
ரமண ஞான தீபமே க்ருபாகரா
ரமண ஞான விமல ஸ்கந்த னேசிவா ஹரா
ராதா கோபி என்மனோஹரா (ரமண)

(24)

அவனியில் அழகிய திருநாமம் - ரமண
அருணா சலசிவ குருநாமம்

(25)

அண்ணா மலைச்சாரலே - ரமணக்
கண்ணன் அருட்கோகுலம் - இதய (அண்ணா)

(26)

நாதா ரமண அருணுசல
பாதா ரமண பரனேசிவ (a) குரு(b) சிவ (நாதா)

பாத பத்ம தரிசனமே
பரம பாக்யம் நினே மனமே (நாதா)

(27)

அருணுசலா அருணுசலா அருணுசலா - ரமணு
அருணுசலா அருணுசலா அருணுசலா - ரமணு

(28)

அருணு சலசிவ அருணு சலசிவ
ரமண பராத்பர ரமண பராத்பர

(29)

சிவசிவ - ரமண நாம தேவா
ஹரஹர - குரும ஹானு பாவா

(30)

சச்சிதானந்தம் ஜகத்குரு ரமணம்
தக்ஷிணு மூர்த்தம் ஹரோ ஹரோ

(31)

சற்குரு ரமணு னந்த விஹாசி
சற்குரு நாதா நமோ ஸ்துதே
சற்குரு ஸ்ரீஅரு ணுசல ரமணு
சற்குரு தேவா நமோ ஸ்துதே

---

# 24. அருணாசலரமண கோஷம்

(1)

ஸ்ரீ அருணா சலஸ்மரணம் - சிவசிவ அருணாசலா
ஸ்ரீ சற்குரு ரமணஸ்மரணம் - நமோஅருணா சலரமணா
அருணா சலரமணா - அரஹர அருணாசலா
அருணாசல ரமணனுக்கு - அரஹரோ ஹரா

(2)

நமோ அருணாசல ரமணா - ஹரஹர மஹாதேவா
ஸ்ரீ சத்குரு நாம ஸ்மரணம் - நமோ அருணாசல ரமணாய
அருணாசலசிவ அருணாசலசிவ - அருணாசலசிவ அருணாசலசிவ
ஸ்ரீ அருணாசல ரமணனுக்கு - ஜே !

# 25. ஜெயஹே ரமணா

("ஜன கன மன அதிநாயக" என்ற மெட்டு)

ஜெயஜெய அருணா சலசிவ ரமணா-ஜெயஜெய சற்குரு தேவா

1. நா-ராயண ப்ரஹ்ம மஹேச்வர ரூபா ரமணா யநமோ நமঃ
ப-ராபர ஸ்ரீஅரு ணாசல குமரா பகவான் ரமணா நமঃ
மஹரிஷி ரமணா வந்தே - மஹாத்மா ரமணா வந்தே-
வந்தே சற்குரு தேவா
ஜெயஜெய அருணா சலசிவ ரமணா ஜெயஜெய சற்குரு தேவா
ஜெயஹே-ஜெயஹே-ஜெயஹே,-ஜெயஜெய ஜெயஜெய ஹே
ஜெயஜெய சற்குரு தேவா.

2. அஹமஹ ஸ்மரண த்யான கம்யஅரு ணேச தெய்வரமணேசா
அ-ஞாத ரக்ஷக அகண்ட மோனகன ஆத்மஜ்ஞானசுவி காசா
ஓம்-பகவான் ரமணா பாஹி-பக-வதேஸ்ரீ ரமணா பாஹி-
பாஹி சற்குரு தேவா
ஜெயஜெய ஜிதேந்த்ரிய நாயக ரமணா ஜெயஜெய சற்குரு
தேவா (ஜெயஹே ...)

3. அமலசு கமோன அசல சிதாகார அஹஸாஹஸநட ராஜா
அபய கரதான வபரிமி தஞான வருணு முதமுக தேஜா
குருரமணுய நமஸ்தே-ஸ்ரீ-குருபர தேவந மஸ்தே
ந-மஸ்தே சற்குரு தேவா
ஜெயஜெய ஜெயஹே ஜெயஸ்ரீ ரமணு-ஜெயஜெய சற்குரு
தேவா (ஜெயஹே....)

4. சிந்து வங்க குஜ ராத்தி சுதேச்யவி தேச்ய ஜஞச்ரய பாதா
ஹிந்து முஸ்லிம் ஜின யூத கிறிஸ்துவ பௌத்த ஸர்வமதபோதா
ஓம்-லோக மஹா குரு தேவா க்ருபா-லோசன ஞானசு பாவா
ஓம்நமோ சற்குரு தேவா
ஜனமன மோஹன குருபர ரமணு ஜெயஜெய சற்குரு
தேவா (ஜெயஹே...)

# VII. தனிப் பாக்கள்

## 1. என்ன உலகமடா ✱

இராகம் ៖ தேஷ் தாளம் ៖ ஆதி

1. என்ன உலகமடா - இவர்
இதய மிரங்கிலதே - அந்தோ
அன்னம் கரத்திலடா - நெஞ்சில்
அன்பு மறைந்ததடா - பக்தி
என்ன பயன்தரும் இரக்கமிலாமலே (என்ன)

2. கல்லி லிருந்த சிவன் - இதோ
கையேந்தி நிற்குதடா
இல்லையெனு திவர்க்கே - அன்னம்
ஈவது பூஜையடா
மெல்லி யல்பில்லாமல் வேஷமிகுந்ததே (என்ன)

✱ கீழூரில் கோவில் குருக்கள் உணவளிக்க மறுத்துவிட மேளக்காரர் தன் உணவை பகவானுக்குத் தந்த நிகழ்ச்சியைக் குறித்தது

## 2. பகவான் விரும்புவது எது?

(ஓர் கதை)

1. ''இத்தனைக் காலமா யீட்டிவைத் துக்காத்த
என்னுடை யசெல்வம் எல்லாமும்ஓர்
சத்திய மான துணைவரி டம்நம்பித்
தந்திட இன்றுநான் எண்ணுகின்றேன்''.

2. என்ற கணவனின் எண்ணத்தைக் கேட்டவன்
இல்லாலும் சொல்வாள் ''என்பதியே,
சென்றபல் லாண்டுக ளாக எனைமணம்
செய்து பழகித் தெரிந்தவரே,''

3. ''உங்க ளிடம்பொருள் அவ்வள வாகநான்
ஒன்றுமில் லையென்றே எண்ணிவந்தேன்;
தங்கமுங் காசும் இருந்தால் எனைநம்பித்
தந்திடு வீர்''என்றே கேட்டுக்கொண்டாள்.

4. ''உன்னை விடநம்பக் கூடிய வரிங்
கொருவரு மில்லையோ'' என்றுசொன்னான்
சொன்ன வுடனவன் சொந்த மகன்வந்து
சொல்லிடு வான், ''உயிர்த் தந்தையரே'',

5. நானு மிருக்கவே நற்பொருள் காத்திட
நம்பாமல் யாரைநீர் நம்புகின்றீர் ?
ஏன் அதை என்னிடம் தந்தாலென் ன?''வென்றே
ஏங்கிக்கை நீட்டி யிரந்துநின்றான்

6. இல்லையில்லை! உன்னைக் காட்டிலும் நம்புதற்
கின்னொரு பேரைநான் தேடிக்கொண்டே
செல்லுகின் றேன்''எனச் சென்றான்; இருவரும்
சேர்ந்தவ னைப்பின் தொடர்ந்தனரே.

7. துன்பத் திலேதன் னுயிரையும் ஈயும்
துணையொரு நண்பன் வழியில்வந்தான்
அன்புற் றடைந்திதைக் கூறவும், அன்னவன்
ஆவலோ டப்பொருள் நாடிச்சொல்வான்.

8. ''எப்பொழு தெப்படி என்னசெல் வத்தைநீர்
ஈட்டினீர்? யானும் அறிந்திலனே !
அப்படி ஏதும் இருந்தாலென் பால்தரா(து)
ஆரிடம் சென்று தருவீர்?''என்றான்

9. உற்றநண் பனுரை கேட்டும் அவன்பின்னும்
ஒவ்வாது வேறிடம் போகவெண்ணிச்
சற்று நடந்தனன்; மூவரும் பின்தொடர்ந்
தார்;அவர் செல்வழி தன்னிடையில்,

10. செல்வத்திற் கேவட்டிச் சேர்த்தளிக் கும்பண்ட
கச்செய லாளனீ தைத்தெரிந்தே
நல்வார்த்தை கூறித்தன் பண்டகத் தேவைக்க
நம்பும் படிச்சொல்லி நாடினனே.

11. நால்வ ரிடமுமே நம்பிக்கை யில்லாஇந்
நல்ல மனிதனின் செய்திகளைக்
கோல்புரி யும்நகர்க் கோமகன் கேட்டங்கே
கூப்பிட் டனுப்பினன் ஐவரையும்

12. வந்த மனிதனே மன்னவன் பார்த்து, ''நீர்
வைத்திருக் கும்செல்வம் யாது?சொல்வீர்;
எந்த வகையில் இருப்பவ ரைநம்பி
ஈந்திடு வீரோ, இயம்பு''மென்றான்.

13. ''ஆசையில் லாதவர் யாரோ, அவரிடம்
அன்றியென் செல்வம் அளிக்கமாட்டேன் !
ராசனே! நீரும்ஓர் ஆசையில் லீர்எனில்
நானும்என் செல்வத்தைச் சொல்வே''னென்றான் !

14. யோசித்த மன்னவன், ''ஆசை எனக்குண்டே !
உத்தரம் யாதிங் குரைப்ப''தென்ருன்
மாசற்ற மந்திரி மத்தியில் வந்தொரு
வார்த்தை யுரைப்பான்ஃ ''மனிதரே,நீர்,''

15. பேசிய செல்வம் ஏதாயினு மே, சரி;
பேசாமல் என்னுரை கேட்டிடுவீர் ;
**ஆசையில் லாதவர் அண்ணு மலேரம**
**ணண்டி! அவரிடம் போவம்**''என்ருன் !

16. மன்னவன், மந்திரி, மற்றவர் ஐவரும்
வந்துநின் ருர்மகான் சந்நிதியில்
தன்னே யடைந்தவர் தாய்தந்தை தெய்வமும்
தானென நிற்பவர் சாற்றுகின்ருர் ஃ-

17. ''என்ன பொருளே எடுத்துவந் தாயென்(று)
இயம்பிடு வாய்இவர்க் கென்னதிரில்,
அன்னவர் யாரும் விரும்பா விடிலதை
அன்புடன் யான்கொள்ள ஐயமில்லே !''

18. இப்படிச் சொல்லி யிருந்த மகரிஷி
யின்முன் னெழுந்தவன் சொல்லுகின்ருன்,
அப்படிச் சொல்லும் அதிசயத் தைக்கேட்க
ஆயிரம் மக்கள் திரண்டிருந்தார்.

19. **''காசொரு தம்பிடி கையிலில் லே;ஒரு**
**காணி நிலமுமென் பேரி லில்லே;**
**ஆசையாய் 'நான்என' தென்று வளர்த்தபேய்**
**ஆணவம் ஒன்றே அடைந்தபொருள்!''**

20. **''அற்புத மாயிவ் வகந்தையைப் போற்றி,''நான்**
**யார்?''என் றறியாமல் ஆசையுடன்**
**பற்பல சென்மமாய்ப் பண்ணிச்சேர்த் துவைத்த**
**பாபமூட் டைதான் படைத்தபொருள்!!''**

21. இந்தப் பொருளை எவரிடத் தேகொடுத்(து)
ஏகாந்தமாக இருப்பே''னென்முன்.
அந்தச்சொற் கேட்டு மனைவி மகன்பிறர்,
''ஐயையோ! மோசம் அடைந்துவிட்டோம்!''

22. ''காசு பணம்இவன் கண்டறி யானென்று
கண்டிருந் தும்ஏனோ நம்பிவந்தோம்?
நீசமும் பாவமும் தத்தம்செய் தால், சீசீ
நின்றிதைக் கொள்வதேன்? மாட்டோ'' மென்றார்!

23. **ஆயிரம் பொன்னை அளிப்பவ ருக்கும்நான்
ஆதர வாகேன்! அகந்தையைத்தந்
தாயெனில் உண்மையாய் தாங்குவேன் உன்னைநான்
சத்தியம்!** என்றனர் சற்குருவே.

24. மன்னவன் மந்திரி மற்றங் கிருந்த
மனைவி மகனும் மனிதர்களும்
''இன்னது பக்தி! இறைவன் கருணையும்
இன்னதென் றின்றே அறிந்தோ''மென்றார்!

---

## 3. அவரைக்கொடியே!

(சம்பாஷணை)

1. அன்பன் : அவரைக் கொடியே ! அவரைக்கொடியே !
ஆடி வதங்கி அசைவதுமேன்?
அவரைக்கொடி : கவலைப் படுகின்றேனே சுற்றிக்
கட்டிக் கொள்ளக் கொம்பின்றி

2. அன்பன் : உன்னை விதைத்தோன் நீபடுந் துயரை
உணர்வான் கொம்பொன் றூன்றிடுவான்
அ. கொடி : பின்னைக் கவலை யின்றி பிடித்தே
பின்னிப் படர்வேன்; ஆனால் கேள்;

3. அன்போ டென்னை வினவிய ஆருயிர்
அன்பா நானுனேக் கேட்கின்றேன்
என்போல் சோர்ந்து தளர்வுடன் வாடி
இருப்பது மேனே உன்முகமே?'

4. அன்பன் : உன்போல் நானும் உறுகோ டின்றி
உள்ள மெலிந்தேன்; உனைக்கேட்ட
என்போ லென்னைக் கேட்பா ரில்லை
என்னைப் படைத்தோன் எங்கேயோ?

5. காற்று லாடும் உன்மென் கொடியைக்
காணக் கண்ணீர் வருகிறதே.
ஏற்றோர் கொழுகொம் பிடுமுன் னெஜமான்
ஏனோ இன்னும் வந்திலனே?

6. அ. கொடி பற்றுக் கோடாய்ப் பரமனை நாடிப்
பாடிநீ வாடப் பார்த்திட நான்
சற்றுஞ் சகியேன்; தயவாம் பெருமான்
தானேன் இன்னும் சார்ந்திலனே?

7. அன்பன் : நீரில் லாமல் நீவாடு வதை
நினைக்க நெஞ்சம் துடிக்கிறதே;
மாரியுமில்லா நாளித றிந்தும்
வளர்ப்போன் நீர்ஏன் வார்த்திலனே?

8. அ. கொடி : இன்பச் செல்வன் இறைவனைக் காண
ஏங்கு முனைக்கண் டேங்குகின்றேன்.
உன்பற் றகலா உபாதி யறிந்தும்
உதவிக் கேனிறை வந்திலனே ?

9. அன்பன் : நட்டு வளர்த்தோன் உனக்கோர் கொம்பை
நாட்ட மறந்தால் போகட்டும்
கட்டிக் கொள்வாய் கொம்பிதை நானே
கையால் உன்பால் நடுகின்றேன்.

10. விதையை விதைத்தோன் உன்பால் நீரை
விடவே மறந்தால் போகட்டும்
அதனைப் பார்க்கச் சகியாதழும் நான்
அளிக்கும் நீரை அருந்திடுவாய்.

11. அ. கொடி : என்பா லிரக்கம் எய்திய அன்பா
இனிநான் பூகாய் பழமீவேன்;
உன்மே லீசன் அருள்செய் வதைஎன்
உயிர்வாழ் போழ்தே காண்பேனல்
பற்றுக்கோடும் நீரு மளித்தாய்
பகவா னிரங்கி உன்வாழ்வில்
பற்றுக் கோடாய்ப் பரமா னந்தப்
பழமா குவதைப் பார்ப்பேனே.

---

## 4. ரமணா! தாலேலோ!

1. அருள்திகழ் சுந்தரர் அழகம்மை தவவாழ்வு
விருக்ஷம திற்கனிந்த விண்மணி தாலேலோ
இருட்டினில் வாழுலகிற் கிரவியா யெழுந்தருளி
திருச்சுழி தனில்வந்த செல்வமே தாலேலோ

2. கூடற் பதியிற்சிவன் ஆடல் புரிந்தவாறே
குமரனாய் விளையாண்ட குருபரா தாலேலோ
தேடற் கரும்ஞான சித்தி பதினாறில்
சேர்ந்த சிவஞானச் செல்வமே தாலேலோ

3. அப்ப னருணாசலன் அழைப்பா லருணையடைந்
தற்புதத் தவமார்ந்த ஐயனே தாலேலோ
இப்புவி பணிந்தேத்த இன்னருட் செங்கோலால்
நற்புக ழுடனாண்ட ரமணனே தாலேலோ

4. குருமூர்த்தம் விரூபாக்ஷிக் குகையிலும் செம்பவளக்
குன்றிலும் தவமூன்றி நின்றவா தாலேலோ
திருவாக்குக் கடைக்கண்ணின் தீக்ஷையால் எமையெல்லாம்
சிவமாக்க வேயமார்ந்த சிங்கமே தாலேலோ

5. பெற்றதாய் இறுதிநாள் ப்ரஹ்மநிர் வாணமுறப்
பெருங்கரு ணைபுரிந்த அருந்தவா தாலேலோ
கற்றவர் கல்லாதார் கதியனை வரும்பெறக்
கமலந யனம்தந்த கடவுளே தாலேலோ

6. நானற எமையுண்டு ஞானக்க டலிலொன்றாய்
ரமித்திட வேயணைந்த ரமணனே தாலேலோ
வானவர்க் கும்விளங்கா வாய்மை எமக்கருளி
வந்தித யத்தமர்ந்த தந்தையே தாலேலோ

---

## வாழி விருத்தம்

வாழிஸ்ரீ ரமண ஜோதி வள்ளலே வாழி வாழி
வாழிநீ கால மூன்றின் வரையறை கடந்தோய் வாழி
வாழிநீ புவன கோடி வடிவெலாம் நிறைந்தோய் வாழி
வாழிநீ யூழி வெள்ளம் அதிற்கெடா வங்கம் வாழி.

வாழிஸ்ரீ ரமண ஞான வாரிதி வாழி வாழி
வாழிஸ்ரீ ரமண நாம மந்திரம் வாழி வாழி
வாழிஸ்ரீ ரமண மூர்த்தி வாழியென் பார்நீ டூழி
வாழிநீ எம்மைக் காக்கும் மகாகுரு ரமண வாழி.

ஓம் தத் ஸத்

ஸ்ரீ ரமணார்ப்பண மஸ்து.

---

# ஸ்ரீ ரமண கீதம்

## பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 72 | 15 | வீரூபா | விரூபா |
| 79 | 18 | ளென்கொல் | ளென்கொல் |
| 96 | 15 | மோருகுருவா | மோருருவா |
| 97 | 11 | நிஜமாய்ம்த் | நிஜமாய்த் |
| 97 | 13 | மேல | மேல் |
| 110 | 12 | பாராயா ? | பாராயோ ? |
| 122 | 10 | ணேரமணு | ணேரமணு |
| 126 | 17 | எதும் | ஏதும் |
| 145 | 11 | நன்றுநீ | நன்றுதீ |
| 162 | 2 | அவனே-கடவுளே | (நீக்கி அடிக்குறிப்பாக கொள்ளவும்) |
| 172 | 13 | நீ | (நீக்கவும்) |
| 189 | 7 | ளஞ்சளித் | ளஞ்சலளித் |
| 193 | 11 | லதுணர்ந்து | லதுணர்ந்தெ |
| 198 | 18 | அருளிடம் | அருளிடம |
| 201 | 18 | வுளரனே | வுளவுனே |
| 215 | 8 | பரம்பொருளே | பரம்பொருள் |
| 226 | 12 | என்னென்வோ | என்னென்னவோ |
| 228 | 10 | டுட்லுள் | டுடலுள் |
| 239 | 17 | நாத்தி | நாத்திக |
| 246 | 18 | தரவேண்டுமேமுன் | தரவேண்டுமுன் |
| 249 | 10 | தைஞலே | ஊதஞலே |
| 259 | 7 | ஜெஜெய | ஜெயஜெய |
| 271 | 7 | அருணசல | அருணசலா |
| 277 | 24 | றூன்றிடுவோன் | றூன்றிடுவான் |
| 280 | 7 | கல்லதார் | கல்லாதார் |

